# நீதி சூடாமணி

## மூலமும் உரையும்.



மதராஸ் ரிப்பன் பிரஸ் பதிப்பு,
நே. 20, ஸ்டேன்ஸ் ரோட்,
P. B. மதராஸ்.
இதன் விலை] 1938 [ரூபா 1—0—0

[illegible]ம்,

[illegible]கவிராயர் இயற்றிய

# இரங்கேசவெண்பா

என வழங்கும்

# நீதிசூடாமணி மூலமும்.

தமிழ்ப்பண்டிதர்.

ஸ்ரீமாந் - ம. மாணிக்கவாசகம் பிள்ளை

அவர்கள் ஆதாரமாய் எழுதிய

தெளிபொருள் விளக்க விரிவுரையும்.

---

மதராஸ் ரிப்பன் பிரஸ் பதிப்பு,

நெ. 20. ஸ்டேன்ஸ் ரோட். P. B. மதராஸ்.



இதன் விலை] 1938 [ரூபா 1—0—0

## நீதி சூடாமணியின்

# முகவுரை

இந்நூற்கு இரங்கேச வெண்பா என்னும் பெயர் இயைந் திருக்கின்றது. என்னினும், அரங்கேச வெண்பா என்பதே நன்னூல் விதிப்படி அமைந்த பெயராகும்; இது உலக வழக்கப்படி அமைந்ததென்று கொள்ளலாம்.

இதை ஆக்கியோர் சாந்தக்கவிராய ராவர். இவருடைய பிறப்பு, இறப்பு, குலம், குறி முதலியவைகள் ஒன்றும் தெரியாதாயினும், சிறப்புப் பாயிரத்தில், 'பிறைசைவரு சாந்தப் பெயரவன்' என்பதனாலே, இவர் ஊர் பிறைசை (பிறையாறு) என்பது நன்கு விளங்குகின்றது. இவரது வாக்குறுதி நயத்தால், இவரைச் சோமேசர் முதுமொழி வெண்பா ஆக்கியோராகிய ஆவடுதுறை ஆதினத்துச் சிவஞானமுனிவர்க்கு முன்னையோர் என்றே இயம்பலாம். இரங்கேசரைக் கடவுள் முன்னிலையாக வைத்துக் கூறியுள்ள இந் நூலைப்போலவே, சோமேசர் முதுமொழி வெண்பாவும் சோமேசரை முன்னிலைப்படுத்திக் கூறியிருக்கின்றது. ஆயினும், இந்தக் கால வரையறை கலகத்துக் கிடனும். ஆகையால், இனி இந்த நூலின் நயத்தை ஆராய்வாம்.

இதில் ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு குறள் வெண்பாவைப் பின்னடிகளாகக் கொண்டு, அதற் குகந்த புராணேதிகாச விஷயங்க ளடங்கிய ஈரடிகளை முன்னடிக ளாகக் கொண்ட நேரிசை வெண்பாவாக அமைந்து, இச் சிறந்த நூல் சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் முதலிய பத்தழகுகளோடு முடிந்திருக்கின்றது.

"மாயமாரீசன் மடிந்தான் கவுசிகன்தான்
எய்தவ முற்ருன் இராங்கேசா!— ஆயதனுல்
பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி யுறும்."

என்னும் இவ் வெண்பாவில், மூடர் நட்பினும் அறிஞர் பகையானது அநேக கோடி நன்மை தரும் என்பதை விளக்க, இவ் வாசிரியர் முறையே எடுத்துக்கொண்ட இராவண மாரீச நட்பும், வசிஷ்ட விசுவாமித்திர விரோதமும் அதியற்புதமானவைகள். இவ்வாறே, இதில் வரும் ஒவ்வொரு வெண்பாவும் வெகு நயமாய் அமைந்துள்ளது.

இத்தகைய நூலுக்குத் தெளிபொருள் விளக்கம் எழுதுவது எளிய காரியமன்று. ஆயினும், என்னுலானவரையில் முயன்று பழமை பாராட்டிப் பழையனவற்றை அடியோடு அகற்றிவிடாமலும், புதியனவற்றைச் சமயத்துக்குகந்தபடி அமைத்தும், பதவுரை, கருத்துரை, விசேடவுரைகளை விளக்கி எழுதி யிருக்கின்றேன். ஆங்காங்கு வரும் கதைகளையும் அளவாகச் சுருக்கி நயங்காட்டி எழுதி யிருக்கின்றேன். இத்தகைய கதைகள் மூலமாகப் பெரிய நீதிப்பொருள்களைச் சிறு பிள்ளைகளுக்கு எளிதில் போதிக்க எண்ணியிருக்கும் தற்போதைய கல்விமான்களுக்கு இந்நூல் பேருதவியா யிருக்குமென்று எண்ணுகிறேன்.

இந்நூலின் அருமை பெருமைகள் இதை வாங்கி வாசிப்போர்க்கே இனிது விளங்கும். ஆகையால், இதைக் கற்ருேரும் மற்ருேரும் கவனமாய்ப் போற்றுவார்களென்று நம்புகிறேன்.

☞ மாணிக்க வாசகன்.

# நீதி சூடாமணியின் விஷய அட்டவணை


| குறள் அதிகார எண் | திருக்குறள் அதிகாரம் | சரித்திர விவரம் | செய்யுள் முதற் குறிப்பு | பக்கம் |
|---|---|---|---|---|
| | கடவுள் வணக்கம் | | சீர்கொண்ட | 1 |
| | நூற் பெயர் | | சொற்றவதி | 2 |
| | அவை யடக்கம் | | பிறைசைவரு | 3 |
| 1 | கடவுள் வாழ்த்து | இரணியன் சரித்திரம் | சொன்னகம் | 5 |
| 2 | வான் சிறப்பு | உறையூர் அழிந்த சரித்திரம் | கொண்டலுறை | 6 |
| 3 | நீத்தார் பெருமை | அம்பரீடன் சரித்திரம் | மன்னன்மக | 8 |
| 4 | அறன்வலி யுறுத்தல் | இராமாயண பாரத சரித்திரங்கள் | கானக்குரங் | 10 |
| 5 | இல் வாழ்க்கை | கஞ்சனூர் ஆழ்வார் சரித்திரம் | பத்துடனான் | 11 |
| 6 | வாழ்க்கைத் துணைநலம் | நளாயினி சரித்திரம் | மாண்டவியர் | 13 |
| 7 | புதல்வரைப் பெறுதல் | பகீரதன் சரித்திரம் | வேதம் புகழ் | 15 |
| 8 | அன்புடைமை | ததிசி முனிவர் சரித்திரம் | வெற்பின் | 16 |
| 9 | விருந்தோம்பல் | இளையான் குடிமாற நாயனார் சரித்திரம் | தேசுபெறு | 18 |
| 10 | இனியவை கூறல் | தருமராஜன் சரித்திரம் | வன்சமர்நட் | 21 |
| 11 | செய்ந்நன்றி யறிதல் | கருடபகவான் சரித்திரம் | நாடிச் சிறை | 22 |
| 12 | நடுவு நிலைமை | புருஷாமிருக சரித்திரம் | வேதவீதி வீமா | 23 |
| 13 | அடக்க முடைமை | சிசுபாலன் சரித்திரம் | ஆன்ற சபையி | 25 |
| 14 | ஒழுக்க முடைமை | வான்மீகர் சரித்திரம் | வேடவான் | 26 |

| | | | | |
|---|---|---|---|---|
| 15 | பிறனில் விழையாமை | குபேரன் சரித்திரம் | அம்பிகையை | 27 |
| 16 | பொறையுடைமை | சேரன் சரித்திரம் | முந்துமரந் | 29 |
| 17 | அழுக்காறாமை | வெள்ளி சரித்திரம் | வெள்ளி கொடு | 30 |
| 18 | வெஃகாமை | புஷ்பகவிமான சரித்திரம் | முன்னோனை | 32 |
| 19 | புறங்கூறாமை | சகுனி சரித்திரம் | தக்கதுரி | 33 |
| 20 | பயனில சொல்லாமை | அரிச்சந்திரன் சரிதை | வேந்தைவதிட் | 34 |
| 21 | தீவினை யச்சம் | காளமுனி சரிதை | காளமுனி | 36 |
| 22 | ஒப்புர வறிதல் | நகுஷன் சரித்திரம் | அந்தணர் | 37 |
| 23 | ஈகை | கன்னன் சரித்திரம் | அங்கியுங் | 39 |
| 24 | புகழ் | முசுகுந்தன் சரிதை | மும்மையுலகு | 40 |
| 25 | அருளுடைமை | சிபிச்சக்கரவர்த்தி கதை | வஞ்சப்புறவி | 41 |
| 26 | புலான் மறுத்தல் | கன்மாட பாதன் கதை | அந்தணனை | 43 |
| 27 | தவம் | விசுவாமித்திரர் கதை | வேந்தந்தணர் | 45 |
| 28 | கூடா வொழுக்கம் | சுபத்திரை சரிதை | சந்யாசியாய் | 46 |
| 29 | கள்ளாமை | உத்தங்கன் சரிதை | உத்தங்க | 47 |
| 30 | வாய்மை | அரிச்சந்திரன் சரிதை | மூவரரிச் | 49 |
| 31 | வெகுளாமை | நிமிச்சக்கரவர்த்தி கதை | தாக்கிநிமி | 50 |
| 32 | இன்னா செய்யாமை | பரிச்சித்தரசன் கதை | பாந்தண்முனி | 51 |
| 33 | கொல்லாமை | கார்த்த வீரியார்ச்சுனன் கதை | சொல்லார்முனி | 53 |
| 34 | நிலையாமை | அட்டகோண மகாரிஷி கதை | அட்டகோண | 54 |
| 35 | துறவு | பட்டினத்துப் பிள்ளையார் கதை | பீடுபெறு | 56 |
| 36 | மெய்யுணர்தல் | சுகர் கதை | கெர்ப்பத்தி | 57 |

## நீதி சூடாமணியின் விஷய அட்டவணை



| குறள் அதிகார எண் | திருக்குறள் அதிகாரம் | சரித்திர விவரம் | செய்யுள் முதற் குறிப்பு | பக்கம் |
|---|---|---|---|---|
| 37 | அவா அறுத்தல் | பத்திரகிரியார் கதை | தேசஞ்சொல் | 59 |
| 38 | ஊழ் | சயிந்தவன் சரித்திரம் | சிந்துபதி | 60 |
| 39 | இறை மாட்சி | தசாதன் சரித்திரம் | ஒன்றிமறித் | 63 |
| 40 | கல்வி | அநுமார் சரித்திரம் | மல்லல்வியா | 64 |
| 41 | கல்லாமை | ஞானசம்பந்தர் சரித்திரம் | ஞானசம்பந்த | 66 |
| 42 | கேள்வி | பரிச்சித்தாசன் கதை | பாகவதங் | 68 |
| 43 | அறிவுடைமை | அர்ச்சுனன் கதை | சீதாவை | 69 |
| 44 | குற்றங் கடிதல் | பொற்கை மாறன் கதை | கையரிந்தான் | 70 |
| 45 | பெரியாரைத் துணைக் கோடல் | விசுவாமித்திரர் கதை | யோகமுனி | 72 |
| 46 | சிற்றினஞ் சேராமை | துரியோதனன் கதை | துன்னுசகுனி | 73 |
| 47 | தெரிந்து செயல் வகை | விபீஷணர் கதை | வீடணன் | 74 |
| 48 | வலி யறிதல் | பாசுராமன் சரிதை | பைதலென | 75 |
| 49 | கால மறிதல் | தருமராஜன் சரிதை | ஆண்டுபதின் | 77 |
| 50 | இடனறிதல் | சாாசந்தன் சரிதை | சார்ந்துபறை | 78 |
| 51 | தெரிந்து தெளிதல் | துரியோதனன் கதை | கன்னற்றெளி | 80 |
| 52 | தெரிந்து வினையாடல் | சல்லியன் கதை | சல்லியனை | 81 |
| 53 | சுற்றந் தழால் | அரக்கு மாளிகை கதை | வில்லுக் கதிபன் | 82 |
| 54 | பொச்சாவாமை | தக்கன் சரிதை [கதை | தண்ணார்சடை | 84 |
| 55 | செங்கோன்மை | காவிரி கரைகண்ட சோழன் | கண்கொண்டா | 86 |



ஆ

| | | | | |
|---|---|---|---|---|
| 56 | கொடுங்கோன்மை | திரிபுராதியர் கதை | துன்றுபுவி | 87 |
| 57 | வெருவந்த செய்யாமை | தாடகை மக்கள் கதை | தாடகைதன் | 89 |
| 58 | கண்ணோட்டம் | அங்கதன் தூதுபோன கதை | சொல்லுகவென் | 90 |
| 59 | ஒற்றாடல் | இந்திரசித்தன் நிகும்பலை யாகக் கதை | மேகநாதன் | 91 |
| 60 | ஊக்க முடைமை | விஜயன் பாசுபதாஸ்திரம் பெற்ற கதை | வீசுபுகழ் | 92 |
| 61 | மடியின்மை | கும்பகன்னன் கதை | துஞ்சுவிழி | 94 |
| 62 | ஆள்வினை யுடைமை | மார்க்கண்டன் சரிதை | செய்துசிவ | 95 |
| 63 | இடுக்க ணழியாமை | அரிச்சந்திரன் சரிதை | விற்றமனை | 96 |
| 64 | அமைச்சு | விபீஷணர் சரித்திரம் | மானவன்மால் | 98 |
| 65 | சொல் வன்மை | கிருமிகண்ட சோழன் கதை | சோழன்சிவாற் | 99 |
| 66 | வினைத் தூய்மை | கைகேசி கதை | தன்மகனைற் | 101 |
| 67 | வினைத் திட்பம் | அகத்தியர் சரிதை | ஆர்க்குங்கடனீ | 102 |
| 68 | வினைசெயல் வகை | பத்மாசுரன் கதை | தொட்டதெரி | 103 |
| 69 | தூது | அநுமார் கதை | அக்கன்முத | 104 |
| 70 | மன்னரைச் சேர்ந் தொழுகல் | குபேரன் கதை | அகூநிதிபோற் | 105 |
| 71 | குறிப்பறிதல் | இராமர் சிவவில் வளைத்த கதை | பார்வைகண் | 107 |
| 72 | அவை யறிதல் | விசுவகர்மன் கதை | தேவர்குழாத்தி | 108 |
| 73 | அவை யஞ்சாமை | திருவள்ளுவர் சரிதை | ஆன்றசங்கர் | 109 |
| 74 | நாடு | காவிரி கரைகண்ட சோழன் கதை | சீரிதாமென்ன | 111 |
| 75 | அரண் | இலங்கை யமைப்பின் கதை | சிந்தாவிடை | 112 |

## நீதி சூடாமணியின் விஷய அட்டவணை

| குறள் அதிகார எண் | திருக்குறள் அதிகாரம் | சரித்திர விவரம் | செய்யுள் முதற் குறிப்பு | பக்கம் |
|---|---|---|---|---|
| 76 | பொருள்செயல் வகை | அருச்சுனன் கதை | நட்டவனும் | 113 |
| 77 | படைமாட்சி | மூலபலச் சண்டை கதை | மொய்கொள் | 115 |
| 78 | படைச் செருக்கு | இந்திரசித்தன் கதை | மார்பத்தழுந்து | 116 |
| 79 | நட்பு | ஜனமேஜயன் கதை | வாசவன் தக்ஷன் | 117 |
| 80 | நட்பாராய்தல் | சுக்கிரீவன் சரிதை | தேசுபெறு | 118 |
| 81 | பழைமை | ஜடாயு கதை | தானவர்வேந் | 119 |
| 82 | தீநட்பு | மாரீசன் கதை | மாயமாரீசன் | 121 |
| 83 | கூடா நட்பு | திதி கதை | சார்ந்து திதி | 122 |
| 84 | பேதைமை | கஞ்சன் கதை | மாதா பிதாவை | 124 |
| 85 | புல்லறிவாண்மை | துரியோதனன் கதை | தாதைசிலை | 125 |
| 86 | இகல் | இரணியன் சரித்திரம் | சொன்ன நிறத் | 126 |
| 87 | பகைமாட்சி | சித்திரசேனன் கதை | சித்திர சேனன் | 128 |
| 88 | பகைத்திறந் தெரிதல் | விக்கிரமார்க்கன் கதை | தெவ்வையிளந் | 129 |
| 89 | உட்பகை | கூனி கதை | இவ்வுலகை | 130 |
| 90 | பெரியாரைப் பிழையாமை | வில்வலன் வாதாவி கதை | சொல்வல் | 132 |
| 91 | பெண்வழிச் சேரல் | சந்தநு மகாராஜன் சரிதை | சந்தநுவேந் | 133 |
| 92 | வரைவின் மகளிர் | தொண்டரடிப் பொடியாழ்வார் கதை | தொண்டரடி | 136 |
| 93 | கள்ளுண் ணாமை | சுக்கிரபகவான் கதை | தக்ககுரு | 138 |

| | | | | |
|---|---|---|---|---|
| 94 | சூது | தருமபுத்திரர் சரித்திரம் | தன்மர் துரி | 139 |
| 95 | மருந்து | அம்பரீடணன் கதை | அம்பருடன் | 140 |
| 96 | குடிமை | கன்னன் கதை | தூடணமா | 142 |
| 97 | மானம் | நளமகாராஜன் கதை | ஆகங் குறைந்து | 143 |
| 98 | பெருமை | வீட்டுமர் கதை | மண்பரவு | 144 |
| 99 | சான்ருண்மை | சாக்கிய நாயனுர் கதை | புத்தனெறி | 145 |
| 100 | பண்புடைமை | தருமராஜன் கதை | துன்பமுறுந் | 147 |
| 101 | நன்றியில் செல்வம் | குபேரன் சரிதை | செப்புமிருநிதி | 148 |
| 102 | நாணுடைமை | துரியோதனன் கதை | வாவி புகுந்த | 149 |
| 103 | குடிசெயல் வகை | கருடன் கதை | அன்னை யடிமை | 150 |
| 104 | உழவு | பலபத்திரர் கதை | வன்பாரதத் | 153 |
| 105 | நல்குரவு | பாஞ்சாலன் கதை | காவலனும் | 154 |
| 106 | இரவு | காண்டவதகனக் கதை | அங்கியும்பர் | 156 |
| 107 | இரவச்சம் | மாபலிச் சக்கரவர்த்தி கதை | சென்றுபலி | 157 |
| 108 | கயமை | திரௌபதி துகிலுரிவுக் கதை | தேனிருந்த | 159 |
| 109 | தகையணங் குறுத்தல் | அகலிகை சரிதை | சுந்தரமாமகலி | 161 |
| 110 | குறிப்பறிதல் | புதன் இளை சரிதை | மேதை விலோ | 162 |
| 111 | புணர்ச்சி மகிழ்தல் | துன்முகன் கதை | உம்பரிற் | 164 |
| 112 | நலம்புனைந் துரைத்தல் | திரிமூர்த்திகள் கதை | ஒண்கயற் | 166 |
| 113 | காதற் சிறப்புரைத்தல் | பாற்கடல் கடைந்த கதை | சேர்ந்து | 167 |
| 114 | நாணுத்துறவுரைத்தல் | கீசகன் கதை | கீசகன்பாஞ்சா | 168 |
| 115 | அலரறிவுறுத்தல் | கௌதமர் கதை | நீந்துகடன் | 169 |
| 116 | பிரிவாற்றுமை | கவுசிகை சரித்திரம் | தன்பதியின் | 171 |

## நீதி சூடாமணியின் விஷய அட்டவணை

| குறள் அதிகார எண் | திருக்குறள் அதிகாரம் | சரித்திர விவரம் | செய்யுள் முதற் குறிப்பு | பக்கம் |
|---|---|---|---|---|
| 117 | படர்மெலிந் திரங்கல் | திருமகள் கதை | குன்றெடுத்தான் | 172 |
| 118 | கண்விதுப் பழிதல் | ஊர்வசி கதை | காதலருச்சுன | 173 |
| 119 | பசப்புறு பருவரல் | அகலிகை கதை | மன்னுமகவி | 175 |
| 120 | தனிப்படர் மிகுதி | அக்கினி சுவாகா கதை | தக்கசுவாகா | 176 |
| 121 | நினைந்தவர் புலம்பல் | சுந்தோபசுந்தர் கதை | சுந்தோப | 178 |
| 122 | கனவுநிலை யுரைத்தல் | உஷை கதை | செய்தவஞ்சேர் | 179 |
| 123 | பொழுதுகண் டிரங்கல் | சலர்க்கரை கதை | காக்கும்பதி | 181 |
| 124 | உறுப்பு நலனழிதல் | பார்வதி கதை | மங்கையுமை | 182 |
| 125 | நெஞ்சொடு கிளத்தல் | இரதி கதை | முன்னமிரதி | 183 |
| 126 | நிறை அழிதல் | பின்னைப் பிராட்டி கதை | பின்னைக்கினிய | 185 |
| 127 | அவர்வயின் விதும்பல் | உருக்குமணி கதை | வஞ்சியுருக்கு | 186 |
| 128 | குறிப்பறி வுறுத்தல் | வள்ளியம்மை கதை | செட்டிவள்ளி | 187 |
| 129 | புணர்ச்சி விதும்பல் | தமயந்தி கதை | காந்தன்றகி | 188 |
| 130 | நெஞ்சொடு புலத்தல் | காங்கேயர் கதை | காங்கையர்மீ | 189 |
| 131 | புலவி | திருநீலகண்ட நாயனார் கதை | அன்பர்திருநீல | 190 |
| 132 | புலவி நுணுக்கம் | நளாயினி கதை | சேர்ந்துமணஞ் | 191 |
| 133 | ஊடலுவகை | சத்தியபாமை கதை | சத்தியபா | 193 |

ஸ்ரீ

ஸ்ரீ ராமஜயம்

இரங்கேச வெண்பா என வழங்கும்

# நீதி சூடாமணி

## மூலமும் உரையும்

[கடவுள் வணக்கம்]

சீர்கொண்ட காவிரிசூழ் தென்னரங்கத் தெம்பிரான்
பார்கொண்ட தாளைப் பரவியே—யேர்கொண்டே
யோங்குபுகழ் வள்ளுவனு ரோதுகுறண் மூதுரையாப்
பாங்குபெறச் சொல்வேன் பரிந்து.

(பதவுரை) சீர் கொண்ட - சிறப்புப் பொருந்திய, காவிரி சூழ் - காவேரியாறு சூழ்ந்த, தென் அரங்கத்து எம்பிரான் - அழகு பொருந்திய திருவரங்கம் என்னும் பெரிய கோயிலில் எழுந்தருளியுள்ள எமது தலைவராகிய அரங்கநாதருடைய, பார் கொண்ட தாளை - உலகளந்த திருவடிகளை, பரவி - துதித்து (வணங்கி), ஏர் கொண்டு - அழகு பொருந்தி, ஓங்கு புகழ் வள்ளுவனார் - விளங்குகின்ற அழகையுடைய திருவள்ளுவ நாயனார், ஓது குறள் முதுமை உரை ஆக - திருவாய் மலர்ந்தருளிய திருக்குறட் பாக்கள் (செய்யுள்தோறும்) பழமொழியாக வர, பாங்கு பெற - ஒழுங்காக, பரிந்து சொல்வேன் - ஆசையோடு சொல்லத் தொடங்கினேன்.

(கருத்துரை) ஸ்ரீ ரங்கநாதருடைய திருவடிகளை வணங்கி, திருக்குறட்பா, செய்யுள்தோறும் வரும்படி நான் இந் நூலைப் பாடத் தொடங்கினேன்.

(விசேடவுரை) 'சீர்' என்று எடுத்துக்கொண்டதனால் மங்கல மொழி வந்தது காண்க. "சோழநாடு சோறுடைத்து" என்பது தோன்ற, 'சீர் கொண்ட காவிரி' என்றார். கொள்ளிடத்திற்கும் காவிரிக்கும் இடையில் ஒரு தீவுபோலிருப்பதால் 'சூழ் தென்னரங்கம்' என்றார். எம்பிரான் பள்ளிகொண்டிருக்கும் பேரெழில் நோக்கித் 'தென்னரங்கம்' என்றதெனக. திரிவிக்கிரமாவதார காலத்தில் இப் பூவுலகத்தை ஓரடியால் அளந்தமையால் 'பார்கொண்ட தாள்' என்று பாடினார். 'பாவியே' என்பதிலும் 'ஏர் கொண்டே' என்பதிலும் உள்ள ஏகாரங்கள் அசைநிலைகள். 'ஏர் கொண்டு' என்பதற்குக் 'கல்வியழகு கொண்டு' என்றேனும், 'மனையறம் நடத்திய மாண்பு கொண்டு' என்றேனும் உரை விரித்துக் கொள்க. ஓங்கு புகழ்: வினைத்தொகை. 'வள்ளுவனார்' என்பதில் 'ஆர்' விகுதி "சேந்தனார்" என்புழிப்போல மரியாதைப் பன்மையையும் தெய்விகத் தன்மையையும் விளக்க வந்தது காண்க. முதுமை + உரை = மூதுரை; பண்புச் சூத்திர விதியால் ஈறு போய், ஆதி நீண்டது. 'நான் (இந்நூலைச்) சொல்வேன்' என்று செயப்படுபொருள் வருவித் துரைத்துக் கொள்க. (க)

[நூற் பெயர்]

சொற்ற வதிகாரந் தோறு மொருகுறளில்
உற்ற பொருளுக் குதாரணமா—முற்றுகதை
யானில வண்ண னடிபரவ லாலிந்நூல்
மாநீதி சூடா மணி.

(ப - ரை) சொற்ற அதிகாரம் தோறும்-திருவள்ளுவர் திருக்குறளில் எடுத்துச் சொல்லியுள்ள ஒவ்வோர் அதிகாரத்திலும்

உள்ள, ஒரு குறளில் - ஒரு குறள் வெண்பாவில், உற்ற பொருளுக்கு-பொருந்தியுள்ள விஷயத்திற்கு, உதாரணம் ஆக - எடுத்துக் காட்டாக, முற்று கதையால் - முடிகின்ற கதையினுல், நீல வண்ணன் அடி பரவலால் - நீலமேக நிறமுடையவனுகிய அரங்கநாதனுடைய திருவடிகளைத் துதித்தலால், இ நுல்-இந்த நூலானது, மா நீதி சூடாமணி - சிறந்த நீதி சூடாமணி என்று பெயர் பெறும்.

(க - ரை) நீதி நூலாகிய திருக்குறளை விளக்கலால், இது நீதிசூடாமணி என்று பெயர் பெறும்.

(வி - ரை) 'சொற்ற' என்பதில் சொல் என்பதூஉம் மங்கல மொழியாவது காண்க. 'இரங்கேசா' என்று இரண்டாம் அடிதோறும் மூன்ருஞ் சீரில் முடிவதால் 'நீல வண்ணனடி பரவலால்' என்ருர். திருக்குறளில் ஒவ்வோ ரதிகாரத்திலும் ஒவ்வொரு குறளாகத் தேர்ந் தெடுத்துக் கதை மூலமாக அதை விளக்குவதால், 'உற்ற பொருளுக் குதாரணமா முற்றுகதை' என்ருர். செந்நாப் போதார் அருளிய பெருநீதி நூலாகிய திருக்குறளை விளக்குங் கருவிநூலா யிருப்பதால் இதனை 'மாநீதி சூடாமணி' என்ருர். இதனுல் பாட்டுடைத் தலைவன் பெயரும், நூற் பெயரும் விளங்கினமை காண்க.

[அவை யடக்கம்]

பிறைசைவரு சாந்தப் பெயரவன்சொல் வெண்பா
குறையுளது நீக்கிக் குறையா—நிறைமொழியாச்
சொற்றமிழோர் கொள்வர் சுடரோனுல் வெண்பிறைதான்
உற்றமதி யாவதனை யோர்ந்து.

(ப - ரை) வெண்மை பிறை - வெள்ளிய மூன்ரும் பிறையானது, சுடரோனுல்-சூரியனுல், உற்ற மதி ஆவதனை ஓர்ந்து-பதி

ஞாறு கலைகளும் பொருந்திய முழுமதியாம் ஒளி வீசுவதை ஆராய்ந் தறிந்து, பிறைசை வரு சாந்தம் பெயரவன்-பிறைசையாம் பதியில் அவதரித்த சாந்தக் கவிராயர் என்னும் பெயரையுடைய பெரி யோன், சொல் வெண்பா - பாடின இந்த இராமேச வெண்பா வில், உள்ளது குறை நீக்கி - உள்ளதாகிய குற்றங்களை விலக்கி, குறையாத நிறை மொழி ஆக - (அவைகளைக்) குறையாத அழகு நிறைந்த சொற்களாக, சொல் தமிழோர் கொள்வர்-புகழ் மிகுந்த தமிழ்ப் புலவர்கள் இதிலுள்ள குறை மொழியையும் நிறை மொழி யாக் கொள்வர்.

(வி - ரை) 'பிறைசைவரு சாந்தப் பெயரவன்' என்றதனால் நூலியற்றினார் இடமும் பெயரும் வெளியாயினமை காண்க. சொல் வெண்பா: வினைத்தொகை. உளது குறை என்பது 'குறை உளது' என்று இலக்கணப் போலியாக வந்தது. குறையா: ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மொழியாக என்பது 'மொழி யா' என வந்தது கடைக்குறை. 'சொல்' என்பது புகழ். 'சுடரோ னால் வெண்பிறைதான்' உற்ற மதியாவது' என்பது உவமானம். 'சுடரோன்' மூதுணர்ந்த தமிழ்ப் புலவர்க்கும், 'வெண்பிறை' இந் நூலிலுள்ள குறைமொழிக்கும், 'உற்றமதி' இந்நூலை மதிக்கும் அப் புலவர் மதியால் நிறை மொழிக்கும் உவமானமாயினமை காண்க. 'வெண்பிறைதான்' என்பதில் 'தான்' என்பது அசைநிலை; அன்றி, 'வெண்பிறையே' என்று பொருள் கொண்டு, 'தான்' என்பதைத் தேற்றப் பொருள் தரும் இடைச்சொல்லாகவுங் கொள்ளலாம். ()

---

# நூல்

## அறத்துப்பால்

[கடவுள் வாழ்த்து]

1. சொன்னகம்பத் தேமடங்கல் தோன்றுதலா லன்பருளத்
தின்னமுத மாகு மிரங்கேசா!—மன்னும்
அகர முதல எழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(பதவுரை) அன்பர் உள்ளத்து இனிமை அமுதம் ஆகும் - பத்தர்களுடைய மனத்தில் இனிக்கும் இனிய அமுதம் போன்ற கடவுளே!, இரங்கேசா - அரங்காநாதனென்னும் திருநாமமுடைய கடவுளே!, சொன்ன கம்பத்து ஏ-பிரகலாதன் சொன்ன தூணில், மடங்கல் தோன்றுதலால் - நரசிம்மாவதார சொரூபியாய் நீ அவதரித்தபடியால், மன்னும் எழுத்து எல்லாம் - உலகத்தில் நிலை பெற்ற எல்லா எழுத்துக்களும், அகர முதல - அகாத்தை முதலாக உடையன (போல), உலகு - இந்த உலகமானது, ஆதி பகவன் முதல் து ஏ - ஆதிபகவனாகிய கடவுளையே முதலாகவுடையதென்பது (விளங்குகின்றது).

(கருத்துரை) உலகம், எங்கும் நிறைந்த கடவுளை முதலாக உடையது.

(விசேடவுரை) 'சொன்ன' என்பதில் சொல் என்பதூஉம் மங்கல மொழியாவது காண்க. 'சொன்ன' என்பதற்கு 'இதில் பரமாத்மா இருப்பானா என்று இரணியன் சுட்டிக்காட்டிச் சொன்ன' எனினுமாம். ஏகாரம்: அசைநிலை; பின்னையது தேற்றம். முதல் ஈரடி: உவமானம்; பின் ஈரடி உவமேயம். முன் ஈரடி, பின்

ஈரடியை எடுத்து நிறுத்துகின்றதால் இதுவுமோர் உத்தி. 'அன்பர் உள்ளத்து இன்னமுதம்' என்பதற்கு 'அன்பர்கள் உள்ளமாகிய பாலாழியிற் றோன்றும் பாமாமிர்தம்' என்றும், 'அன்பர்கள் உள்ளமாகிய தாமரையில் ஊறும் இனிய தேன் போன்ற அமுதம்' என்றும் கொள்ளலாம். 'இரங்கேசா' என்பது கடவுண் முன்னிலே. 'மன்னும் எழுத்தெல்லாம்' என்பதற்குத் 'தமிழ் போன்ற ஒரு மொழி (பாடை)யில் உள்ள பல்லெழுத்துக்களும்' என்ருவது, 'உலகத்தில் நிலைபெற்றுள்ள பல்வேறு மொழிகளும்' என்ருவது கொள்க. அகர ஒலிக்குக் காரணமாயுள்ள அங்காத்தலின்றி வேறெந்த எழுத்தும் ஒலிக்காதாகையால் அகாம் எல்லா எழுத்துக்களிலும் நாத மாத்திரையா னடங்கி மறைந்திருப்பது காண்க.

[சூடாமணி நிகண்டு]

"பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்"

என்பதனுல், 'ஆதி பகவன்' என்பதை 'ஆதியாகிய கடவுள்' என்று பொதுப்பட உரை கூறினும். ஆயினும், இங்கே 'இரங்கேசா' என்பதனுல் 'மாயோன்' என்று கொள்க. 'முதற்று' என்பதை முதன்மை+து எனப் பிரித்து, உலகு என்பதற்குப் பயனிலையாகிய குறிப்பு வினைமுற்ருகக் கொள்க.

[வான் சிறப்பு]

2. கோண்டலுறை யூர்கச்சிக் கோநகரின் செய்குணத்தால்
எண்டிசையும் போற்று மிரங்கேசா!—மண்டிக்
கொடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் ருங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை.

(ப - ரை) எட்டு திசையும் போற்றும் இரங்கேசா - கிழக்கு முதலிய எட்டுத் திக்கில் உள்ளவர்களும் வந்து வணங்கித் துதிக்கின்ற திருவரங்கநாதக் கடவுளே!, கொண்டல் உறையூர் கச்சி

கோ நகரில் - மேகந் தவழும் உறையூரிலும் சிறந்த காஞ்சிபுரத்தி லும், செய் குணத்தால்-சிவன் செயலின் விசேடத்தால் (முறை யே மண்மாரியும் பொன்மாரியும் பெய்து தீமையும் நன்மையும் நேரிட்டன; இதனுல்) மண்டி - நெருங்கி (மிதமிஞ்சிப் பெய்து), கெடுப்பதும்-உலகத்துயிர்களைக் கெடுத்துவிடுவதும், கெட்டார்க்கு- அப்படிக் கெட்டவர்களுக்கு, சார்வு ஆய் - அநுகூலமாய், ஆங்கே- முன் கெடுத்தது போலவே, எடுப்பதும் - (அளவாய்ப் பெய்து) காப்பதும், எல்லாம் மழை - இவைகளை யெல்லாம் செய்ய வல்லது மழையேயாகும் (என்பது விளங்குகின்றது).

(க ரை) மழை ஆக்கவும் வல்லது, அழிக்கவும் வல்லது.

(வி - ரை) கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடகிழக்கு, வடமேற்கு ஆகிய திக்குகளை 'எண் டிசை' என்ருர். உறையூர்-சோழராஜதானிகளில் ஒன்று; திரிசிர புரத்திற் சேர்ந்தது. காஞ்சி, கஞ்சி யென்று குறுகி, 'கச்சி' என்று வலிக்கும்வழி வலித்தது. நகரங்களிற் சிறந்தது காஞ்சி யென்பது தோன்ற 'கோ நகரம்' என்ருர்; சோழராஜதானிகளில் ஒன்றென் பதனுலும் அங்ஙனங் கூறினுர் என்னலாம். செய்குணம்: வினைத் தொகை. திருவரங்கம் பெரியகோயில் ஸ்ரீவைணவத் தாயகப் பதி யாகையால் 'எண்டிசையும் போற்றும்' என்ருர். அளபெடை யிரண் டும் இன்னிசைகள். திரிசிராப்புராணம் அல்லது சேவ்வந்திப்புரா ணத்தில் உறையூ ரழிந்த சருக்கத்தில் கூறியுள்ள ஒரு சாமம் மண்- மாரி பெய்து அவ்வூ ரழிந்தமையே இங்குக் குறித்திருப்பது.

"கேடு வரூஉம் பின்னே, மதி கெட்டுவரூஉம் முன்னே"

என்றபடி அவ்வூர் அரசன் கொடுங்கோன்மையால்,

"அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்"

என்றபடி குடிகள் ஒழுக்கங் குன்றினமையால் சேவ்வந்தி நாதர் செயலால் மண்மாரி பெய்து அவ்வூரை அழித்து மண் மேடாக்கியது. இது மழை பெய்து கெடுத்ததற்கு உவமானம்.

காஞ்சியிலும் இப்படியே பஞ்சம் நேரிட்டு வருந்திய காலத்தில் ஒரு குழந்தையின் சிவபக்தி காரணமாக ஒரு முகூர்த்த காலம் பொன்மாரி பெய்து அவ் ஊரைக் காத்தது. இது மழை பெய்து எடுத்ததற்கு உவமானம். முன் ஈரடி, பின் ஈரடிக்கு முதற் செய்யுளிற் போலவே உவமானமாயினமை காண்க. இனி இப் படிச் செய்யுள்தோறும் வருவதை உய்த்துணர்ந்துகொள்க.

### [நீத்தார் பெருமை]

3. மன்னன்மக முங்காதி மைந்தன் றனையடைந்தோன்
இன்னுயிருங் காத்தான் இரங்கேசா!—சொன்னால்
ஊனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, காதி மைந்தன் - விசுவாமித்திர முனிவர், மன்னன் மகமும்-அம்பரீட மகாராஜனுடைய நரமேதயாகத்தையும், தன்னை அடைந்தோன் இனிமை உயிரும் - தன்னை அடைக்கலம் அடைந்த தன்னுடைய தமக்கை மகனாகிய சுனசிபனுடைய இனிய உயிரையும், காத்தான் - முற்காலத்தில் அழியாமற் காப்பாற்றினார். (இதனால்) சொன்னால் - எடுத்துப் பேசினால், ஊன் என்னும் தோட்டியான் - அறிவென்னும் அங்குசத்தினால், ஒன்று ஐந்தும் காப்பான் - ஐம்புலன்களாகிய (யானைகளை) அடக்கி யாள்பவன், வரன் என்னும் வைப்புக்கு - பிறர்க்கு வழங்கும் வரங்களென்கிற இருப்புக்கு, ஒரு வித்து - பிறப்பிடமாவான் (என்பது விளங்குகின்றது).

(க - ரை) முற்றத் துறந்த முனிவரால் முடியாத காரியம் இல்லை.

(வி - ரை) அம்பரீடமன்னன் நரமேதஞ் செய்ய எண்ணினன். ஆகையால், அதற்காக ஓர் வேதிய மைந்தனை நாடிச் சென்று பல விடத்திலுந் தேடித் திரிந்து வாடி வனத்தில் வந்து, விசுவாமித்திருடைய தமக்கை கௌசிகியின் கணவராகிய இரிசிக முனிவரைக் கண்டு தன் எண்ணத்தை வெளியிட்டான். அவருக்கு மைந்தர் மூவர். மூவரில் மூத்தவன்மேல் தந்தைக்கு அன்பு அதிகம்; கடைசி மைந்தன்மேல் தாய்க்கு அன்பு அதிகம். ஆகையால், இரண்டாமவனை அம் முனிவர் அம்பரீடனுக்குக் கொடுத்து, அதற்காகப் பொருளும் பெற்றுக்கொண்டார். கணவன் விரும்பியபடி மனைவியும் உடன்பட்டதால், தாய் தந்தையர் விரும்பியபடி மைந்தன் உடன்பட்டு அம்பரீடனுடைய தேர்மேல் ஏறிக்கொண்டு அவனோடு சென்றான். இடைவழியில் அம்பரீஷன், பகற்கடன் நிறைவேற்ற வனத்தில் அங்கோரிடத்தில் தேரை நிறுத்தித் தங்கினன். அவனோடு சென்ற சிறுவனும், தன் கடனை முடிக்க அங்கோரிடத்திற் சென்றபோது, தன் அம்மானாகிய விசுவாமித்திர முனிவரைக் கண்டு வணங்கி, அங்குத் தான் வந்த வரலாற்றை விளங்க வுரைத்தான், அது கேட்ட முனிவர், அச் சிறுவனுடைய நற்குணத்தை வியந்து, "மருகனே! அஞ்சாதே! பெற்றோரிடத்தில் உனக்குள்ள பத்திக்கும் கீழ்ப்படிதலுக்கும் நான் மெத்த மகிழ்கின்றேன். யாகத்தில் உன் உயிருக்குக் கெடுதி ஒன்றும் வராது. யாகமும் நரமேதமாகவே முடியும். இந்தா! இந்த இரு மந்திரங்களையும் பாடம் பண்ணிக்கொள்! யூபத்தம்பத்தில் உன்னை யவர்கள் கட்டி மந்திராகுதி கொடுப்பார்கள். அதுமுதல் நீயும் இந்த இரு மந்திரங்களையும் மாறி மாறி விடாமல் செபித்துக்கொண்டிரு!" என்று சொல்லிக் கொடுத்து அனுப்பினர். அவன் அப்படியே சென்று அம் மந்திரோச்சாடணத்தால் உயிர் தப்பிப் பிழைத்தான்; நரமேதமும்

நிறைவேறிற்று. இந்த இராமாயணக் கதையே இங்குக் குறித்திருப்பது. காதிமன்னனுக்குக் கௌசிகி யென்றொரு மகளும், கௌசிகன் என்றொரு மகனும் இருந்தமை இராமாயணத்தால் அறியலாம். இந்தக் கௌசிகரே விசுவாமித்திரர் என்னுங் காரணப் பெயர் பெற்றார். 'ஊன், வான்' என்பன ஊம், வாம் என்பவைகளின் போலிகள். 'தோட்டியான்: மூன்றும் வேற்றுமைக் கருவிப்பொருளது. இதிலுள்ள அணிகள் கவனிக்கற்பாலன.

[அறன்வலி யுரைத்தல்]

4. கானக் குரங்கெழலாற் கங்கை சுதன்முதலோர்
ஈனப் படலா லிரங்கேசா!—ஆன
அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூஉங்கில்லை கேடு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, கானம் குரங்கு எழலால்-காட்டில் வாழும் குரங்குகள் (வெற்றி பெற்று) இராமாயணத்தில் விளங்கின காரணத்தாலும், கங்கை சுதன் முதலோர் - கங்கை மைந்தராகிய வீடுமர்முதலிய பெரியோர், ஈனம் படலால் - (பாரதத்தில் தோல்வி யடைந்து) பெருமை குன்றின காரணத்தாலும், ஆன - எல்லார்க்கும் அநுகூலமான, அறத்தின் ஊங்கு - தருமத்தைக் காட்டிலும், ஆக்கமும் இல்லை - செல்வமும் (வாழ்வுங்) கிடையாது; அதனை மறத்தலின் ஊங்கு - அதை மறந்து (பாவம் செய்வதை) விட, கேடு (உம்) இல்லை - கெடுதி (தாழ்வும்) கிடையாது.

(க - ரை) தருமத்தை ஒருநாளும் மறக்கவேண்டாம்.

(வி-ரை) தேவக் குரங்குகளாகிய கானக் குரங்குகள் இராமாயணத்தில் வெற்றி பெற்று விளங்கினமை உலகறிந்த கதை. இவைகள் கேவலம் குரங்குகளாய் நிராயுதபாணிகளா யிருந்தும்,

அறத்தை மேற்கொண் டொழுகிய ஸ்ரீ ராமபிரானை அடுத்திருந்த காரணத்தால், இராவணன் முதலிய அரக்கரைக் கொன்று வென்று நன்று விளங்கின. ஸ்ரீ ராமபிரானுடைய அறக்கருணை யும், அறம் போற்றும் ஆற்றலும் இராமாயணத்தில் எங்கெங் கும் பாக்கக் காணலாமாயினும், இராவணனிடத்தில் அவர் அங்கதனைத் தூதனுப்பின பெருங் கருணைத்திறம் பெரிதும் வியக்கற்பாலது. இப்படித் தருமத்தையே பெரிதும் பாராட் டிப் போற்றின புண்ணிய புருஷோத்தமனை நண்ணிய சேனைகள் குரங்குகளெனினும் வெற்றி பெற்றன. இதனையே இங்குக் கானக் குரங் கெழலால்' என்று கூறினர். இதனால் 'அறத்தினூஉங் காக்கமு மில்லை' என்பது நன்கு விளங்குகின்றது. கங்கைசுதன் முதலோர் ஈனப்படலால் என்பது வீடுமர், துரோணர், கிருபர், விதுரர் முதலிய பெரியோர், பாவியாகிய துரியோதனனை அடுத்திருந்த காரணத்தால் ஈனம் அடைந்து பாண்டவர்க்குத் தோற்றமையைக் குறிக்கின்றது. குரக்குச் சேனையைக் காட்டி லும் எத்தனையோ வில்லாண்மையிற் சிறந்த வீடுமர் முதலிய சேனுவீரர்களைப் பெற்றிருந்தானாயினும் துரியோதனன் தருமத் தைக் கைவிட்டுப் பாண்டவர்க்குச் சேரவேண்டியதாய பாகத்தை அவர்கள் வனவாசந் தீர்ந்து வந்தபின்பும் கொடுக்க மறுத்தானகை யால், பாரத யுத்தத்தில் தன் சுற்றத்தோடு அநியாயமாய் மாண் டான். இதனால் 'அதனை மறத்தலி னூஉங்கில்லை கேடு' என்பது நன்கு விசதமாகின்றது. அளபெடைகள் இரண்டும் இன்னிசை கள். 'ஆக்கமுங் கேடும்' என்றது நன்மை தீமைகளை.

## இல்லற வியல்

[இல் வாழ்க்கை]

5. பத்துடனுன் கில்லம் பாகதிகொண் டேகினுன்
இத்தலமே லாள்வா னிரங்கேசா!—நித்தம்
இயல்பின னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே! இ தலம் மேல் ஆள்வான் - இந்தப் பூவுலகத்து மேல் உள்ள மோக்ஷ வீட்டை ஆள்பவராகிய கந்தனூர் ஆழ்வார், பத்துடன் நான்கு இல்லம் - தன் வீட்டுக்கு இருபுறங்களிலும் உள்ள பதினான்கு வீட்டில் உள்ளவர்களையும், பாகதி கொண்டு ஏகினான் - பரமபதத் திற்கு அழைத்துக்கொண்டு போனார்; (ஆகையால் இது) நித்தம் - தினமும், இயல்பினான் - இல்வாழ்க்கைக் கேற்ற முறைமைப்படி, இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான் - இல்லறதருமத்தை நடாத்து பவன் என்பவன், முயல்வாருள் எல்லாம் தலை - வனத்தில் வருந் தித் தவஞ் செய்பவர்களுக் கெல்லாம் முதன்மையாவான் (என் பதை விளக்குகின்றது).

(க - ரை) இல்லற மல்லது நல்லற மன்று.

(வி - ரை) பத்துடனான்கு: மூன்றும் வேற்றுமை உட னிகழ்ச்சிப் பொருளது. பரமபாகவதராகிய கந்தனூர் ஆழ்வார் இல்லற தருமத்தை ஒழுங்குபெற நடத்தினார் ஆகையால்,

"நல்லா ரொருவ ருளரே லவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை."

என்றபடி அவர் பொருட்டு அவரோடு வாழ்ந்த பதினான்கு வீட் டுக்காரர்களுக்கும் பரமபதங் கிடைத்தது. தம்மைச் சேர்ந்தவர்க ளுக்கும் வீடுபேற்றை வழங்கும் ஆற்றல் முற்றத்துறந்த முனிவர்க் கும் இல்லை. ஆதலால், 'இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவ னென்பான், முயல்வாரு ளெல்லாந் தலை.' என்றார். சரியை கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களிற் பயில் வோரும் முற்றத் துறந்த முனிவ ரெனினும் தமக்கென உழைப் பவராவர். இல்வாழ்வான், இந்நான்கு பாதங்களிற் பயில்வோரை யுங் காத்து, தென்புலத்தார்-தெய்வம்-விருந்து-ஒக்கல்-தான் என் னும் ஐம்புலத்தாற்றில், இல்லற ஓடத்தை இனிது நடத்தித் தனக்

கென உழைப்பதன்றிப் பிறர்க்கென உழைப்பவ னுகின்ருன். ஆகையால், முனிவரினும் தலைமை யாவான் என்பதில் ஐயமின்று. இதுபற்றியே, 'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென் ருங், கைம்புலத்தா றோம்பல் தலை.'' என்று இங்குக் கூறிய தலை மையையே அங்குங் கூறினர். தலை: ஆகுபெயர்.

[வாழ்க்கைத் துணைநலம்]

6. மாண்டவியர் சாபத்தை வல்லிருளால் மாற்றினுள்
ஈண்டோர் மடந்தை இரங்கேசா!—நீண்டபுகழ்ப்
பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின்.

(ப-ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, ஈண்டு - இவ் வுலகில், ஒரு மடந்தை - ஒரு பெண்ணுகிய நாளாயினி, மாண் டவியர் சாபத்தை - மாண்டவிய மாமுனிவருடைய சாபத்தை, வன்மை இருளால் மாற்றினுள் - பேரிருளால் நீக்கினுள். (ஆகை யால், இது) கற்பு என்னும் திண்மை உண்டாக பெறின் - கற் பாகிய பலம் உண்டாயிருந்தால், நீண்ட புகழ் - பெரிய புகழை உடைய, பெண்ணின் - பெண்ணைக் காட்டிலும், பெருந்தக்க - பெரிய தகுதியை உடையன, யா உள - எவை யிருக்கின்றன (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) காவல் தானே பாவையர்க் கழகு.

(வி - ரை) மாண்டவிய மாமுனிவர்,

''உள்ளியர் தெள்ளிய ராயினும்
ஊழ்வினை பைய நுழையும்.''

என்றபடி முன்செய் தீவினையால் வனத்தில் ஓரிடத்தில் கழுமரத் தேறி வருந்திக்கொண் டிருந்தார். நாளாயினி யென்னும் இராஜ

குமாரத்தி முன்செய் நல் வினையால் முனிவர் ஒருவருக்கு மனைவி யானுள். அம் முனிவர், தம் மனைவியின் கற்பைச் சோதித்து உல கப் பிரசித்தம் பண்ண விரும்பித் தம் தேகத்தில் குஷ்டரோகம் வருவித்துக்கொண்டு, சீயும் நீரும் வடிந்து நாறத் தோன்றினுர். ஆயினும், அவ்வம்மையார்,

"புல்லென்றாலும் புருஷன்,
கல்லென்றாலும் கணவன்"

என்றபடி கணவன் உடலின் துர் நாற்றத்தைச் சந்தன மணமாகப் பாவித்து, உபசரித்து வந்தாள்.

"பத்தாவுக் கேற்ற பதிவிரதை உண்டானுல்
எத்தாலுங் கூடி யிருக்கலாம்,"

என்றபடி வாழ்ந்து வந்த நளாயினி, ஒருநாள் இரவில் தன் கண வன் விருப்பப்படி அவரை ஒரு தாசி வீட்டுக்குக் கூடையிற் சுமந்து கொண்டு போய்த் திரும்பி வருகையில் இருளா யிருந்தமையால் மேற்கூறிய மாண்ட்வியர் கழுமரத்தில் கூடை மோதியது. உட னே அவர்க்கு உபத்திரவம் அதிகரித்தமையால், அவர் நாளாயினி யை நோக்கி, "ஏ பெண்ணே! நீ விடியுமுன் மங்கலியம் இழக்கக் கடவை" என்று சபித்தார். அது கேட்ட நாளாயினி, கணவற் காக வருந்தி, "விடியாதிருக்கக் கடவது" என்று சபித்துவிட்டு வீட்டுக்குப் போய்விட்டாள். பிறகு பொழுது விடியாமையால், நித்திய கர்மானுஷ்டானங்கள் பயிர்பச்சை முதலியவைகள் ஓங்கா மல், தேவர்கள் அனைவரும் மனம் வருந்திச் சூரியனிடத்திற் சென்று கேட்டார்கள். அவன் நளாயினியைக் கேட்கச் சொன் னுன். அவள் மாண்டவியரைக் கேட்கச் சொன்னுள். அவர்கள் மாண்டவியரை வேண்டிக்கொண்டபோது அவர் தமது சாபத்தை மாற்றினுர். பிறகு நளாயினியும் தன் சாபத்தை மாற்றினுள்.

உடனே பொழுது விடிந்து சூரியன் தோன்றினர். எல்லாரும் சந்தோஷமானார்கள். இதுவே மாண்டவியர் சாபத்தை வல்லிருளால் மாற்றின கதை. 'நீண்ட புகழ்' என்றது என்றும் அழியாப் பெரும் புகழை. பெண்ணின்: ஐந்தாம் வேற்றுமை எல்லைப் பொருள்.

[புதல்வரைப் பெறுதல்]

7. வேதம் புகழ்நதியை மேதினியிற் றந்துகுலத்
தேதங் கெடுத்தா னிரங்கேசா!—ஓதும்
எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

(ப - ரை) இரங்கேசா-அரங்கநாதக் கடவுளே!, வேதம் புகழ் நதியை - வேதங்கள் சிறப்பித்துச் சொல்லுகின்ற ஆகாய கங்கையை, மேதினியில் தந்து - பூலோகத்திற்குக் கொண்டு வந்து, குலத்து ஏதம் கெடுத்தான் - தன்னுடைய முன்னோர்க்கு நேரிட்ட நரகானுபவத்தைப் (பகீரதன்) தீர்த்தான்; (இது) பழி பிறங்காத பண்புடை மக்கள் பெறின் - பழிக்கு ஆளாகாத நற்குணமுள்ள மக்களைப் பெற்றால், எழு பிறப்பும் தீயவை தீண்டா - எழு பிறவிகளிலும் பாவங்கள் அணுகா (என்பதை விளக்குகின்றது).

(கு - ரை) ஏவா மக்கள் மூவா மருந்து.

(வி - ரை) கங்கையின் பரிசுத்த நோக்கி, 'வேதம் புகழ் நதி' என்றார். சூரியகுலத்துச் சகர சக்கரவர்த்தி தமது அறுபதினாயிர மைந்தரின் உதவியால், அசுவமேதஞ் செய்து குதிரையை வெளியில் விட்டபோது, இந்திரன் அதைக் கொண்டுபோய்ப் பாதாள லோகத்தில் தவஞ் செய்துகொண்டிருந்த கபில முனிவர் தவச்சாலையிற் கட்டிவைத்தான். அது தெரியாத சகர குமாரர்கள் குதிரையைப் பூமியில் எங்கெங்குந் தேடிக் காணமல், பூமியைத்

தோண்டிப் பாதாளத்திற் சென்று கபில ராச்சிரமத்தில் மேய்ந்து கொண்டிருந்த குதிரையைக் கண்டு, 'அம் முனிவரே அதைக் கொண்டு சென்றார்' என்றெண்ணி, அவரை அவமதித்து வைதார்கள். உடனே முனிவர் கோபித்துக் கண் திறந்து பார்த்ததனால், அறுபதினாயிரம் பேரும் சாம்பலாய்ப் போனார்கள். பிறகு இவர்கள் குலத்தில் பிறந்த பகீரதன் என்னும் உத்தம மைந்தன், தன் முதாதையாராகிய சகரர், கபிலமுனிவர் சாபத்தால் சாம்பராய் நரகானுபவம் பண்ணுவதை உணர்ந்து பல்லாண்டு பல்லாண்டாய்ப் பிரமனையும் கங்கையையும் சிவனையும் நோக்கித் தவஞ்செய்து, ஆகாய கங்கையைப் பூமியில் இறக்கிக் கொண்டுவந்தான். சன்னு முனிவர் அதை உட்கொண்டுவிட்டார். அவரை வேண்டி வரங் கிடந்து, மறுபடியும் அதை அவர் காது வழியால் அவன் விடுவித்துக் கொண்டுபோய்ப் பாதாளத்திற் சாம்பராயிருந்த தனது மூதாதையர் எலும்புச் சாம்பர்மேல் பாய்ச்சி அவர்களை நரகத்தினின்றும் விடுவித்து மோக்ஷத்திற்குச் செலுத்தினான். இதுவே 'வேதம் புகழ் நதியை மேதினியிற் றந்துகுலத், தேதங் கெடுத்த கதை. "முன் எழு, பின் எழு" என்று எல்லாரும் சொல்லும் பிறவிகள் என்பதனால் 'ஒதும் எழுபிறப்பு' என்றார்.

[அன்புடைமை]

8. வெற்பின் சிறகரிய வெங்ஙொன் பளித்துமுனி
இப்புவியைக் காத்தா னிரங்கேசா!—நற்புகழாம்
அன்பிலா ரெல்லாம் தனக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வெற்பின் சிறகு அரிய - இந்திரன் மலைகளின் சிறகுகளை வெட்டும்படி, முனி - ததிசிமுனிவர், வெங் என்பு அளித்து - தமது முது கெலும்பைக் கொடுத்து, இ புவியை காத்தான் - இந்தப் பூலோ

கத்தை மலை அரக்கர் உபத்திரவத்தினின்றுங் காப்பாற்றினார். (ஆகையால், இது) நன்மை புகழாம் - நல்ல கீர்த்தியைத் தரத் தகுந்த, அன்பு இல்லார்-பிறர்மேல் அன்பில்லாதவர்கள், எல்லாம் தமக்கு உரியர் - தங்களுடைய உடல் பொருள் ஆவியாகிய எல்லா மும் தமக்கே உரியவராவார்; அன்பு உடையார் - பிறர்மேல் அன்புடையவர்கள், பிறர்க்கு என்பும் உரியர் - பிறர்க்குத் தம் முடைய எலும்பையும் உரிமையாக்கச் சித்தமாயிருப்பார்கள் (என் பதை விளக்குகின்றது)

(க - ரை) உண்மையன்பு உடலெலும்பை உதவவும் உடன் படும்.

(வி-ரை) முற்காலத்தில் மலைகளுக்குச் சிறகுகள் இருந்தன. அவைகள் தாம் நினைத்த இடங்களுக்குப் பறந்து சென்று பட்ட ணங்களையும் அவைகளிலுள்ள ஜனங்களையும், மேல் விழுந்து நசுக் கிக் கொன்று பாழாக்கின. எல்லாரும் இந்திரனை வேண்டிக்கொண் டதனால், அவன் அவைகளின் சிறகுகளை வெட்டி உலோகோபகா ரம்பண்ண எண்ணினான். தன்னுடைய வச்சிராயுதம் மழுங்கி யிருந் தமையால், அங்ஙனஞ் செய்ய அவனால் ஆகவில்லை. உடனே அவன், பூலோகத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த ததீசிமுனிவ ரைக் கண்டு, "ஐயனே! அடியேனுடைய வச்சிராயுதம் மழுங்கி னமையால் அதனால் மலைகளின் சிறகுகளை வெட்டி இப் பூலோகத் துயிர்களுக்கு உபகாரம் செய்ய முடியவில்லை. தேவரீருடைய முது கெலும்பால் வேறொரு புதிய வச்சிராயுதம் செய்துகொண்டால், அவைகளை நான் சிறகரிந்து அடக்கிவிடுவது நிச்சயம். ஆகை யால், அதை எனக்கு அருளவேண்டும்" என்று தன் குறை யிரந்து வேண்டினான். அது கேட்டவர் முதலெழு வள்ளல்களில் ஒருவ ராகையால், "ஏ சுராதிப! ஜீவகாருணியமே எமக்கு முதற்படியா

யுள்ளது; அதுவே அன்பை வெளிப்படுத்துவது. இச் சரீரம் நிலையற்றது. இது யாருக்குச் சொந்தம்? யாருக்குஞ் சொந்தம், தாய்க்குஞ் சொந்தம்; செத்தால் நாய்க்கும்-பேய்க்கும்-ஈக்கும்-எறும்புக்கும்-காக்கைக்கும்-கழுகுக்கும் சொந்தம்; எனக்குஞ் சொந்தம்-உனக்குஞ் சொந்தம்; இது ஒரு சாக்குப்பை, இருகாலிற் செல்லும் பேய்த்தேர்; இது நீரிற்குமிழி போன்றது. இது இருக்கும் இப்போதே பல்லுயிர்க்கும் உபகாரம் புரியவேண்டும். இந்தா! இதை எடுத்து உன் இஷ்டம்போல் செய்துகொள்!" என்று தமது ஜீவனைக் கபாலமூலமாய் வெளிப்படுத்திவிட்டுக் கட்டைப் பிணமாயிருந்தார். அதுகண்ட இந்திரன் அவருடைய ஜீவகாருண்யத்தையும் அன்பையும் வியந்தபடியே அந்த உடலின் முதுகெலும்பைக் கொண்டு ஒரு புதிய வச்சிராயுதஞ் செய்து, அதனுல் மலைகளின் சிறகுகளைக் கொய்து, பல்லுயிரையுங் காத்தான். இதுபற்றியே 'வெற்பின் சிறகரிய வெங்கெண் பளித்தமுனி, இப் புவியைக் காத்தான்' என்ருர். பிறர்மேல் அன்பற்ற சுயநலப் பிரியர்கள், தமது உடல் பொருள் ஆவி மூன்றுந் தம்மவென்றுதாமிருப்பர்; அன்புடையார் அங்ஙனமின்றித் தமது கண்ணைப் பிடுங்கி யப்பின கண்ணப்பரைப்போல், தமது உயிரையும் பிறர்க்கு வழங்கச் சித்தமா யிருப்பார்கள். பிரதி உபகாரம் கருதி நன்றி செய்யமாட்டார்கள்.

> "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
> டென்ருற்றுங் கொல்லோ வுலகு."

என்றபடி பிரதி உபகாரம் வேண்டாமலே பகைவர்க்கும் நன்றி செய்வார்கள்.

[விருந்தோம்பல்]

9\. தேசுபெறு மாறன் தெளித்த முளையமுதிட்
டீசனுடன் போந்தா னிரங்கேசா!—பேசுங்கால்

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தேசு பெறு மாறன் - புகழ் பெற்ற இளையான்குடிமாற நாயனர், தெளித்த முளை அமுது இட்டு-அன்று விதைத்த நென்முளையை அமுதாக்கிப் படைத்து, ஈசனுடன் போந்தான் - சிவபிரானுடன் சிவலோகஞ் சென்று வாழ்ந்தார். (ஆகையால், இது) பேசுங்கால்-எடுத்துச் சொல்லுமிடத்து, செல் விருந்து ஓம்பி - உண்டு செல்லும் விருந்தாளிகளை உபசரித்துவிட்டு, வரு விருந்து பார்த்திருப்பான் - இனி வரும் விருந்தாளிகளை எதிர்நோக்கி யிருப்பவன், வானத்தவர்க்கு-சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்களுக்கு, நல் விருந்து - (இறந்த பிறகு) நல்ல விருந்தாளியாவான் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) மருந்தே யாயினும் விருந்தோ டுண்.

(வி - ரை) இங்குத் தக்கண இந்தியாவில், இளையான்குடி யென்னும் ஊரில் வாழ்ந்த மாறன் என்னும் வேளாளர், தாளாளராய்,

"தொழுதூண் சுவையின் உழுதூ ணினிது."

என்றபடி பழுதற உழுது பயிரிட்டுச் செல்வம் பெருகி,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை."

என்றபடி இல்வாழ்க்கை வாழும் இயல்பினன் வாழ்ந்து வந்தார். இவர் சிவபத்தியிற் சிறந்திருந்தா ராகையால், சிவனடியவரை அவனெனக் கருதி யன்புசெய்து அமுதூட்டுவ ராயினர். அது கண்ட சிவபிரான், அவருடைய விருந்தோம்பற் றிறத்தை யவர் வாழ்வி

னன்றித் தாழ்விலும் போற்றுவார் என்று காட்டி உலகத்தவர்க்கு அவருடைய சிவபத்தியின் சிறப்பை வெளிப்படுத்த அவருடைய செல்வத்தை மாற்றி, அவரை வறியவ ராக்கினர். அன்றியும், ஒரு நாள் அரையிரவில் விடாமழை பொழியும் இருட்டில், சிவபிரான் தாமொரு விருத்த சிவனடியவர்போல் வேடந் தாங்கி, மெத்தப் பசித்தவர் போன்று அவர் வீட்டுக் கதவைத் தட்டினர். வறுமை யின் கொடுமையால் உறக்கமின்றியிருந்த நாயனர், உடனே வந்து கதவைத் திறந்து, சிவனடியவரை வரவேற் றுபசரித்து,அங்கொரு புறம் அவரை எழுந்தருளுவித்து, வீட்டில் ஒன்று மில்லாதிருந்தும் அவர்க்கு அன்னமிடும் ஏற்பாட்டுக்காகத் தம் மனைவியாரோடு யோசித்து, அன்று பகல் விதைத்த நென்முளையை மிக வருந்தி வாரிக் கொண்டுவந்து அவர் கையிற் கொடுத்தார். அதை வாங்கின அவ் வம்மையார், பத்தாவுக்கேற்ற பதிவிரதை ஆகையால், தக்க படி பதஞ் செய்து அமுதாக்கி, அடியவர்க்குப் படைத்தார். பொய்ப் பசிகொண்ட அடியவர், அவர்களுடைய பத்தி வைராக்கிய உண் மை யன்புக்கு வியந்து, மழவிடைமேல் அவர்களுக்குக் காட்சி தந்து, அவர்க ளிருவரையும் தமது உலகத்துக்கு அழைத்துக் கொண்டு போயினர். இப் பெரியபுராணக் கதையைப்பற்றியே, 'தேசுபெறு மாறன் தெளித்த முளையமுதிட், டீசனுடன் போந் தான்' என்றார். 'தேசு' என்பது வெளிச்சம்; ஆகுபெயராய்க் கீர்த்தியைக் குறித்தது. இதனல் நாயனரும் "பொய்யா விளக்கு" என்றார். பொய்யா விளக்கேற்றி வைத்த அரிச்சந்திரன் கீர்த்தி - தேசு இன்னும் ஒளி வீசுவது காண்க. முளையமுது: இருபெய ரொட்டு. செல்விருந்து: வினைத்தொகை. விருந்தாளிகளை எதிர் கொண் டுபசரிப்பவனைச் சுவர்க்கத்தில் தேவர்கள் எதிர்கொண் டுபசரிப்பார்கள். சுவர்க்கம் புகுவது நிச்சயம் என்பது தோன்ற 'நல் விருந்து வானத்தவர்க்கு' என்றார்.

[இனியவை கூறல்]

10. வன்சமர்நட் பால்வென்று மாநிலமா ளத்தருமன்
இன்சொல்லாற் பெற்ருன் இரங்கேசா!—பொன்செய்
நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தருமன் - தருமராஜன், வன் சமர் - பாரதப்போரை, நட்பால் வென்று - பல்லரசர்களோடும் செய்திருந்த நேசத்தால் ஜயித்து, இன் சொல்லால் - அவர்களோடு பேசிய இனிய சொற்களால், மா நிலம் ஆள பெற்ருன் - இப் பரதகண்டத்தை அரசாட்சி செய்யும் பேறு பெற்ருன். (ஆகையால், இது,) பயன் ஈன்று - பிறர்க்குப் பிரயோசனஞ் செய்து, பண்பின் தலை பிரியாத சொல் - அந் நற்பிரயோசனமாகிய குணத்தினின்றும் வேருகாத வார்த்தை, பொன் செய்-செல்வத்தைத் தருகின்ற, நயன் ஈன்று-இலாபத்தைத் தந்து, நன்றி பயக்கும் - மற்றெல்லா நன்மைகளையும் உண்டாக்கும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பையச் சென்ருல் வையந் தாங்கும்.

(வி - ரை) தருமராஜன் இந்திரப்பிரத்தத்தில் இருந்து நாடாண்ட பொழுதும், சூதில் நாடிழந்து, காடாண்ட பொழுதும், ஒரே குணமாய் எறுமா றின்றி நய வசனம் பேசி, முற்றத் துறந்த முனிவர், வேதியர், வேந்தர் முதலியவர்களோடு நட்புப் பாராட்டி, அவர்களை விருந்தேற் றுபசரித்துப் பொறுமையோடிருந்தார். ஆகையால், அவர், இந் நற்குணங்கள் ஒரு சிறிதும் இல்லாத துரியோதனனைப் பாரதப் போரில் வெகு சுளுவிற் கொன்று வென்று இப் பரத கண்டத்தைப் புகழோடு ஆண்டார். இந்தப் பாரதக் கதையைப்பற்றியே, 'வன்சமர்நட் பால்வென்று

மாநிலமா ளத்தருமன், இன்சொல்லாற் பெற்றான்' என்றார். வன்மை சமர்: பண்புத்தொகை, கடுஞ் சமர் என்பதும் இது. 'பொன் செய் நயனின்று' என்பதற்குத் 'திருமகள் நோக்கமாகிய காரியம்' எனினும் பொருந்தும். நயன், பயன்: நயம், பயம் என்பவைகளின் போலிகள். பண்பின் தலை-'(பயன் தருஉங்) குணமாகிய இடத்தை' என்றுங் கூறலாம். 'சொல்' என்பது 'தரும்' என்னும் வினைகொண்டு முடிந்தது. 'நயன்' 'பயன்': இரண்டனுருபு தொக்கி வந்த செயப்படுபொருள்கள்.

[செய்ந்நன்றி யறிதல்]

11. *நாடிச் சிறைக்கருடன் நாகக் கொடுங்கணையை*
*ஈடழித்தா னன்றோ இரங்கேசா!—நாடுங்கால்*
*செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்*
*வானகமு மாற்ற லரிது.*

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சிறை கருடன் - சிறகுகளையுடைய கருடன், நாடி - (ஸ்ரீ ராமபிரான், தன்னை நினைத்ததை) ஆராய்ந்து, நாகம் கொடுமை கணையை - (இந்திரஜித்தன் விட்ட) நாகபாசமாகிய கொடிய பாணத்தை, ஈடழித்தான் அன்றோ - சின்னபின்னப் படுத்தினான் அல்லவா? (ஆகையால், இது) நாடுங்கால் - ஆராயுமிடத்தில், செய்யாமல் செய்த உதவிக்கு - நாம் ஒருபகாரமும் செய்யாமலிருக்க, ஒருவன் சமயத்தில் நமக்குச் செய்த வுபகாரத்துக்கு, வையகமும் வானகமும் ஆற்றல் அரிது - இந்தப் பூலோகத்தையும் தெய்வலோகத்தையும் ஈடாகக் கொடுத்தாலும் போதாது (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) நன்றி மறப்பது நன்றன்று.

(வி - ரை) சீதா பிராட்டியை இராவணன் தூக்கிச் சென்றதனால், அவ் வம்மையாரை மீட்க, ஸ்ரீ ராமபிரான் அவனோடு யுத்தஞ் செய்ய நேரிட்டது. இந்த யுத்தத்தில், இராவணன் மகன் இந்திரஜித்தன் என்பவன் நாகபாசத்தை விட்டு இளையபெருமாளையும் பிறரையும் மூர்ச்சை யாக்கினான். அது கண்டு வருந்திய தாசரதி: கருட பகவானை நினைத்தார். அவர் 'நமக் கென்ன' என்றிருந்துவிடாமல், உடனே யுத்த களத்துக்கு வந்து ஆகாயத்திற் பறந்து திரிந்தார். அவருடைய சிறையடிக் காற்றால் நாகபாசத்தின் வேக மடங்கிச் சின்ன பின்னப்பட்டுப் போயிற்று. இளையபெருமாள் முதலியோர் தூங்கி விழித்தவர்கள் போல் எழுந்து, பிறகு பேரமர் செய்து இராவணன் முதலியோரைக் கொன்று விளங்கினார்கள். கருடபகவான் ஸ்ரீ ராமபிரானுக்குச் செய்த இந்த வுதவியே செய்யாமற் செய்த வுதவியாகும். இதற்கு ஈடு செய்ய முடியா தாகையால் 'வையகமும் வானகமு மாற்றலரிது' என்றார். 'நாடி' என்பதற்கு 'ஆபத்தை ஆராய்ந் தறிந்து' எனினுமாம். ஈடு அழித்தல்-உருவில்லாமற் செய்தல். வையகமும் வானகமும் என்பதற்குப் பாதாளத்தையுஞ் சேர்த்துத் திரிலோகம் என்பாரும் உளர். 'மாற்றல் அரிது' எனப் பிரித்து, 'மாறுதல் மாறாகத் தருதல்' எனினும் பொருந்தும்.

[நடுவு நிலைமை]

12. வேதவிதி வீமா விலங்கிற் குடற்பாதி
ஈதலமு கென்றான் இரங்கேசா!—ஓதுங்கால்
நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, 'வீமா-பீமசேனனே!, விலங்கிற்கு - புருஷா மிருகத்திற்கு, உடல் பாதி-

உன்னுடைய உடலில் பாதி பாகத்தை, ஈதல் - தருதல், வேத விதி - வேத சம்மதம், அழகு - அதுவே நியாயம், என்றான் - என்று தருமராஜன் சொன்னான். (ஆகையால் இது) ஓதுங்கால் - சொல்லுமிடத்தில், நன்றே தரினும் - நல்ல இலாபத்தையே தருவதா யிருந்தாலும், நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை - நடுவு நிலைமை தப்புவதால் உண்டாகும் செல்வத்தை, அன்றே ஒழியவிடல் - அப்பொழுதே நீக்கிவிடக்கடவை (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) நடுவு நிலைமை தவறக் கூடாது.

(வி - ரை) இராஜசூயயாகம் பண்ண விரும்பின தருமர்: புருஷாமிருகத்தை அழைத்துக் கொண்டுவர வீமசேனனை ஏவினார். அவன் போய் அதை அழைத்தபோது, அது அவனை நோக்கி, "உன் பின்னாலேயே நான் வருவேன்; ஆயினும், உனக்கும் எனக்கும் இடையில் நாற்காத வழித் தூரம் இருத்தல் வேண்டும்; இந்தத் தூரம் குறைந்தால், நான் உன்னை நெருங்கிப் பிடித்துக் கொள்வேன்" என்றது. "அப்படியே ஆகட்டும்" என்று பீமன் முன் சென்றான். அவன் நாற்காத தூரம் சென்றதுணர்ந்து, மிருகம் அவனைத் தொடர்ந்தது. அது சென்ற வேகத்தால், பீமன் மறுபடியும் நாற்காதம்போவதற்குள் நெருங்கி விட்டது. அது தெரிந்த பீமன், ஒரு கல் எறிந்தான். அது ஒரு சிவலிங்கமுந் தடாகமு மாயிற்று. புருஷாமிருகம், சிவபத்தியின் முதிர்ச்சியால் அங்குத் தங்கி நீராடிச் சிவபூஜை முடித்துப் புறப்படுவதற்குள் வீமசேனன் நெடுந்தூரம் போய்விட்டான். மறுபடியும் புருஷாமிருகம் நெருங்கிற்று. மறுபடியும் வீமன் கல்லெறிந்தான். இப்படி வீமன் தந்திரம் செய்தும் பலிக்காமையால், புருஷாமிருகம் கடைசியாகத் தன் னெல்லையி லொருகாலும், அவன் எல்லையி லொருகாலுமா யிருந்த வீமசேனனைப் பிடித்துக் கொண்டது. வீமன் "என்னெல்லையில் என்னைப் பிடித்தது

ஞாய விரோதம்'' என்ருன். இருவரும் தருமரிடத்தில் முறை யிட்டுக்கொண்டார்கள். அது கேட்ட தருமர், நடுவு நிலைமை தவருமல், வீமசேனனை நோக்கி, ''தம்பி! ஈரெல்லையிலும் நீ யிருந்தமையால், உன் உடலை இரு கூருக்கி, ஒரு கூறை இம் மிருகத்துக்குத் தந்துவிடவேண்டும்'' என்று நியாயந் தீர்த்தார். இதுபற்றியே, 'வேதவிதி வீமா விலங்கிற் குடற்பாதி, ஈத லழ கென்ருன்' என்ருர். 'விடல்' என்பது 'அல்' ஈற்று வியங்கோள். ஆம் ஆக்கம் - ஆகும் ஆக்கம், சேரும் செல்வம். தம்பி யென் றெண்ணி ஓரஞ் சொல்லாமல் நடுவுநிலைமையாய்த் தீர்த்த தருமன் செய்கை வியக்கற்பாலது.

## [அடக்க முடைமை]

13. ஆன்ற சபையி லடங்காச் சிசுபாலன்
ஏன்றிறந்தா னன்றே இரங்கேசா!—சான்றோர்கள்
காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

(ப-ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, ஆன்ற சபையில் - பெரியோர்கள் சபையில், அடங்காத சிசுபாலன் - அடக்கமின்றிப் பேசின சிசுபாலன், ஏன்று இறந்தான் அன்றே- அதற்கேற்ற தண்டனை யடைந்து செத்தான் அல்லவா? (ஆகை யால், இது) அடக்கத்தை-நாவடக்கம் முதலியவைகளை, பொருளா- பெரிய பொருளாக மதித்து, சான்றோர்கள் காக்க - பெரியோர் கள் காக்கக் கடவர்கள்; (ஏனெனில்) உயிர்க்கு - மக்கள் உயிர்க்கு, அதனின் ஊங்கு - அதைக்காட்டிலும் (பெரிய), ஆக்கம் இல்லை - செல்வம் கிடையாது (என்பதை விளக்குகின்றது).

(க • ரை) அடக்கமே பெருஞ் செல்வம்.

(வி - ரை) இராஜசூயயாக முடிவில் தருமர், அங்குள்ள முனிவரை நோக்கி, "முதற் பூசை யாருக்குச் செய்வது?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "கண்ணனுக்குச் செய்க" என்றார்கள். அங்கிருந்த சிசுபாலன் சும்மா இராமல், "என்னைப்போன்ற பெரியோ ரிருக்க, இந்த இடைப்பயலோ முதற்பூசை பெறுபவன்? இடையனோ மடையனோ! தெரியாதா" என்றான். முனிவர் சொன்னபடி கண்ணபிரானே முதற் பூசை பெற்றார். ஆயினும், அவர் சிசுபாலனை எதிர்த்துத் தாக்கிக் கொன்றார். அவனுடைய அடக்க மின்மைக்காக அவன் உயி ரிழந்தான். இதுபற்றியே 'ஆன்ற சபையி லடங்காச் சிசுபாலன், ஏன் றிறந்தான்' என்றார். ஆன்ற சபை-'பெரியோர்கள் நிறைந்த சபை' எனினுமாம். அடங்காத என்பது 'அடங்கா' என ஈறு கெட்டது. 'ஏற்று' என்பது மெலிக்கும் வழி மெலிந்தது.

[ஒழுக்கமுடைமை]

14. வேடவான் மீகர்பின்பு வேதியரின் மேலானார்
ஏடவிழ்தார் சூடு மிரங்கேசா!—நாடில்
ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

(ப-ரை) ஏடு அவிழ் தார் சூடும் இரங்கேசா-இதழ் விரிந்த மலர் மாலையைத் தரித்த திருவரங்கநாதக் கடவுளே!, நாடில்-ஆராயுமிடத்து, வேடர் வான்மீகர்-வேடர்குலத்திற்சேர்ந்த வான்மீகமுனிவர், பின்பு-மாமுனிவரான பின்பு, வேதியரின் மேல் ஆனார்-பிராமணரினும் சிறந்தவரானார்; (ஆகையால், இது) ஒழுக்கம் உடைமை குடிமை-ஆசாரம் கெடாமல் இருக்கப் பெறுதலால், (தாழ்ந்த குலமேனும்) உயர்ந்த குலமாகும்; இழுக்கம்-ஆசாரம் கெடுதலால், இழிந்த பிறப்பு ஆய்விடும்-உயர்ந்த குலமேனும் தாழ்ந்த குலமாகும் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) உயர்குலத்திலும் ஆசாரமே சிறந்தது.

(வி - ரை) வான்மீக முனிவர் ஆதியில் அந்தணராய்ப் பிறந்தும் பிறப்பொழுக்கங் கெட்டு வேடகுலத்திற் சேர்ந்து வழிமறி கொள்ளை யடித்து வாழ்ந்துவந்தார். ஆகையால், இழிந்த பிறப்பினராய் எண்ணப்பட்டிருந்தார். இதனால் 'இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடும்' என்பது விளங்குகிறது. அவரே பிறகு வழியேசென்ற எழு முனிவரையும் (சத்த ருஷிகளையும்) வழிமறித்துக் கொள்ளையடிக்கத் தொடங்குகையில், அவர்கள் அவர்மேல் மனமிரங்கி, "அந்தணன் இப்படிக் கேடுகெடுவான்! இவனை ஈடேற்ற வேண்டும்" என்றெண்ணிச் சீராமமந்திரத்தை உபதேசித்தார்கள். அதனால் அவர் ஆசாரம் சிறந்த தவமேற்கொண்டு, ஸ்ரீராமகாதையைக் காவியமாகப் பாடி, வேதியமுனிவராய் விளங்கினார். இது 'ஒழுக்கமுடைமை குடிமை' என்பதை விளக்குகின்றது. 'வேட வான்மீகர்' என்பதற்கு 'வேதியராய்ப் பிறந்தும் வேடகுலத்திற் சேர்ந்து ஒழுக்கந் தவறின வான்மீகர்' என்பது பொருள். 'வேதியரின்' என்பதில் 'இன்' உருபு எல்லைப்பொருளில் வந்தது.

[பிறனில் விழையாமை]

15. அம்பிகையை நோக்கி யளகேசன் கண்ணிழந்தான்
இம்பர் பரவும் இரங்கேசா!—நம்பிப்
பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

(ப - ரை) இம்பர் பரவும் இரங்கேசா-இவ் வுலகோர் போற்றும் திரு அரங்கேசநாதக் கடவுளே!, அம்பிகையை நோக்கி - பார்வதி தேவியைக் கூர்ந்து பார்த்ததனால், அளகேசன் - குபேரன், கண் இழந்தான்-குருடன் ஆனான்; (ஆகையால் ,இது) பிறன் மனை - அன்னியன் மனைவியை, நம்பி - சேரலாம் என்று நிச்

சயித்து, நோக்காத - பார்க்காத, பேர் ஆண்மை - பெரிய உறுதி யானது, சான்றோர்க்கு - பெரியோர்க்கு, அறன் ஒன்றோ - தருமம் ஒன்றுதானோ? ஆன்ற ஒழுக்கு(ம் ஆகும்)-மிகுந்த நல்லொழுக்கமும் ஆகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பிறன்மனை புகாமை அறனெனத் தகும்.

(வி - ரை) இந்தச் செய்யுளின் முதல் ஈரடிக்கு 'அந்தகன் தேவிதனை அக்கினி தானணைந்தே, இந்திலிழி வுற்றானிரங்கேசா!' என்றும் பாடபேதம் உண்டு. இதற்கு 'அந்தகன் - இயமனுடைய, தேவிதனை - மனைவியை, அக்கினிதான் - அக்கினி தேவன், அணைந்து - சேர்ந்து, இந்தில் - இவ் வுலகத்தில், இழிவு உற்றான் - மற்றத் தேவரால் அவமான மடைந்தான்' என்பது பதவுரை. இதற்குப் புராணகதை, நூற்றிருபதாஞ் செய்யுளிற் கூறியுள்ளது பொருந்துவது காண்க. கயிலாயமலையிற் பார்வதிதேவியை வேறெண்ணத்தோடு விவேகமின்றிப் பார்த்ததனால், குபேரன் குருடன் ஆனான். ஆகையால், 'அம்பிகையை நோக்கி அளகேசன் கண்ணிழந்தான்' என்றார். 'நாம் அவள்மீது இச்சை வைத்தது போலவே அவளும் நம்மீது இச்சை வைப்பாள் என்று ஒருவன் எண்ணிப் பிறன் மனைவியை நம்பி' என்று பொருள் விரித்துக் கொள்க. சாதாரண இல்லறதருமம் ஒன்றுமட்டும் அன்று; பிறன் மனை புகாத பேராண்மை நல்லொழுக்கங்களிற் சாலச் சிறந்ததுமாகும். இவ் வாண்மையிற் குறைந்து ஒழுகிய இராவணன் பட்ட பாடு யாவரும் அறிவர். ஆகையால், 'பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க், கறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.' என்றருளிச் செய்தார். இவ்வாண்மையே 'சான்றாண்மை' எனப்படும். 'பிறன்மனை புகாத' என்ற அவ்வை மொழியினும், 'பிறன்மனை நோக்காத' என்ற நாயனார் மொழி அதியற்புதம் ஆவது காண்க.

[பொறையுடைமை]

**16.** முந்து மரந்தரித்த மூர்க்கன்சொற் கேட்டுமவன்
எந்தைபிரான் என்றான் இரங்கேசா!—கொந்தி
அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, முந்தும்-தன்னெதிரில் உள்ள, மரம் தரித்த - மாமரத்தை வெட்டின, மூர்க்கன் சொல் - மூடனுடைய அகந்தை வார்த்தையை, கேட்டும் - கேட்ட பிறகும், அவன் - அந்த மூர்க்கன், எந்தை பிரான் - என் தந்தையாய்ச் சிறந்தவன், என்றான் - என்று சோமாவீடார் சொன்னார். (ஆகையால், இது) கொந்தி - கொத்தி, அகழ்வாரை-தோண்டுகிறவர்களை, தாங்கும் - பொறுமையோடு தாங்கிக்கொண்டிருக்கும், நிலம்போல - பூமியைப்போல, தம்மை - (ஒருவர்) தம்மை, இகழ்வார் - நிந்தித்துப் பேசுகிறவர்களை, பொறுத்தல் - பொறுத்துக்கொள்வது, தலை - மேலான காரியமாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பொறுமை கடலினும் பெரிது.

(வி - ரை) சோழனிடத்தில் ஒருவன் வந்து, "நான் பொறுமையிற் சிறந்தவன்' என்று பேர்போன சோற்குக் கோப மூட்டுகிறேன்" என்று சூள் உரைத்துச் சென்று, சோனுடைய முற்றத்தில் வளர்ந்திருந்த சாதி மாமரத்தை மூர்க்கத்தனமாக வெட்டினான். அங்ஙனம் அவன் வெட்டியும் சோற்குச் சற்றும் கோபம் மூளவில்லை. அவன் தாய் அம் மரவெட்டியை நோக்கி, "நீ யாவன்?" என்றாள். அதற்கவன், "நான்தான் உன் நாயகன்" என்றான். அது கேட்ட பிறகும் சோன், வேறொன்றும் கூறாமல் தன் தாயை நோக்கி, "அம்மணி! அவன் சொன்ன

சொல்லால், அம் மரத்துக் குடையவன் அவனே என்பதிற் சந்தேக மில்லை" என்றான். சேரன் வார்த்தையைச் செவிமடுத்த மரம் வெட்டி, அவன் பொறுமையை வியந்து வந்து, அவனுடைய பாதங்களிற் பணிந்து, "அடியேன் கொஞ்ச மதியாற் பிழைத்தேன். பொறுத்தருள்க." என்று முகமன் கூறிச் சென்றான். சேரன் பொறுமையைக் கேட்ட சோழன் முதலியோர் வியந்து கொண்டாடி மகிழ்ந்தார்கள். இதுபற்றியே 'முந்துமரந் தரித்த மூர்க்கன்சொற் கேட்டுமவன், எந்தைபிரான் என்றான் இரங்கேசா!' என்றார். தன்னை வெட்டுகிறவர்களுக்குக் கிளைமேல் நிற்க இடந்தருவதும் மரமும் பூமியைப் போலவே அப்போது தாங்குவதுமட்டும் அன்றிப் பிறகு தளிர்த்து வளர்ந்து, அவ் வெட்டினவர்க்கே நிழல் தருவதும் பொறுமைக்கு உத்தம இலக்கணமாவது காண்க. அகழ்வார், இகழ்வார்: வினையாலணையும் பெயர்கள்.

[அழுக்காறுமை]

17. வெள்ளி கொடுக்தல் விலக்கிவிழி தோற்றுலகில்
எள்ளலுற்றா னன்றோ இரங்கேசா!—உள்ளத்
தழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வெள்ளி - சுக்கிரன், கொடுத்தல் விலக்கி - (மாபலி சக்கரவர்த்தி, திருமாலுக்குக்) கொடுப்பதைத் தடுத்து, விழி தோற்று - கண் இழந்து, எள்ளல் உற்றான் அன்றோ - இகழ்ச்சி யடைந்தான் அல்லவா? (ஆகையால், இது,) உள்ளத்து - மனத்தில், அழுக்காறு உடையார்க்கு - பொறாமை உடையவர்களுக்கு, ஒன்னார் - பகைவர்கள், வழுக்கியும் - (கேடு செய்யத்) தவறினாலும், கேடு ஈன்பது - கேட்டைத் தருவதாகிய, அது சாலும்-அப் பொறாமை

யாகிய பகையே போதுமானது (வேறு பகை வேண்டியதில்லை என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பொறாமை உடையவர்கள் (பகைவர் இன்றியும்) தாமே கெடுவார்கள்.

(வி-ரை) சென்னைக் கடுத்த மாபலிபுரத்திலிருந் தரசாண்ட மாபலிச் சக்கரவர்த்தி, மேல் நடு கீழ் என்னும் மூவுலகங்களை யுந் தன் வசப்படுத்தி யாளுகையில், அருமையான யாகம் முடித்து வேதியர்களுக்கு அவ் வுலகங்களைத் தானம் செய்வானாயினன். அதனால், தங்களுக்கு இருக்க இடம் இல்லாமற் போகும் என் றுணர்ந்த தேவர்கள், அவன் கொடுமையைப் பொறாமல், அதி னின்றும் விடுவிக்கும்படி திருமாலை வேண்டிக்கொண்டார்கள். பிரகலாதனனுக்குக் கொடுத்திருந்த வரத்தின்படி திருமால், மாபலியை நேரிற் சென்று கொல்லக்கூடா தாகையால் அவன் செய்யும் பூதானத்தாலேயே. அவனைக் கொல்ல எண்ணி, ஒரு வேதியச் சிறு குறளாய் வடிவெடுத்துப் பூதானம் வாங்கஅவனிடத் திற் போய்த் தமது சிற்றடியால் மூவடி மண் தானங் கேட்டார். மாயவன் மாயம் உணராத மாபலி, அதற் குடன்பட்டுக் கரக நீரைத் தாரை வார்க்கப் போனான். அது தெரிந்த சுக்கிரன் (மாபலியின் குலகுரு) கரக நீர் ஒழுக்கைத் தடுக்க எண்ணி, வண்டாய் வடிவெடுத்து, நீர்த் துவாரத்தை அடைத்தான். அது கண்ட மாயவன் ஒரு சிறு துரும்பெடுத்துக் குத்தினான். அதனால் சுக்கிரனுக்குக் கண் குருடாயிற்று. அது கண்ட தேவர் கள், சுக்கிரனை நோக்கி, ''ஏ சுக்ராசாரி! பொட்டைக் கண்ணா! கொடுத்ததைத் தடுத்த குருடா!'' என்று இகழ ஆரம்பித்தார் கள். அதுவே இங்குக் குறிக்கப்பட்டது. ஓகாரம் எதிர்மறை வினா, உடன்பாட்டுப் பொருட்டு. பொறாமை யுடையவர்களுக்கு வேறு பகை யில்லாதிருந்தும், கேடு தருவதற்கு அப் பொறாமை,

யாகிய பகை யொன்றே போதும் என்று சுருக்கி உரை விரித்துக் கொள்க.

[வெஃகாமை]

18. முன்னோனைப் போரின் முடுக்கி விமானத்தை
என்னோகைக் கொண்டான் இரங்கேசா!—அன்னோ
நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, முன்னோனை - தனக்கு மூத்தவனாகிய குபேரனை, போரில் முடுக்கி - சண்டையில் வென்று, விமானத்தை - புஷ்பக விமானத்தை, என்னோ கை கொண்டான் - (இராவணன்) ஏனோ அபகரித்து (அடியோடு மாண்டான்? ஆகையால், இது) நடு இன்றி - நடுவுநிலைமை யில்லாமல், நன்மை பொருள் வெஃகின் - (ஒருவன்) பிறனுக்கு நன்மை தரும் பொருளை இச்சித்தால், அன்னோ - அந்தோ!, குடி பொன்றி - அவனுடைய குல நாசமாய், குற்றமும் ஆங்கே தரும் - (அக் காரியம் என்றும் அழியாப்) பழியையும் விளைவிக்கும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பிறர் பொருளை இச்சித்து அபகரித்தவன் பெரிதும் நாசமாவான்.

(வி - ரை) இராவணன் தனக்குத் தமையன் முறையான குபேரனைக் கொஞ்சமேனும் கண்ணோட்டமின்றிச் சண்டையிட்டுத் துரத்தி அவனுடைய புஷ்பகவிமான முதலிய உயர் பொருள்களைக் கொள்ளையிட்டுக் கொண்டுபோய் இலங்கையிற் சேர்த்து வாழ்ந்துவந்தான். ஆனாலும், அவன் வாழ்வு நெடுநாள் நிலைத்திருக்கவில்லை. இப்படிப் பற்பல அநீதங்கள் செய்துவந்தான். ஆகையால், அவன் இராமாயணப் போரில், ஸ்ரீ ராமன்

கை யம்பால் கிளையோடு மாண்டான். மாண்டும், பாவி யென்ற நாமம் படைத்துத் தன் குலத்திற்கே பெரும் பழி தேடிக்கொண்டான். இதுவே இங்குக் குறிக்கப்பட்டது. 'தரும்' என்னும் பயனிலைக்கு (அவ் விச்சைபாற் செய்யும்) காரியம் என்று தோன்றா யெழுவாய் வருவித்துக் கொள்க. நன்பொருள்: பண்புத்தொகை. அன்னோ: இரக்கக் குறிப்பு.

[புறங் கூறுமை]

19. தக்கதுரி யோதனன்பாற் சார்ந்த சகுனியைப்போல்
இக்கு வலயத்தில் இரங்கேசா!—மிக்குப்
பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, இகுவலயத்தில் - இந்த வுலகத்தில், தக்க துரியோதனன்பால் - மேலான பதவியிலிருந்த துரியோதனனிடத்தில், சார்ந்த - சேர்ந்திருந்த, சகுனியைப்போல்-சகுனிமாமனைப்போல, நக சொல்லி - மகிழும்படி இணக்கமான வார்த்தைகளைச் சொல்லி, நட்பு ஆடல் தேற்றாதவர் - இணங்கி யிருத்தலை வளர்க்கத் தெரியாதவர்கள், மிக்கு - மிகுதியாய், பக சொல்லி - பிரிவினை யுண்டாம்படி புறங் கூறி, கேளிர்-உறவினரையும் நட்பினரையும், பிரிப்பர்-வேறு பிரித்து மகிழ்வார்கள்.

(க - ரை) போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரியவேண்டாம்.

(வி - ரை) பாரதத்தில் துரியோதனன் முதலிய நூற்றுவரையும் அவர்கள் பங்காளிகளாகிய தருமன் முதலிய ஐவரையும் பகையாளிக ளாக்கின சகுனி மாமன், துரியோதனற்கு நன்மை செய்பவன் போலச் செய்த தீங்கு நாடறிந்ததாகும். அவர்களுக்குள் பகையை மூட்டி, ஒரு கூட்டத்தார் மறு கூட்டத்

தாரை வெறுக்கத் தூண்டினவனும் அவனே! சூதாட வேண்டினவனும் அவனே! ஐவர் அறியாமல் துரியோதனர்க்குத் துற்போதனை செய்து, சூதாட்டத்தில் அவர்களுடைய நாடு நகரத்தை வெளவினவனும் அவனே! அவர்களுடைய பெண்டு பிள்ளை பண்ட பதார்த்தங்களைச் சூதில் வென்று மானபங்கஞ் செய்வித்தவனும் அவனே! கடைசியாகத் துரியோதனனைக் கிளையோடு அழித்துத் தானழிவதற்குக் காரணமா யிருந்தவனும் அவனேயாம். ஆகையால், 'தக்கதுரி யோதனன்பாற் சார்ந்த சகுனியைப்போல்' என்றார். பக, நக: வினையெச்சங்கள். கேளிர்: கேண்மை என்னும் பண்படியாகப் பிறந்த பலர்பாற் பெயர்; கேண்மை - உறவு. நட்பு ஆடல் - உறவாடல்.

[பயனில சொல்லாமை]

20. வேந்தை வதிட்டன் வியத்தல்பழு தென்றமுனி
எந்துதவந் தோற்றான் இரங்கேசா!—ஆய்ந்தக்கால்
சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, வேந்தை-அரிச்சந்திர மகாராஜனை, வதிட்டன்-வசிஷ்டமுனிவர், வியத்தல்-புகழ்ந்து பேசுதல், பழுது - பிசகு, என்ற-(என்று தேவேந்திரன் சபையில்) சொன்ன, முனி - விசுவாமித்திர முனிவர், எந்து தவம் தோற்றான் - தமது செய்தவத்தை இழந்தார்; (ஆகையால், இது) ஆய்ந்தக்கால் - ஆராய்ந்து பார்த்தால், பயன் இல்ல - வீண் வார்த்தைகளை, நீர்மை உடையார் சொல்லின் - பெருந்தன்மை உடையவர்கள் பேசினால், சீர்மை-அவர்களுடைய பெருந்தன்மை யானது, சிறப்பொடு - அதனால் வரும் புகழோடு, நீங்கும் - அழியும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) வாதாடி வழக்குரைத்துத் திரியவேண்டாம்.

(வி - ரை) முற்காலத்தில் தேவேந்திரன் சபையில் வசிட்ட விசுவாமித்திர முனிவர்களுக்குள், பூலோகத் திருந்த அரிச்சந்திரனுடைய உண்மை நெறியைப்பற்றி வாதம் உண்டாயிற்று. விசுவாமித்திரற்குப் பித்தம் மேலிட்டுச், சித்த சுவாதீன மின்றி, அரிச்சந்திரனைப் "பொய்யன்" என்று சாதித்தார், வசிஷ்டர் சாந்தமாய், "அரிச்சந்திரன் மெய்யன், தூய்யன்" என்று வாதித்தார். இருவரும் சூள் உரைத்துக்கொண்டார்கள். வசிஷ்டர், தமது கூற்றுப் பிசகி அரிச்சந்திரன் பொய்யன் ஆனால், தாம் புலைச்சேரியில் மண்டை யோட்டில் பிச்சை புக்குண்டு திரிவதாக வஞ்சினம் உரைத்தார். விசுவாமித்திரரும் அப்படியே அரிச்சந்திரன் தாமியற்றுஞ் சோதனைக்குச் சலிக்காமல் உறுதியாய் நின்று மெய்யன் ஆனால், தமது செய்தவத்திற் பாதியை யிழந்துவிடுவதாக வாக்குறுதி கூறினர். பிறகு, அவர் அதற்காகவே பூலோகத்திலிருந்த அரிச்சந்திரனிடத்திற்கு வந்து அநேக மாயச் சூதுகள் செய்து, அவனைப் பொய்யனாக்க முயன்றார். முயன்றும் பயனின்றித் தமது அருந்தவத்திற் பாதியை அவ்வரிச்சந்திரற்கே வழங்கி, வசிஷ்டர் முன்னிலையில் தமது சீரும் சிறப்புங் குன்றி நின்றார். இதுவே இங்குக் குறிக்கப்பட்டது. விசுவாமித்திரர் முன் பின் எண்ணாமல் வசிஷ்டரிடத்தில் அரிச்சந்திரனைப்பற்றி வீண் வார்த்தைகள் பேசி விவேக சூனியராய் விளங்கினமையும், செய்தவத்தின் சீரும் சிறப்பும் இழந்தமையும் உலகப் பிரசித்தம். நீர்மை - சத்து.

> "பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
> எல்லாரும் எள்ளப் படும்."

என்பதையும் ஒப்பிடுக.

[தீவினை யச்சம்]

21. காளமுனி பாண்டவர்மே லேவுங் கடிவிழுங்க
எளித மானு னிரங்கேசா!—நாளுந்தான்
தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினு மஞ்சப் படும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, காளமுனி - (துரியோதனன் வார்த்தையைக் கேட்ட) காளமுனிவன், பாண்டவர்மேல் - (பஞ்ச பாண்டவரைக் கொல்லும்படி) அவர்கள்மேல், ஏவும் - அனுப்பின, கடி - பூதமானது (திரும்பி வந்து), விழுங்க - (தன்னையே எடுத்து) விழுங்கிவிட, எளிதம் ஆனான் - இகழ்ச்சிக் கிடமானான்; (ஆகையால், இது) நாளும் - எப்போதும், தீயவை - தீவினைகள், தீய - துன்பங்களை, பயத்தலால் - கொடுப்பதனால், தீயவை - அந்தத் தீவினைகள், தீயினும் - நெருப்பைக் காட்டிலும் (அதிகமாய்ச் சுடுவதாக), அஞ்சப்படும்-(பெரியோரால்) பயந்து நீக்கப்படும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பாவ காரியங்களைப் பயந்து நீக்கவேண்டும்.

(வி - ரை) வனத்திலிருந்த பாண்டவரைக் கொல்ல எண்ணின துரியோதனன் காளமா முனியைக் கொண்டு வாரண யாகஞ் செய்து, அதிலிருந்தொரு பூதத்தை உண்டாக்கி, அவர்களைக் கொல்ல ஏவினான். அதை, முன்னரே உணர்ந்த தரும தேவதை பாண்டவ ரைவரையுங் காக்கும் பொருட்டு, வனத்திலொரு நச்சுப்பொய்கை யுண்டாக்கி, அவர்களை நெடுந்தூரம் அழைத்துக் கொண்டுபோய், அதன் சலத்தைக் குடிப்பித்து அவர்களுக்கு மரண மூர்ச்சை யுண்டாக்கியிருந்தது. அவர்களைத் தேடி வந்த பூதம், அவர்கள் செத்துக்கிடந்ததைக் கண்டு, 'பிணங்

களைத் தின்னவா காளமுனி நம்மை ஏவினன்!' என்று பெருங் கோபங்கொண்டு, திருமிச் சென்று அம் முனிவனையே எடுத்து விழுங்கிவிட்டுச் சென்றது. பிறகு தருமதேவதை ஐவரையும் எழுப்பிவிட்டதனால் சுகமாய் வனத்தில் வாழ்ந்தார்கள். கேடு செய்த காளமாமுனி, தானே கெட்டுப்போனன். ஆகையால், தீயவை தீய பயத்தலால் தீயவை, தீயினு மஞ்சப் படும்.' என்ருர். தீயவை, தீமை என்னும் பண்படியாகப் பிறந்த பலவின்பாற் பெயர்.

[ஒப்புரவறிதல்]

22. அந்தணர் மேன்மை அறியாமற் சர்ப்பவென்றே
இந்திரன்பாம் பானன் இரங்கேசா!—முந்தவே
ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக் கோட்டக்க துடைத்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அந்தணர் - எழுமுனிவர்களுடைய, மேன்மை - பெருமையை, அறியாமல் - தெரியாமல், சர்ப்ப என்று - (சீக்கிரம் போங்கள் என்னும் பொருளையுடைய) சர்ப்ப என்னும் வார்த்தையைச் சொல்லி, இந்திரன் - இந்திரபதவியில் வந்த நகுஷமகாராஜன், பாம்பு ஆனன் - பாம்பாய்ப் பாதவித்தான்; (ஆகையால், இது) ஒப்புரவினல் - உலக நடையறிந்து செய்யும் காரியத்தினல், முந்த-முன்னதாக, கேடு வரும் என்னில்-கெடுதி வருமானலும், அஃது-அந்தக் கேடானது, ஒருவன் - ஒருவன் (தன்னை), விற்றுகொள் தக்கது உடைத்து - விற்ருனலும் கொள்ளுந் தகுதியை உடையதாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) உலகநடை யறிந்து உபகார காரியஞ் செய்தொழுகவேண்டும்.

(வி - ரை) முற்காலத்தில் நகுஷமகாராஜன் ஓராயிரம் பரிமேதஞ் செய்ததனால் இந்திரபதம் பெற்றான். பெற்றும் நல்லெண்ணமின்றி, முதலில் இந்திராணியை மணக்கவேண்டும் என்று விரும்பினான். ஆகையால், தன் பதவிக்கேற்ப எழு முனிவர்கள் தாங்கிச் செல்லும் சிவிகையிலேறி அவளிடத்திற்குச் சென்றான். செல்லும்போது, 'அவளைக் காணவேண்டும்' என்னும் அவசரத்தினால், 'விரைவிற்செல்க' என்னும் பொருள் தரும் "சர்ப்ப! சர்ப்ப!" என்று சொல்லிப் பல்லக்கை அழுத்தித் தூண்டினான். அது முதலிற் செல்லும் குறுமுனியாகிய அகஸ்தியர் தோளில் உறுத்தியது. உடனே அவர் நோயைப் பொறாமல், மன நொந்து, "சர்ப்ப என்ற காரணத்தினால் நீ சர்ப்ப மாகக்கடவது" என்று அவனைச் சபித்தார். அப்படியே அவன் பூலோகத்தில் மலைப்பாம்பாய் வருந்திக் கிடந்தான். இது ஒப்புர வறியாமையால் வந்த கேடு.

"ஐந்து வந்தாலும் அவசர மாகாது."
"பத்து வந்தாலும் பதற்ற மாகாது."

என்பது பழமொழி. ஒப்புரவினால் கேடு வராது. அங்ஙனம் வந்தாலும், அது தன்னை விற்றாலும் கொள்ளுந் தகுதியை உடையதென்றார். இதற்கு அரிச்சந்திர மன்னன் கதையும் அமைவுடைத்தாம். ஒப்புரவினால் அம் மன்னற்குக் கேடு வந்ததும், அந்தக் கேட்டை யவன் தன்னை விற்றாலுங் கைக்கொண்டதும் உலகப் பிரசித்தம். அரிச்சந்திர மன்னன் ஒப்புர வறிந்ததன்மை பொய்யாமையேயாகும். நகுஷன் ஒப்புரவு இன்னதென்றே உணராமையால் பெருங்கே டடைந்தான். அரிச்சந்திரன் ஒப்புரவையே பெரும் பற்றுப் பற்றிப் பொய்யாமையைப் பொய்யாமை யாற்றினான்; தன்னை விற்றும் அதனால் வருங் கேட்டை மனமொப்பி ஏற்றான். ஆகையால், பெரும் புகழுற்றான். அந்தணர் - அகத்தியர் முதலிய எழு முனிவர். இந்திரன்-நகுஷனாகிய இந்திரன். சர்ப்ப-

வடமொழியில் 'விரைந்து செல்க!' என்னும் பொருள் தருவது. ஏகாரங்கள் அசைநிலைகள்.

[ஈகை]

23. அங்கியுங் குண்டலமு மாகண் டலற்களித்தான்
இங்கிதமாக் கன்ன னிரங்கேசா!—மங்கியே
சாதலி னின்னாத தில்லை யினிததூஉம்
ஈத லியையாக் கடை.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக்கடவுளே!, கன்னன்-கன்னமகாராஜன், அங்கியும் குண்டலமும் - கவசகுண்டலங்களை, ஆகண்டலற்கு - தேவேந்திரனுக்கு, இங்கிதமா-அன்பாக, அளித்தான் - (தான் இறப்பது தெரிந்தும்) கொடுத்தான்; (ஆகையால், இது) மங்கி - உடல் ஒடுங்கி, சாதலின் - செத்துப்போவதைவிட, இன்னாதது - கெட்டது, இல்லை—; அதுவும்-அப்படிச் சாவதும், ஈதல் இயையா கடை - பிறர்க்குக் கொடுத்தல் இசையாதபோது, இனிது - நல்லதாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) இரத்தலுக் கில்லை என்பதினும் இறத்தல் ஏற்றமானது.

(வி - ரை) தேவேந்திரன் தன் மகன் அர்ச்சுனற்கு வெற்றி உண்டாக்க எண்ணி, கன்னனிடத்திற் கவசகுண்டலங்களை ஏற்க வேதியனாகி வந்தான். அது தெரிந்த கன்னன் தந்தையாகிய சூரியன் அசரீரியாய், "ஏ கன்னா! சாதாரண வேதியன் அன்று; தேவேந்திரன் தன் மகன் அர்ச்சுனற்கு வெற்றி யுண்டாக்கும்பொருட்டு உன் கவச குண்டலங்களை ஏற்க வந்தான். கொடாதே! கொடாதே" என்று எச்சரித்தான். எச்சரித்துங் கன்னன், "தடாதே! தடாதே! சாதாரண வேதியன் என்றெண்ணினேன்; அவற்கே நான் இல்லை என்னேன் என்றால், தேவேந்திரனே

வந்து 'தேவி' எனக் கையேற்றால், ஈயாதொழிவனோ? கவசகுண்டல மீக்கத்தால் நான் சாவேனெனிலும், ஈதலே பெருமை; என்றென்றும் இறத்தலுக் கில்லையென்று நிவதனால் இறத்தல் எக்காலத்தும் புகழ்'' என்று சொல்லிக்கொண்டே கவசகுண்டலங்களைக் கொடுத்துக் கீர்த்தி பெற்றான். ஈதல் இயையாக் கடைவாழையைப்போலச் சாதலே நல்லது. இது சாதாரணம். கன்னன் கவசகுண்டலங்களை ஈந்ததனாற் செத்தான், ஈயாதிருந்தால் செத்திரான். குமணனைப்போலவும் ததீசியைப்போலவும் கன்னன் உயிரினும் ஈகையே சிறந்தது என்றெண்ணினான். ஆகையால், பிறர்க்கு உயிரையும் வழங்கினவன் ஆனான். நாயனார் குறளின்படி, ஈயாது சாவதினும் ஈந்து சாவது எண்ணிறந்த புகழுக்கு இடமாகும் என்க. ஏகாரம்: அசைநிலை. அளபெடை. இன்னிசை. இங்கு+இதமா என்று இருமொழியாக் கொள்வதுமாம்.

[புகழ்]

24. மும்மை யுலகு முசுகுந் தனைத்துதிக்கும்
எம்மையாட் கொண்ட இரங்கேசா!—செம்மையாத்
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(ப-ரை) எம்மை ஆட்கொண்ட இரங்கேசா - எங்களை ஆட்கொள்ள எழுந்தருளிய திருவரங்கநாதக் கடவுளே!, மும்மை உலகும்-மேல் நடு கீழ் என்னும் மூன்றுலகங்களும், முசுகுந்தனை - முசுகுந்த சக்கரவர்த்தியை (அவனுடைய உதார குணத்திற்காக), துதிக்கும் - புகழ்ந்து பேசும்; (ஆகையால், இது) தோன்றில் - உலகத்திற் பிறந்தால், புகழொடு செம்மையா தோன்றுக-புகழைத் தேடுங் குணத்தோடு ஒழுங்காய்ப் பிறக்க; அஃது இல்லார் - அக்குணம் இல்லாதவர், தோன்றலின் - பிறப்பதைக் காட்டிலும்

தோன்றாமை நன்று - பிறவாமை நல்லது (என்பதை விளக்கு கின்றது).

(க - ரை) காதவழி பேரில்லான் கழுதையோ டொக்கும்.

(வி - ரை) பன்னிரண்டாண்டு பஞ்சம் வந்த காலத்தில் முசுகுந்த சக்கரவர்த்தி, தன் ஆட்சியிற் குடிகள் வருந்தாவண்ணம் பூமியைக் கண்டித்து, ஊற்று நீர் வருவித்து, அந் நீராற் பயிரை வளர்த்துப் பஞ்ச நிவர்த்தி செய்வித்துப் புகழ் பெற்றார். தேவேந்திரனை வருத்திக் கட்டிக் கொண்டுபோன அரக்கனைக் கொன்று, அவனுக்கு எப்போதும்போல இந்திர பதவி நிலைக் கும்படி முடி சூட்டி, உபகாரஞ் செய்ததனால் முசுகுந்த சக்கர வர்த்தி, அங்கு அவன் பூசித்திருந்த எழுவிடங்காராகிய தியாக ராயக் கடவுளைப் பூலோகத்திற் கொண்டு வந்து, ஏழிடங்களில் தனித்தனி யிருத்திப் பூசித்து, எல்லார்க்கும் பேருதவி செய்து புகழெய்தினார். இதற்காக முசுகுந்தரை இன்றளவும் மும்மை யுலகும் புகழும் என்க. இப்படி இப் படியில் இவரைப்போல் தோன்றில் தோன்றுக; இன்றேல், தோன்றாமை நன்று என்று உணர்க.

## துறவறவியல்

### [அருளுடைமை]

25. வஞ்சப் புறவினுடன் வான்றுலைபி லேறினன்
இன்சொற் சிவிமுன் இரங்கேசா!—எஞ்சாமல்
மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவளே!, முன்- முற்காலத்தில், இனிமை சொல் சிவி - இனிமையாகப் பேசும்

இயல்புடைய சிபிச் சக்கரவர்த்தி, வஞ்சம் புறவினுடன் - வஞ்சக மாக வடிவெடுத்து வந்த இயமனாகிய புறாவினுடன், வான் துலை யில் ஏறினான் - நீண்ட தராசுத் தட்டில் ஏறி நின்றான்; (ஆகை யால், இது) எஞ்சாமல் - கொஞ்சமேனும் பின்னிடையாமல், மன் உயிர் ஓம்பி - நிலை பெற்ற பிற உயிர்களைக் காத்து, அருள் ஆள்வான் கு - அவைகளிடத்தில் இரக்கம் பூண்டிருப்பவனுக்கு, தன் உயிர் அஞ்சும் வினை - தன் உயிர் அஞ்சவேண்டிய பாவ காரியம், இல்லை என்ப - இல்லை யென்று பெரியோர்கள் கூறு வார்கள் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) மன்னுயிரைத் தன்னுயிர் போல் மதிக்கவேண்டும்.

(வி - ரை) சிபிச் சக்கரவர்த்தி சூரிய குலத் தோன்றல்; மெத்த இரக்க முள்ளவன்; மன் உயிரைத் தன்னுயிர் போல் மதிக் கும் இயல் புள்ளவன். இவன் அருளுடைமையை உலகத்தார்க் குணர்த்தும் பொருட்டு, பரமசிவன் ஒரு வேடனாகவும், இயமன் ஒரு புறாவாகவும் வடிவெடுத்துப் புறப்பட்டார்கள். வேடன் புறாவை விடாமற் றுரத்தி வந்தான். புறா பயந்தோடிச் சிபிச் சக்கரவர்த்தி யிடத்தில் அடைக்கலம் புகுந்தது. அதைப் பயந் தீர்த்து ஆதரித்தான் மன்னன். உடனே வேடன் அம் மன் னன் எதிரிற் றோன்றி, "ஏ மன்னா! இப் புறாவை நான் துரத்தி வந்தேன். இப்போது எனக்குப் பசி மிகுந்திருப்பதனால் இதை எனக்குக் கொடுத்துவிடு! கொன்று தின்று பசி ஆறுவேன்" என்றான். "அடைக்கலம் புகுந்தவர்களை ஆதரிப்பது என் கடமை; அதற்கு ஈடாக வேறெந்த மாமிசமேனுந் தருவேன்; கேள்!" என்றான் மன்னவன். "வேறெதுவும் வேண்டேன். உன் துடை மாமிசம் வேண்டும்" என்றான் வேடன். அப்படியே மன்னவன் துலை கொண்டு வந்து நாட்டி, அதன் ஒரு தட்டில் புறாவை வைத்து, அதற்கு ஈடாக மறு தட்டில் தன் துடை மாமிசத்தை

அறுத்து வைத்தான். புறாத்தட்டு பின்னும் அதிகமாய்த் தாழ்ந்தது. அது கண்ட மன்னவன் அதிசயித்துப் பின்னும் தன் மாமிசத்தை அறுத்து வைக்குந்தோறும் புறாத் தட்டு தாழ்ந்து கொண்டே போயிற்று. பிறகு அவன், தானே மாமிசத் தட்டில் ஏறி நின்று புறாத் தட்டை ஏற்றிச் சரிப்படுத்தினான். உடனே பரமசிவன் அவனுடைய அருளுடைமைக்கு வியந்து, மழவிடைமேல் அவற்குக் காட்சி தந்து, கயிலாயத்தில் வாழும் மாட்சியும் அருள் புரிந்தார். மாயவேடந் தாங்கி வந்த இயமனாகிய புறா என்பதனால், 'வஞ்சப் புறவு' என்றார். சிவி, சிபி இரண்டும் ஒன்று, கவி, கபி என்பது போல.

### [புலான் மறுத்தல்]

**26.** அந்தணனைக் கன்மாட பாதனருந்தினான்
இந்த வுலகத் திரங்கேசா!—வந்த
பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
ஆங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, இந்த உலகத்து - இந்த நிலவுலகத்தில், அந்தணனை - (காட்டு வழியாய்த் தன் மனைவியோடு வந்த) வேதியனை, கன்மாடபாதன் - கன்மாடபாதனென்னும் அரசன், அருந்தினான் - (தான் அப்போது அரக்கனா யிருந்தபடியால் கொஞ்சமேனும் கண்ணோட்டமின்றி எடுத்து) விழுங்கினான்; (ஆகையால், இது) போற்றாதார்க்கு - காப்பாற்றாதவர்களுக்கு, வந்த - வரும்படியாய் வந்த, பொருள் ஆட்சி இல்லை - பொருளாலாகிய பயனை ஆளுதல் இல்லை; ஆங்கு - அதுபோல, ஊன் தின்பவர்க்கு - மாமிசம் புசிப்பவர்களுக்கு, அருள் ஆட்சி இல்லை - அருளாலாகிய பயனை ஆளுதல் இல்லை (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ரோன் பென்பது கொன்று நின்றமை.

(வி - ரை) கன்மாடபாதன் என்னும் அரசன் காட்டில் வேட்டைக்குச் சென்றபோது அவனை ஓரரக்கன் எதிர்த்தான். அவனோடு சண்டை செய்து அரசன், அவனைக் கொன்று சென்றான். ஆகையால், அவ் வரக்கன் தம்பி, பழிவாங்கக் கருதி மானிட வேடந் தாங்கி, அவ் வரசன் மடைப் பள்ளியில் மடையனாயிருந்தான். பிறகு ஒரு நாள் எழு முனிவர்களும் கன்மாடபாதன் வீட்டுக்கு விருந்தாளிகளாய் வந்திருந்தார்கள். வந்தவர்களுக்கு அன்னம் படைக்க விரும்பின அரசன் மேற் கூறிய மடையனைச் சமைக்க ஏவினான். அவன் 'அதுதான் தக்க சமயம்' என்று நரமாமிசம் சமைத்து முனிவர்களுக்குப் படைத்தான். அதனால் முனிவர்கள் கோபித்து அரசனை அரக்கனாகச் சபித்து, மடையனாகிய அரக்கனை எரித்துச் சாம்பராக்கிச் சென்றார்கள். "அப்படிப் பன்னிரண்டாண்டு வனவாசஞ் செய்ய வேண்டும்" என்று சாப விமோசனம் பெற்ற கன்மாடபாதன் உடனே அரக்கனாய்க் காட்டிற் றிரிந்துகொண்டிருந்தான். அப்போது ஒரு வேதியனும் அவன் மனைவியும் அவ் வழியே வந்தார்கள் அவர்களைக் கண்ட அரசவரக்கன், கணவனைப் பிடித்துப் புசிக்கப் போனான். அது பொறாத மனைவி எவ்வளவோ வேண்டியும் அதற்கவன் ஒவ்வாமல், வேதியனை விழுங்கிவிட்டான். மனைவி வருந்தி, "பன்னிரண்டு வருஷத்திற்குப் பிறகு நீ உன் நகரஞ் சென்று மனைவியைத் தொட்டால் இறக்கக் கடவை" என்று சபித்துச் சென்றாள். அப்படியே அவன் நகரஞ் சென்றபோது நாயகியைத் தீண்ட முடியாமல் புத்திர பாக்கிய மின்றி வருந்தி, யாகத்தினால் அது பெற்றான். இதனால் ஊன் றின்பவர்க்கு அருளாட்சி இல்லை யென்பது விளங்குகின்றது. ஆட்சி: தொழிற்பெயர். ஆங்கு: உவமவுருபிடைச்சொல்.

[தவம்]

27. வேந்தந் தணர்குலத்து மேலா கியதகைமை
ஏந்துதவத் தேய்ந்தா னிரங்கேசா!—மாந்தர்க்கு
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

(ப - ரை) வேந்து - க்ஷத்திரியனாகிய விசுவாமித்திரன், அந்தணர் குலத்துமேல் ஆகிய தகைமை - பிராமண குலத்தினும் சிறந்த தன்மையை, ஏந்து தவத்து - செய்தவத்தால், எய்ந்தான் - அடைந்தான்; (ஆகையால், இது) மாந்தர்க்கு - மனிதர்களுக்கு, வேண்டிய - வேண்டிய பொருள்களை, வேண்டி அங்கு-வேண்டிய படி, எய்தலால்-(தவமுயற்சியாற்) பொருந்துந் தன்மை உண்டாவதால், செய் தவம் - செய்யத் தருவதாகிய தவமானது, ஈண்டு - இந் நிலவுலகில் (இம்மையில்), முயலப்படும்-(தவறாமற்) செய்யப் பட வேண்டியதாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) தவஞ் செய்பவரோ தங்கருமஞ் செய்பவராவார்.

(வி - ரை) வேந்தனாகிய காதி மைந்தராம் விசுவாமித்திரர் விடா முயற்சியாகிய தவஞ் செய்து, வசிஷ்டரைப் போல வேதிய முனிவராய் விளங்கித் திரிசங்கு மன்னற்கு நக்ஷத்திர பதவி தந்து, பிரமனைப் போலத் தாமும் பிரதி சிருஷ்டி செய்து விளங்கி, எழு முனிவரில் ஒருவராய்ப் புகழ்பெற் றோங்கினர். இன்னும் இவர் வசிஷ்டரை எதிர்த்தமையும், அவரால் தோல்வி யடைந்தும் ஒரே பிடிவாதமாய் அகோர தவஞ் செய்தமையும், ஸ்ரீ ராமபிராற்குப் படைக்கலங்கள் உதவி, திருமண முதலிய முடித்தமையும், வசிஷ்டரைப் போலச் சாதாரண பிரம ருஷியாய் இல்லாமல், பிரமனைப்போலவே படைத்தல் தொழில் செய்தமை யும் தவச் சிறப்புக்குச் சான்று பகரும். ஆகையால், 'மாந்தர்க்கு

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப் படும்' என்றார். முயலப்படும்: (செயப்பாட்டுவினை), 'தவத்தை முயலவேண்டும்' என்பது பொருள்.

[கூடா வொழுக்கம்]

**28.** சங்யாசி யாய்விஜயன் றார்குழலைக் கொண்டகன்றான்
இங்கா னிலம்போற் றிரங்கேசா!—சொன்னால்
வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

(ப - ரை) இ நானிலம் - இவ் வுலகத்தார், போற்றும் - துதிக்கின்ற, இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, விஜயன் - அருச்சுனன், சங்யாசியாய் - சந்நியாசி வேடங்கொண்டு, தார் குழலை - மலர்மாலை யணிந்த கூந்தலையுடைய சுபத்திரையை, கொண்டு அகன்றான் - (காந்தருவ விவாகஞ் செய்து) கொண்டு போனான்; (ஆகையால், இது) சொன்னால் - எடுத்துப் பேசினால், வலி இல் நிலைமையான் - மனவலி யில்லாத வெளி வேட நிலை மையை யுடையவனுடைய, வன்மை உருவம் - பலம் பொருந்திய வெளி வேடமானது, பெற்றம் - பசு, புலியின் தோல் போர்த்து மேய்ந்து அற்று - புலித்தோலை மேலே மூடிக்கொண்டு (வயத் காரரை வெருட்டி வயலில்) மேய்ந்ததுபோலாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) வெளி வேடத்தால் ஒருவரை மதித்தல் கூடாது.

(வி - ரை) அருச்சுனன் சந்நியாசி வேடங் கொண்டு, துவாரகைக்குப்போய், பலராமரைக் கண்டு, "நான் மாத நோன்பு நோற்கவேண்டும்; அதற்கு உமது உதவி வேண்டும்; இடம் பொருள் ஏவல் ஏற்படுத்தித் தருக" என்று கேட்டான். அவனை அருச்சுனனென் றறியாத பலராமர், 'மெய்த்துறவி' என்று

நம்பி, விரதாநுகூலங்கள் ஏற்படுத்தித் தமது இல்லத்திலேயே இருத்தித், தந் தங்கையாகிய சுபத்திரையை அவற்கு உபசாரஞ் செய்ய அமைத்தார். அவளும் அங்ஙனஞ் செய்ய உடன்பட்டு, சந்நியாசியின் இங்கிதத்தில் மயங்கி அவனை அந்தரங்கத்தில் காந்தர்வ விவாகம் செய்துகொள்ள ஒப்பினள். அதற்காகவே வந்திருந்த வெளிவேடதாரியாகிய அருச்சுனன் யார்க்குந் தெரியாமல் அவளைத் தன் மனைவியாக்கி அழைத்துக்கொண்டு இந்திரப் பிரத்தம் போனான். பின்பு இதை அறிந்த பலராமரும் கண்ணனும் "ஆஹா! வெளி வேடத்தால் மோசம் போனோமே!" என்று அதிசயித்து, இந்திரப்பிரத்தம் போய் இருவருக்கும் பகிரங்க மண முடித்து மகிழ்ந்தார்கள். இதனால் வெளிவேடம் நம்பத்தக்க தன்று என்று தெரிகிறது. தார் குழல்: அன்மொழித்தொகை. நால்+நிலம் - 'மருதம்', முல்லை, குறிஞ்சி, நெய்தல் என்னும் நால்வகை நிலங்கள் சேர்ந்தது' என்னும் காரணத்தால் பூமியைக் குறித்தது. பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்தல் உவமம்.

[கள்ளாமை]

**29.** உத்தங்க னோலை யொளித்தநா கக்குலங்கள்
இற்ற புகையா லிரங்கேசா!—மற்றுலகில்
உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, உத்தங்கன் ஓலை - (உத்தங்கன் என்னும் வேதியன் தன் குருதக்கணைக்காகக் கொண்டுவந்த கல்லிழைத்த) காதோலையை, ஒளித்த - களவு செய்துகொண்டு போன, நாகம் குலங்கள் - தக்ஷகனென்னும் பாம்பின் கூட்டங்கள், புகையால் - (இந்திரன் குதி

ரைக் காதால் செலுத்தின) புகை சூழ்ந்துகொண்டதால், இற்ற - மடிந்தன; (ஆகையால், இது) உலகில் - இவ் வுலகத்தில், பிறன் பொருளை - அன்னியன் உடைமையை, கள்ளத்தால் கள்வேம் எனல் - களவால் கைப் பற்றுவோம் என்பதை, உள்ளத்தால் - மனத்தால், உள்ளலும் - நினைத்தலும்; தீதே - கெடுதியே யாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) 'திருடுவோம்' என்று நினைத்தலும் தீதாகும்.

(வி - ரை) உத்தங்கன் என்பான் ஒரு வேதியச் சிறுவன். இவன் ஓதி முடித்து, அக்கால வழக்கப்படி குரு தக்கணை கொடுக்க நினைத்து, "என்ன வேண்டும்?" என்று குருவைக் கேட்டான். அதற்கவர் தம் மனைவி விரும்பியபடி "நாகரத்தினம் இழைத்த காதோலை வேண்டும்" என்றார். அஃதிருக்கு மிடம் குருபத்தினி யால் தெரிந்துகொண்ட உத்தங்கன், அவ் விடத்திற்குப் போய் அதை அரிதிற் பெற்றுத் திரும்புகையில், சந்தியாவந்தன காலஞ் சமீபித்தது. ஆகையால், அவன் ஓலையை ஓரிடத்தில் வைத்துச் சந்தியாவந்தனஞ் செய்துகொண் டிருந்தான். 'அதுதான் சமயம்' என்று நாகலோகத்துப் பாம்பாசனாகிய தக்ஷகன் வந்து அவ் வோலையைக் களவு செய்துகொண்டு நாகலோகம் போனான். பிறகு ஓலையைக் காணாத உத்தங்கன், கள்ளன் உடற் சுவடு பற்றி நாகலோகம் போய்த் தன் உடைமையைக் கேட்டான். அங்கிருந்த தக்ஷகன்முதல் யாவரும் "அதை அறியோம்" என்று பொய் சொன்னார்கள். அது கேட்ட வுத்தங்கன் வெளியே வந்து இந்திரனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான். இந்திரன் காட்சி கொடுத்துத் தான் ஏறி வந்த உச்சைச் சிரவம் என்னும் குதிரைக் காதுவழியாற் புகை வருவித்து, அதை நாகலோகத்திற் செலுத்தினான். அங்கு எங்கெங்கும் புகை சூழ்ந்துகொள்ளவே பாம்புகள் மடிந்தன. அது கண்ட தக்ஷகன்முதலிய பெரும் பாம்புகளுக்கு

அறிவு வந்து, ஓலையைக் கொண்டுவந்து உத்தங்கனிடத்திற் கொடுத்துப் போயின. அதை அவன் கொண்டுபோய்க் குரு பத்தினியிடத்திற் கொடுத்து வணங்கினான்.

கள்ளத்தால் பாம்புகள் மடிந்தமையை இங்குக் கவனிக்க வேண்டியது. மனம் வாக்குக் காயம் என்னும் மும்மை வழியில் முதன்மையாகிய மனத்தாலுங் கள்ளம் கூடாதென்பது இதனாற் பெறப்பட்டது. ஏகாரம் தேற்றம்.

[வாய்மை]

30. மூவரரிச் சந்திரற்கு முன்னின்ற காட்சிபோல்
ஏவர்பெற்றார் மேனா ளிரங்கேசா!—பூவில்
மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மேனாள் - முற்காலத்தில், மூவர் - திரிமூர்த்திகளும், அரிச்சந்திரற்குமுன் - அரிச்சந்திர மகாராஜனுக் கெதிரில், நின்ற காட்சி போல் - காட்சி கொடுத்து நின்றதுபோல, ஏவர் பெற்றார் - யார் அடைந்தார்கள்?, (ஆகையால், இது) பூவில் - இந்தப் பூலோகத்தில், மனத்தொடு - ஒருவன் தன் மனத்தோடு வாக்கும் பொருந்த, வாய்மை மொழியின் - உண்மை பேசுவான் ஆனால், (அவன்) தவத்தொடு - தவத்துடனே, தானம் செய்வாரின் தலை - தானஞ் செய்பவரைக்காட்டிலும் சிறந்தவனாவான் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பொய்யா விரதமே மேலான விரதம்.

(வி - ரை) விசுவாமித்திர மாயத்தால், அரிச்சந்திரன் நாடு நகரங்களை யிழந்து, மனைவிமக்களை விற்று, தானும் புலையற் கடிமையாய் அல்லற் பட்டும், சத்தியந் தவறாமையால், தவத்

தொடு தானஞ் செய்வாரிற் றலைவனானான். ஆகையால், அவன், அவர்களுக்கும் கிடைத்தற்கரிய காட்சியாகிய திரிமூர்த்தி தரிசனங் கிடைக்கப் பெற்றுக் கடைசியாய்த் தன்னுடை நகரங்களை யடைந்து சுகமாய்ப் புகழோ டரசாண்டான். 'தவத்தொடு தானஞ் செய்வாரின்' என்பதில் 'இன்' உருபு எல்லைப் பொருட்டு. 'எவர் பெற்றார்?' என்பது 'யாரும் பெறவில்லை' என்னும் விடை யேற்பதால், உடன்பாட்டு வினா எதிர்மறைப் பொருளில் வந்தது. 'மனத்தொடு வாய்மை மொழியின்' என்பதற்கு, 'மனமும் வாக்கும் ஒத்து உண்மை பேசினால்' என்று பொருள் கொள்க. மனம் வேறு, சொல் வேறு இருப்பது உண்மை யாகாது.

[வெகுளாமை]

31. தாக்கி நிமிவசிட்டர் சாபத்தாற் றம்முடல்விட்
டேக்கமுற்றா ரன்றோ விரங்கேசா!—நோக்கினால்
செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, நிமி வசிட்டர் - நிமிச்சக்கரவர்த்தியும் வசிஷ்டரும், தாக்கி - (ஒருவர் மேல் ஒருவர்) கோபித்தெதிர்த்து, சாபத்தால்-(ஒருவரை யொருவர்) சபித்துக்கொண்டதனால், தம் உடல் விட்டு - தமது சரீரங்களை நீக்கி, ஏக்கம் உற்றார் அன்றோ - வருந்தினார்கள் அல்லவா? (ஆகையால், இது) நோக்கினால் - ஆலோசித்துப் பார்த்தால், செல்லாத இடத்து - செல்லத்தகாத மேலான இடத்தில், சினம் தீது - (கோபத்தைச் செலுத்தினால்) கெடுதி வரும்; செல் இடத்தும் - செல்லத் தகுந்த தாழ்வான இடத்திலும், அதனின் - அந்தக் கோபத்தைக்காட்டிலும், தீய பிற இல் - கெடுதி செய்யத் தக்கவை வேறு இல்லையாம் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) தீராக் கோபம் போரா முடியும்.

(வி - ரை) நிமிச்சக்கரவர்த்தி சரீர சுவர்க்க யாகம் செய்ய வசிஷ்டரிடத்தில் உத்தரவு பெற்றுத் தொடங்கினர். அப்போது வசிஷ்டர் யாதோ ஒரு காரணத்தால் தேவலோகம் போய்த் தங்கியிருந்தார். இங்கு யாகம் நடந்துவந்தது. பிறகு வசிஷ்டர் திரும்பி வந்து யாகம் நடந்தேறுவதைக் கண்டு, தாம் தந்தஉத்தரவை மறந்து, நிமியை நோக்கி, "ஏ நிமி! நீ என் உத்தரவின்றி யாகம் நடத்துவதால், உன் சரீரத்தை விட்டு நீங்கக்கடவை" என்று சபித்தார். அதற்கு நிமியுங் கோபித்து, "நீர் கொடுத்த உத்தரவை மறந்து சபித்தால் நீரும் என்னைப்போலவே சரீரத்தை விடக்கடவீர்" என்று சபித்தான். இருவரும் சரீரமின்றி அந்தரத்தில் திரிந்தார்கள். நாளாகவே இருவர் பொந்திகளும் அழிந்துபோயின. நிமியின் மகன் மிதி யென்பவன் அந்த யாகத்தை முடித்தான். பிறகு பிரமதேவர் வந்து வசிஷ்டரை நோக்கி, "நீ காரணமின்றிக் கோபித்ததனுல் ஊர்வசி வயிற்றிற் பிள்ளையாய்ப் பிறக்கக் கடவை" என்றும், நிமியை நோக்கி, "நீ பிராணிகளுடைய நிமையிலே நிற்கக்கடவை; உன் குலம் சந்திரகுலம் ஆகக்கடவது" என்றும் கோப சாப நீக்கங் கூறினர். வசிஷ்டர் கோபம் செல்லிடத்துக் கெடுதி விளைத்தது. நிமி கோபம் செல்லாவிடத்துக் கெடுதி விளைத்தது. ஆகையால், ஈரிடத்துங் கோபம் சண்டாளம் என்று ஒதுக்குக.

[இன்னா செய்யாமை]

32. பாந்தண் முனிமேற் படுத்தபரிச் சித்தன்றான்
எந்துதுன்ப முற்றா னிரங்கேசா!—மாந்தர்
பிறர்க்கின்னா முற்பகற் செய்யின் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, பாந்தள்-பாம்பை, முனிமேல் படுத்த - வனத்தில் தவஞ்செய்திருந்த ஒரு முனிவன்மேல் போட்ட, பரிச்சித்தன் - பரிச்சித்தனென்னும் சந்திரகுலத்தரசன், தான் வந்து துன்பம் உற்றான் - தான் சாபத்துக்காளாயிருந்த துன்ப மடைந்தான்; (ஆகையால், இது) மாந்தர் - மனிதர்கள், பிறர்க்கு - அன்னியர்க்கு, இன்னா - கெடுதிகள், முன் பகல் செய்யின்-காலையில் செய்தால், தமக்கு - அவர்களுக்கு, இன்னா - கெடுதிகள், பிற்பகல்-(அன்று) மாலையிலேயே, தாமே வரும்-எதிர் பாராதபடி தாமே வந்து சேரும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.

(வி - ரை) சந்திரகுலத்துப் பரிச்சித்தரசன் வேட்டைக்குச் சென்றபோது வனத்தில் ஒரு முனிவன் கண் மூடித் தவஞ்செய்திருந்தான். அதையுணராமல் கண்மூடித் தன்மையாய் அவன் அம்முனிவரைச் சில கேள்விகள் கேட்டான். அதற்கவர் விடை கூறாமைக்குக் கோபித்துக்கொண்ட பரிச்சித்தன் அங்கு மரித்துக் கிடந்த பாம்பொன்றை யெடுத்து அவர் கழுத்தில் மாட்டிச் சென்றான். பிறகு அம் முனி மகன் வந்து, தந்தை கழுத்தில் பாம்பு மாட்டியிருக்கக் கண்டு கோபித்து, "இது செய்தவன் இன்றைக்கேழாநாள் தக்ஷகன் என்னும் பெரும் பாம்பு கடித்து மாளக்கடவன்." என்று அருஞ்சாப மிட்டான். அப்படியே அவனுக்கு விடமாரணம் உண்டாயிற்று. இதனால் 'முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்' என்பது விசதமாகின்றது. நன்மையும் இப்படியே வருவதானாலும் அது எல்லாரும் விரும்பத்தக்கது, செயற்கரியது. ஆகையால் தீமையையே இங்கெடுத் தோதினார். பிறர்க்கு நன்மை செய்யாவிட்டாலும், தீமை செய்யாதிருப்பது நலமெனக் கருதிய நாயனார்:

"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்."

என்றோதி இன்னா செய்தலைத் தடுத்தருளினார்.

[கோல்லாமை]

33. சொல்லார் முனிக்கிறுதி சூழ்கார்த்த வீரன்குலம்
எல்லா மிறந்த திரங்கேசா!—கொல்லலே
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சொல் ஆர் - புகழோடு கூடிய, முனிக்கு - ஜமதக்கினி முனிவர்க்கு, இறுதி சூழ் - மரணத்தை உண்டாக்கிய, கார்த்தவீரியன் குலம் - கார்த்தவீரியார்ச்சுனனுடைய வமிசம், எல்லாம் இறந்தது-அடங்கலும் நாசமாயிற்று; (ஆகையால், இது) கொல்ல - பிறர் கொல்வதனால், தன் உயிர் நீப்பினும் - தன் உயிர் நாசமாவதாயிருந்தாலும், தான் - ஒருவன், பிறிது இனிமை உயிர் நீக்கும் வினை - வேறொன்றின் இனிய உயிரை வாங்கும் காரியத்தை, செய்யற்க - செய்யாதிருக்கக்கடவன் (என்பதை விளங்குகின்றது).

(க - ரை) தன்னுயிர் போகினும் மன்னுயிரை வாட்டற்க.

(வி-ரை) கார்த்தவீரியார்ச்சுனன் வேட்டைக்குச் சென்று பரசுராமன் தந்தையாகிய ஜமதக்கினி ஆசிரமத்தில் சேனையோடு வந்து, அம் முனிவனை வணங்கினான். அவர் மன மகிழ்ந்து, அவற்கும் அவன் சேனைக்கும் காமதேனுவைக் கொண்டு விருந்து செய்வித்தார். விருந்துண்டு மகிழ்ந்த கார்த்தவீரியன், அப் பசுவைக் கட்டிக்கொண்டு போக முயன்றதனால், அது, தன் மயிர்க்கால்கள்தோறும் சேனாவீரர்களை உண்டாக்கி, அவன் சேனை

களை அழித்தது. அதுகண்ட கார்த்தவீரியன் கடுங் கோபங் கொண்டு, தன் கை வாளால் ஜமதக்கினியைக் கொன்றான். தன் கணவன் இறந்ததைக் கண்ட பரசுராமன் தாய், இரேணுகை என்பாள், இருபத்தொரு முறை தன் மார்பி லறைந் தழுதாள். தாய் அழுதலைக் கண்ட பரசுராமர் மனம் பொறுமல், கார்த்த வீரியன் குலமாகிய க்ஷத்திரிய குலத்தை இருபத்தொரு தலை முறை கருவறுத்துக் கொன்றார். ஆகையால், 'தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி, தின்னுயிர் நீக்கும் வினை.' என்றார். ஏகாரம் அசைநிலை.

[நிலையாமை]

34. அட்டகோ ணத்தனுட லத்திரமென் றான்றிசைகள்
எட்டும் பரவு மிரங்கேசா!—மட்டினால்
நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(ப - ரை) திசைகள் எட்டும்-எட்டுத் திக்குகளி லுள்ளவர்க ளும், பரவும் - போற்றுகின்ற, இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, அட்ட கோணத்தன் உடல் - அட்டகோண மகாரிஷி தன் உடலை, அத்திரம் என்றான் - நிலையற்றதென்று சொன்னான்; (ஆகையால், இது) மட்டினால் - ஓர் அளவினால், நில்லாதவற்றை - நிலையில்லாதவைகளை, நிலையின என்று உணரும் - நிலையுடைய வைகளென்று நினைக்கும், புன்மை அறிவு ஆண்மை கடை - அற்ப புத்தியைப் பெற்றிருத்தல் இழிவு (என்பதை விளக்கு கின்றது).

(க - ரை) இவ்வுலக வாழ்க்கை என்றுஞ் சதமன்று.

(வி - ரை) ௩௨-லக்ஷத்து ௯௬-ஆயிரம் வருஷங் கொண்டது திரேதாயுகம்.

கஎ-லக்ஷத்து உஅ-ஆயிரம் வருஷம் கொண்டது திரேதா யுகம்.

அ-லக்ஷத்து சுச-ஆயிரம் வருஷம் கொண்டது துவாபர யுகம்.

ச-லக்ஷத்து ஙஉ-ஆயிரம் வருஷம் கொண்டது கலியுகம்.

ஆக யுகம் நாலுக்கு சுச-லக்ஷத்து அ௦-ஆயிரம் வருஷங் கொண்டது ஒரு சதுர்யுகம். இந்தச் சதுர்யுகம் பிரமனுக்கு ஒரு நாள். இந் நாள் முப்பது கொண்டது ஒரு மாதம். இம் மாதம் பன்னிரண்டு கொண்டது ஒரு வருஷம். இப்படி நூறு வருஷம் கொண்டது பிரமனுக்கு ஆயுள் அளவு.

ஒரு காலத்தில் பிரமனுக்குத் தன் ஆயுள் அளவின் நீட்சியைப்பற்றி அகந்தை உண்டாயிற்று. அந்த அகந்தையை அடக்க அரியாந் திரு நெடுமால், அவனை அழைத்துக்கொண்டு உரோம மகாரிஷி யிடத்திற் போய், "ஓ முனியே! உமக்கு ஆயுள் அளவு என்ன?"என்றார். அதற்கவர், "ஒரு பிரமன் இறந்தால் என் தேகத்தில் ஒரு மயிர் உதிரும். இப்படி மூன்றரை கோடி பிரமர் இறந்தால் என் தேகத்திலுள்ள மூன்றரை கோடி மயிரும் உதிர்ந்து எனக்கு மரண முண்டாகும்" என்றார். அதுகேட்ட பிரமற்குக் கொஞ்சம் கர்வ மடங்கிற்று. பிறகு திருமால் அவனை அழைத்துக் கொண்டு அட்டகோண மகாரிஷியின் ஆசிரமத்திற்குப் போய், அவரைக் கண்டு, "முனிவரே! உமக்கு ஆயுள் அளவு என்ன?" என்று கேட்டார். அதற்கவர், "இப்போது நீர் கண்டுவந்த உரோமரிஷி ஒருவர் இறந்தால் எனக்கு ஒரு கோணல் நிமிரும்; அப்படி எட்டு ரிஷிகள் இறந்தால் எனக்கு எட்டுக்கோணமும் நிமிர்ந்து மரணம் உண்டாகும்" என்றார். அதுகேட்ட மாயவன், "இப்படிப் பல்லாண்டு வாழும் நீர் மச்சுவீடு கட்டி வாழாமல்,

குச்சுவீடு கட்டிக் குடி யிருக்கின்றீர்! அதிலும் உள்ளே ஒருகாலும் வெளியே ஒரு காலுமாய் இருக்கிறீரே! இதென்ன விந்தை?'' என்று கேட்டார். அதற்கு அம் முனிபுங்கவர், "சரீரம் நீர்மேற் குமிழிபோல் நிலையில்லாதது; இதை நம்பி மச்சுவீடும் மாடிவீடும் கட்டிக் கொள்வதால் என்ன பிரயோஜனம்?

"போய்வீடு கட்டிப் புலால்வீட்டைப் போஷித்து
மெய்வீட் டினையிழந்த மேடங்காள்! - பொய்வீடு
போவென்று முங்கள் புலால்வீட்டை யுண்பதற்கு
வாவென்று நல்ல வனம்.''

என்றார் பெரியவரும். ஆகையால், நித்தியானந்த வாழ்க்கைக்கு வேண்டிய மெய்வீடு வேறிருக்கின்றது'' என்று முடித்தார். பிரம தேவற்கு அகந்தை அடங்கிற்று. 'திசைகள்' என்பது இடவாகு பெயராய் மாந்தரை உணர்த்திற்று புல்லறிவாண்மை: எழுவாய்; கடை: பயனிலை.

[துறவு]

35. பீடுபெறு பட்டினத்துப் பிள்ளையைப்போ லேதுறவார்க்
கீடு தருமோ இரங்கேசா!—நீடுலகில்
யானெனதென் னுஞ்செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(ப - ரை) பீடு பெறு (பிரம ஞியா)னத்தால் வீடு பெற்றுப் பெருமை பெற்ற, பட்டினத்து பிள்ளையைப்போல் - பட்டினத் தடிகளைப்போல, துறவார்க்கு - (வீடு வாசலை விட்டு வெளிப் பட்டுப்) போகாதவர்களுக்கு, ஈடு தருமோ - (இந்த மானிடப் பிறவி) பலன் தருமோ? (ஆகையால், இது) நீடு உலகில் - நீண்ட உலகத்தில், யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் - நான் என்னும் அகப்பற்றையும் எனது என்னும் புறப்பற்றையும்

ஒழிப்பவன், வானோர்க்கு உயர்ந்த - தேவர்களுக்கும் கிடைத்தற் கரிதாகிய, உலகம் புகும் - பரமபதத்தை அடைவான் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) அகங்கார மமகாரங்களை அகற்றவேண்டும்.

(வி - ரை) காவிரிப்பூம் பட்டினத்துப் பட்டினத்தடிகள், கோடீசுரராய் வாழ்ந்தவர்; வாணிகத்திற் றிரளாகப் பொருள் குவித்தவர். இவர்க்குப் பட்டினத்துப்பிள்ளை யென்று வழங்குவது இடமடியாகப் பிறந்த பெயர். இவர் காலத்திருந்த பத்திரகிரியார் என்னும் அரசரும் செல்வத்தில் இவர்க்கு இணையல்லர். இவர் விஷயத்தில் மருதவாணர் கருணை சுரந்து, ஒரு நாள் வீட்டில் இவ ரில்லாதபோது, ஒரு பெரியவர்போல் தோன்றி,

"காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே."

என் றெழுதியிருந்த ஒரு சிறு நறுக்கை இவர் மனைவியாரிடத்திற் கொடுத்துச் சென்றார். பிறகு வீட்டுக்கு வந்த இவர் அச் சிறு நறுக்கைக் கண்டவுடனே ஞானோதயமாய்ச் சுமார் பத்துக்கோடி மதிப்புள்ள செல்வத்தையும், மனை மனைவி முதலியவைகளையும் "சட்டி சுட்டது கைவிட்டது" என்றபடி துறந்து அகன்றார். இந்தப் புறப் பற்றுக்களை விட்டபடி இவர் அகப்பற்றையும் அடியோடு தொலைத்துப் பிச்சை புக்குண்டு, ஞானசமாதியில் வீற்றிருந்து, வானோர்க் குயர்ந்த உலகத்திற் புகுந்தருளினார். 'ஈடு தருமோ?' என்பதில் உடன்பாட்டு வினா தராது என்னும் எதிர்மறைப் பொருட்டு. 'இடு' என்பதின் முதனீண்ட தொழிற்பெயர் ஈடு - இந்த மானிடப் பிறவி இடவேண்டிய சீர் அதாவது பலன்.

[மெய்யுணர்தல்]

**36.** கர்ப்பத்தி லேசுகனார் கேடில்பொருளைக்குறித்தார்
இப்புதுமைக் கன்பா மிரங்கேசா!—உற்பத்தி

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சர்ப் பத்தில் - கிளிவடிவங் கொண்ட திலோத்தமையின் கருப்பையில் (இருக்கும்போதே), சுகனார் - சுகமுனிவர், கேடு இல் பொருளை குறித்தார் - அழியாப்பொருளாகிய பிரமஞானத்தைக் குறித் தறிந்துகொண்டார்; இப் புதுமைக்கு-இவ் வபூர்வ காரியத்திற்கு, அன்பு ஆம் - (உடந்தையாயிருக்க, உமக்கு) அன்பு அதிகரித்திருந் தது; (ஆகையால், இது) மெய்மை உணர்வு உற்பத்தி இல்லாத வர்க்கு - உண்மையறி வுற்பத்தி இல்லாதவர்களுக்கு, ஐயுணர்வு எய் தியக்கண்ணும் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம் புலன்களிலும் செல்லும் ஐந்தறிவும் வசப்பட்டவிடத்தும், பயன் இன்று - பிரயோசனம் இல்லையாம் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) உண்மை யறிவில்லாதவர்களுக்கு ஒரு பயனும் இல்லை.

(வி - ரை) கிளிவடிவாயிருந்த திலோத்தமை வயிற்றிற் சுகர் குழந்தையா யிருந்தார். இவர் பிதா வியாச முனிவர். சுகர் தந் தாய் வயிற்றி லிருக்கும்போதே உண்மைப்பொருளாகிய பிரம ஞான மடைந்திருந்தார். ஆகையால், உலகத்திற் பிறந்து மாய்கை யில் உழல அவர்க்கு மன மில்லை. அதனால் அவர் தந்தாய் வயிற்றை விட்டு வெளியில் வாராமலே காலங் கழித்தார். இந்திரன் முதலிய தேவர்களும் எத்தனையோ வேண்டி யழைத்தும், அவர் வெளிப் படாமல், கருவி லிருந்தபடியே அவர்களுக்குத் தக்க சமாதானங் கூறிக் காலம் போக்கினார். இப்படி யவர் திலோத்தமை வயிற்றிற் பன்னிராண்டு கழித்தார். பிறகு திருமால் வந்து அவரை, "வெளி யே வா!" என்றழைத்தார். அதற்கவர், "மாயவராகிய உமது மாயத்துக் கஞ்சியே நான் வெளியில்வர அஞ்சுகிறேன்" என்றார்.

அதுகேட்ட மாயவர், "நம்முடைய மாய்கை ஆரையும் விடாது. உம்மை அது, கண்ணாடியில் உழுந் துருள்போதேனும் வாட்டுவ தற்கு நீர் ஒப்பியே தீரவேண்டும்" என்றார். "அப்படியே" என்று ஒப்பிய சுகர், கண்ணாடி வருவித்து, அதைச் சாய்த்து நிறுத்தி, உளுந்தை உருட்டச் சொல்லித் தாம் வெளியில் வருவது போல் போக்குக் காட்டினார். உளுந்தும் உருண்டோடிற்று. சுக ரும் வெளிப்பட்டு உலக மாய்கையினீங்கிப் பிரமஞானத்தோடு விளங்கினார். மாயவன் மாயம் அவரை ஒன்றுஞ் செய்யாமல் ஒடுங் கிற்று.

மெய்யுணர் வில்லாமல் ஒரு பிரயோஜனமும் இல்லையென் பது இதனால் விளங்குகின்றது. சுகம் - கிளி; சுகனார் - கிளி முகத்தோடிருந்தவர். இவர் பரம வேதாந்தியாய்க் கொஞ்சமேனும் அகப்பற்றுப் புறப்பற்றின்றி, 'சேற்றிலிருந்தும் ஒட்டாத பிள்ளை பூச்சிபோல', உலகத்திருந்தும் அதன் மாய்கையில் சிக்காமல் பிரமஞானியாய்ப் பேறு பெற்று வீடு பெற்றார்.

[அவா அறுத்தல்]

37. தேசஞ்சொல் பத்ரகிரி சிந்தையின்மூ வாசைவிட்டான்
ஈசன் பரவு மிரங்கேசா!—பாச
அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

(ப - ரை) ஈசன் பரவும் இரங்கேசா - உருத்திரன் போற் றும் திருவரங்கநாதக் கடவுளே!, தேசம் சொல் பத்ரகிரி - பல தேசத்தரசரும் புகழ்கின்ற பத்ரகிரியரசன், சிந்தையில் மூன்று ஆசை விட்டான்-தன் மனத்தகத்திற் குடியிருந்த (மண், பெண், பொன் என்னு) மூவித ஆசைகளையும் நீக்கினான்; (ஆகையால், இது) பாச அவாவினை-ஆசையாகிய கயிற்றை, ஆற்ற அறுப்பின்-

முழுதும் அறுத்துவிட்டால், தவாத வினை - தான் கெடாத நல் வினையானது, தான் வேண்டும் ஆற்றான் வரும் - (ஒருவன்) தான் விரும்புகிறபடி உண்டாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ஆசையை அறுத்தவனே அழியாத ஞானி யாவான்.

(வி - ரை) பட்டினத்தார் காலத்திருந்த பத்திரகிரியார் அரசான்மையில், அதி வைபவத்தோடு முந்நூறு பெண்களை விவாகம் பண்ணிக் கொண்டு வாழ்ந்துவந்தார். அவருடைய பிதா கோவிந்தசாமி என்பார் நிரியாண தசையிலிருந்தபோது, மகனை அழைத்து, "தம்பி! நீ பல சாதி சூத்திரப் பெண்களை மணந்திருப்பதால், அவர்கள் பெறு மக்களின் வமிசம் உலகில் நீடித்திருக்குமட்டும் எனக்கு முத்தி கிடையாது; நரகங் கிடைப் பதே நிச்சயம்" என்று வருந்தினர்.

அது கேட்டவுடனே பத்திரகிரியார் தன் அரசாட்சியை விக் கிரமார்க்கனுக்கு வழங்கி, முந்நூறு பெண்களையும், அவர்கள் இஷ்டம்போற் போக விட்டு, மூவாசைகளையும் அறநீக்கித் துறவி யானார். அதனால் அவர் பிதாவுக்கும் முத்தி கிடைத்தது; தாமும் சுஞ்ஞானியாய்ப் பீடு பெற்று வீடுபெற் றுய்ந்தார். ஆற்றான் = ஆறு + ஆன் - விதத்தால். பாச அவா = அவாப் பாசம் = ஆசாபாசம் - ஆசையாகிய கயிறு. அவாவினை: இரண்டாம் வேற்றுமை.

[ஊழ்]

38. சிந்துபதி தந்தையோடு தேர்விசய னுசிறந்தான்
இந்துதவ ழிஞ்சி யிரங்கேசா!—முந்திவரும்
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(ப - ரை) இந்து தவழ் இஞ்சி இரங்கேசா - சந்திரன் தவழும் மதில் சூழ்ந்த திருவரங்கநாதக் கடவுளே!, சிந்துபதி - சயிந்தவன், தந்தையொடு - தன் பிதாவுடனே, தேர் விசயனல்-தேரேறிப் போர் புரிந்த அர்ச்சுனன் கையம்பால், இறந்தான் - மடிந்தான்; (ஆகையால், இது) முந்தி வரும்-ஒருவனுடைய அறிவிற்கு முன்னே வந்து நிற்கும், ஊழின் - ஊழைக் காட்டிலும், பெருமை வலி - பெரிய வலிமையுடையவை, யா உள - எவையிருக்கின்றன? (இல்லை. ஆகையால், அது) மற்று ஒன்று சூழினும் - (அதை வெல்ல) வேறோருபாயஞ் செய்தாலும், தான் முந்துறும் - (அந்த உபாய வாயிலாகவே) அதற்கு முன்னே தான் வந்து நிற்கும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) உள்ளியர் தெள்ளியராயினும் ஊழ்வினை பையநுழையும்.

(வி - ரை) பாரத யுத்தம் பதினாலா நாட் சண்டையிலே, காலையில் அர்ச்சுனன் தேரேறிப் புறப்படுகையில், தன் மகன் அபிமன்னன் இறந்ததைக் குறித்து விசனமுங் கோபமுங் கொண்டு, "என் மகனைக் கொன்றவன் எவனோ அவன் தலையை இன்று சூரியன் மறைவதற்குள் அறுத்து நிலத்து நிலமேற் றள்ளாமற் போவேனானல் நான் நெருப்பிற் குளித்து உயிர் விடக் கடவேன்" என்று சபதங் கூறினான். அது தெரிந்த துரியோதனன்: சயிந்தவனை நடுவில் இருத்தி, அதிரதர்-மகாரதர்-சமரதர்-அர்த்தரதர் அனைவரையும் சூழ நிறுத்தி, அவர்கட்கு நான்கு புறத்திலும் துரோணாசாரியர், கர்னன், அசுவத்தாமன், சகுனி, சல்லியன் முதலியோரை அமர்த்தி, அதற்கப்புறம் தம்பிமார் நூற்றுவரும், பதினோரக்குரோணி சேனையோடும் பல மன்னர்களோடும் கூடியிருந்து காக்கும்படி ஏற்படுத்தியிருந்தான். சயிந்தவனுடைய தந்தை தன் மைந்தன் தலையை எவன் அறுத்து

நிலமேல் போவோனோ அவன் தலை நூறு துண்டாக வெடித்து விழவேண்டும் என்று தவஞ் செய்துகொண்டிருந்தான். சண்டை நடந்துகொண்டிருந்தது. விடிந்து இருபத்தெட்டு நாழிகையாய் விட்டது. சூரியன் மறைய இன்னும் இரண்டு நாழிகை தான் இருந்தது. 'சயிந்தவனுக்கு இனிப் பயமில்லை' என்று எல்லாரும் எண்ணியிருந்தார்கள். உடனே கண்ணபிரான்: ஒரு மாயோபாயஞ் செய்தான். தன் கைச் சக்கராயுதத்தால் சூரியனை மறைத்தான். எல்லாரும் 'எப்போது சூரியன் மறைவான்' என்று எண்ணியிருந்தார்கள் ஆகையால், 'உண்மையாகவே சூரியன் மறைந்தான்; சல்லியன் பிழைத்தான்; அர்ச்சுனன் செத்தான்' என்று எண்ணிக்கொண்டு, அர்ச்சுனன் தீ வளர்த்து நெருப்புக் குளிக்கும் வேடிக்கை பார்க்க வந்து சூழ்ந்துகொண்டார்கள். சயிந்தவனும் 'இனிப் பயமில்லை' என்று துணிந்து, யானைமே லேறி வேடிக்கை பார்க்க வந்துகொண்டிருந்தான்.

அப்போது கண்ணபிரான் அர்ச்சுனனை நோக்கி, "இதோ சயிந்தவன் வருகிறான்; பாணப்பிரயோகஞ் செய்து சபதத்தை முடி!" என்றான். அதற்கு அர்ச்சுனன், "போது மறைந்த தாகையால், அந்தச் சபதம் தப்பிற்று. இனி நான் தீக்குளிக்குஞ் சபதமே நிறைவேறும்" என்றான். "போதிருந்தால்பாணப்பிரயோகஞ் செய்து சயிந்தவன் தலையை அறுப்பாயா?" என்றான் கண்ணபிரான். 'ஆ, ஆஹா! அதற்கென்ன தடை? ஒரு பனைமரப் போது இருந்தாலும் போதும்; அப்படியே செய்வேன்" என்றான் அர்ச்சுனன். உடனே கண்ணபிரான், சக்கராயுதத்தை நீக்கினார். ஒரு பனைமர உயரமல்ல; இரு பனைமர உயரத்திற் போதிருந்ததைக் கண்டான் அர்ச்சுனன்; சற்றேனுந் தாழ்க்காமல் ஓர் அர்த்த சந்திர பாணப்பிரயோகத்தால் சயிந்தவன் தலையை அறுத்து அது நிலமேல் விழுமுன், வாயுவாஸ்திரப் பிரயோகத்தால், அதை,

தவம் பண்ணிக்கொண்டிருந்த சயிந்தவன் தந்தை கையில் இருத்தினான். அங்கிருந்து அது நிலத்தில் விழுந்தது. அதனால் அவன் செய்திருந்த சபதப்படி அவன் தலையே நூறு துண்டாய் வெடித்து விழுந்தது. சயிந்தவனாகிய மகனோடு தந்தையு மாண்டான். சயிந்தவனும் அவன் தந்தையும் மாண்டதனால் துரியோதனன் அடைந்த அவமானமே ஊழ் வலிக்குச் சரியான உவமானம். துரியோதனன் சூழ்ச்சி யெல்லாம் தாழ்ச்சியாய் ஊழ்வலிமுன் நில்லா தோடின.

துறவறவியல் முற்றிற்று.

அறத்துப்பால் முடிந்தது.

---

## 2 - வது, பொருட்பால்

### அரசியல்

[இறை மாட்சி]

**39.** ஒன்றி மறித்தான் உரோணிசக டைச்சௌரி
என்றும் புகாமல் இரங்கேசா!—நன்று
முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறைசெய்து வைக்கப் படும்.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, சௌரி-சனிபகவான், உரோணி சகடை-உரோகணி சகடையில், என்றும் புகாமல்-என்றென்றும் புகவொட்டாமல், ஒன்றி-(தசரதன் சனி மண்டலத்திற்) சென்று, மறித்தான் - தடுத்தான்; (ஆகையால், இது) நன்று - நீதியுடன், முறை செய்து - செங்கோலோச்சி, காப்பாற்றும் மன்னவன் - (குடிகளைப்) பாதுகாக்கும் அரசன், மக்கட்கு - இக் குடிமக்களுக்கு, இறை என்று-(பிறப்பினால் மனித

னாயிறும் ஒழுக்கத்தினால்) தேவனென்று, வைக்கப்படும் - (வேறு பிரித்து) வைக்கப்படுவான் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) செங்கோலோச்சிக் குடிகளை காக்கு மன்னன் தெய்வ மாவான்.

(வி - ரை) 'சனிபகவான் உரோகணி சகடையிற் புகுந்தால் உலகத்தில் பன்னிரண்டாண்டு மழையில்லை' என்று முன்ன தாகவே அறிந்து, பருவதபாரிச சமுத்திரத்தை நாடிக் குடிமக்கள் வலசை வாங்கிச் சென்றார்கள். அதுகண்ட செங்கோலரசனாகிய தசரதன் தேர் ஏறிச் சென்று, சனி மண்டலத்தை யடைந்து, சனி பகவான் உரோகணி சகடையிற் புகுத வொட்டாமல் மறித்துச் சண்டைசெய்து, வென்று, மறுபடியும் என்றென்றும் சனிபகவான் உரோகணி சகடையிற் புகுவதில்லையென்று வாக்குறுதி பெற்றுத் திருமி வந்து, குடிமக்கள் வலசை போவதை நிறுத்தி, பஞ்சம் பாதவிப்பின்றி, க்ஷேமமாக அறுபதினாயிரவருடம் நீதியுடன் ஆட்சி புரிந்தான். ஆகையால், 'ஒன்றி மறுத்தான் உரோணிசக டைச்செளரி, என்றும் புகாமல் இரங்கேசா' என்றார்.

[கல்வி]

40. மல்லல் வியாகரண மாருதிகற் கக்கருதி
எல்லவன்பின் போந்தா னிரங்கேசா!—நல்ல
ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே! மல்லல்- பெரிய, வியாகரணம் - இலக்கணத்தை, மாருதி - அநுமான், கற்க

* உரோகணி, 'உரோணி' என்று இடை குறைந்தது.

கருதி - வாசிக்க விரும்பி, எல்லவன்பின் போந்தான் - சூரியன் பின்னே திரிந்தான்; (ஆகையால், இது) ஒருமைக்கண் - பெறுதற்கரிய சிறந்ததொரு மானிடப் பிறவியில், தான் கற்ற கல்வி - தான் படித்த படிப்பானது, ஒருவற்கு - ஒருவனுக்கு, எழுமையும் - இனி வரும் எழு பிறவியிலும், ஏமாப்பு உடைத்து - உதவுதலை உடையதாகும் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) கல்வியைக் காட்டிலும் சிறந்த பொருள் வேறில்லை. கல்வியே கருந்தனம்.

(வி - ரை) பஞ்சாசதகோடி பூமண்டலங்களுக்கும் அல்லும் பகலும் அறுபது நாழிகையும் ஓயாமல் ஒளியுஞ் சூடுங் கொடுத்துக் கொண்டே இருக்கிறான் சூரிய பகவான். அப்பேர்ப்பட்டவனிடத்தில் இலக்கணம் படிக்க விரும்பினார் வாயு குமாரராகிய அநுமார். கொஞ்சமேனும் ஒழிவில்லாத ஆசானிடத்தில் கல்வி கற்பதென்றால் சாதாரண காரியம் அன்று. கல்வியை விரும்பி, அக் கருமமே கண்ணாயிருந்த அநுமார், ஆசானுக்கு உகந்தபடி அமைந்து நடந்து, இரவி வியாகரணம் என்னும் இலக்கண நூலை ஐயந்திரிபறப் பயின்று தேறினார். மாணவன் நுண்ணறிவு ஆசானாகிய சூரியற்கே அதிசயம் விளைத்தது. ஆகையால், அவன் அநுமாரை வாழ்த்தி வரங்கொடுத் தனுப்பினான். திருவிளக்கில் ஒரு விளக்கேற்றினால் அதிலிருந்து அநேகம் பெரு விளக்குகள் ஏற்றிக்கொள்வதுபோல, இரவி வியாகரணச் சூரிய விளக்கிலிருந்து கொளுத்தின அநுமவிளக்குப் பிறகு அநேகம் பெரு விளக்குகளைக் கொளுத்தினபடி, பலர்க்கும் அதை அநுமார் உபதேசித்துப் பரப்பினார். அதனால் அவர் பேரும் புகழும் இன்பமுற்று விளங்கினார். இன்றளவும் அவர் வியாகரண தர்க்க நூல்களில் வல்லவ ரென்பது உலகப் பிரசித்தம். ஒரு பிறப்பிற் கற்ற கல்வி, எழுபிறப்பிலும் உதவுதலையுடைய தென்பது இதனால் விளங்குவது காண்க.

[கல்லாமை]

41. ஞானசம் பந்தருட னன்றாய்ச் சமணரெதிர்த்
தீனமுற்றா ரன்றோ விரங்கேசா!—ஆன
அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கோளல்.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, சமணர்-மதுரையில் சமணர்கள், ஞானசம்பந்தருடன் - திருஞானசம்பந்த மூர்த்திநாயனாரோடு, நன்றாய் - (தமது அறியாமையை யறியமையால்) தைரியமாய், எதிர்த்து - எதிர்வாதம் செய்து, ஈனம் உற்றார் அன்றோ - அவமானம் அடைந்தார்கள் அல்லவா? (ஆகையால்,இது) நிரம்பிய நூல் இன்றி - நிறைந்த நூலுணர்ச்சியின்றி, கோட்டி கொளல் - சபையிற் பேசுதல், ஆன அரங்கு இன்றி - தகுதியான வகுப்பிடம் இன்றி (அதாவது) காயை வகுத்து வைக்கும் வீட்டிடம் இன்றி, வட்டு ஆடி அற்று - பாய்ச்சிகையுருளையை உருட்டினதுபோலாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) அரை கல்வி கொண்டு அம்பலம் ஏறாதே.

(வி - ரை) ஒரு காலத்தில் சமண் காடு மூடியிருந்த மதுரைக்குச் திருஞானசம்பந்தர், அடியார் கூட்டத்தோடு சென்று, அங்கொரு மடத்திற் றங்கியிருந்தார். அப்போது சமண்காட்டுத்தீ, பற்றி யெரிந்தபடி அவர் மடத்தைச் சமணர் கொளுத்தினார்கள். அது கண்ட நாயனார், தமது தேவார விசேடத்தால் அந்நெருப்பைச் சுரநோயாக்கிப் பாண்டியனைப் பற்றுவித்தார்.

"அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்."

என்பதனால், சமணர் செய்த பிழைக்குப் பாண்டியன் தண்டனை அடைந்தான். நோய் பொறாமல் வருந்தும் பாண்டியன் சமி

ணர் செய்த சிகிச்சை பலியாதது கண்டு, திருஞான சம்பந்தரை வரவழைத்தான். அவர் வந்தது பொறுத சமணர் அவரோடு வாதஞ் செய்ய வந்தார்கள். பாண்டியன் சுரநோயை வலப்புற நோய் இடப்புறநோய் என் றிருபங்காக்கி ஒரு புறம் சம்பந்தரும் மறுபுறம் தாமும் தீர்ப்பதென ஏற்படுத்தி முதல் வாதந் தொடங்கினர்கள். தாமே நோய்க்குக் காரணராகையால், சம்பந்தர் தமது புறநோயை விரைவில் போக்கியருளினர். நோயெல்லாந் திரண்டு சமணர் பக்கஞ் சேர்ந்து பாண்டியனை வருத்தியது. சமணர் தோற்றார்கள். பிறகு சம்பந்தரே முற்றுங் குணப் படுத்தினர்.

இரண்டா முறை அனல்வாதம் தொடங்கின சமணர் தம் மந்திரங்களை ஏடுகளி லெழுதி நெருப்பி லிட்டார்கள். சம்பந்தரும் தமது தேவார ஏட்டை அதில் இட்டார். சம்பந்தர் ஏடு பச்சென் றிருந்தது; சமணர் ஏடுகள் வெந்து சாம்பராயின.

மூன்றுமுறை புனல்வாதஞ் தொடங்கினர்கள். மந்திர ஏடுகளைச் சமணர் வைகையி லிட்டார்கள்; சம்பந்தரும் அப்படியே தமது ஏட்டை வெள்ளத்தில் விட்டார். சமணர் ஏடுகள் வெள்ளஞ் சென்ற வழியே பள்ளத்தி லோடின. சம்பந்தர் ஏடு மிதந்து வெள்ளத்திற் கெதிரேறி ஓடிற்று. அனல்வாத புனல்வாதங்களிலும் சமணர் தோற்கச் சம்பந்தர் வெற்றி பெற்றார். ஞான நூல் கல்லாத சமணர் விவேகமின்றி வீண்வாதஞ் செய்ததனுல் மும்முறையும் தோற்று அவமானம் அடைந்து கழுவேறி மாண்டார்கள். ஆகையால், "அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய, நூலின்றிக் கோட்டி கொளல்" என்றார் நாயனர். 'அல்லலா' என்னும் எதிர்மறை வினு ஆம் என்னும் உடன்பாட்டு விடை தருவது காண்க. எ: அசைநிலை.

[கேள்வி]

42. பாகவதங் கேட்டுப் பரிச்சித்தன் முத்திபெற்றான்
ஏக வுருவா மிரங்கேசா!—சோக
இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.

(ப - ரை) இரங்கேசா - ஏகமூர்த்தியாகிய பரமாத்மாவாய் விளங்கும் திருவரங்கநாதக் கடவுளே!, பரிச்சித்தன் - பரிச்சித்து மகாராஜன், பாகவதம் கேட்டு - சுகரிடத்தில் பாகவதபுராண சிரவணஞ்செய்து, முத்தி பெற்றான்-மோக்ஷ மடைந்தான்;(ஆகை யால், இது) ஒழுக்கம் உடையார் வாய் சொல் - கல்வி யொழுக் கம் உடையவர்களுடைய வாயிற் பிறக்கும் சொல், சோகம் இழுக் கல் உடை உழி - சோர்ந்து வழுக்குதலை உடைய சேற்று நிலத் தில், ஊன்றுகோல் அற்று - ஊன்றுகோல்போல் உதவுந் தன்மை யையுடையது (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) மேன்மக்கள் சொற் கேள். கேள்வி முயல்.

(வி - ரை) பரிச்சித்து மகாராஜன் பெரியோராகிய சுக முனிவரை யடுத்து, அவர்க்குப் பெருமை பண்ணி, அவர் வாய் வார்த்தையை விரும்பிக் கேட்டான். அவர் கல்வி யொழுக்கம் நிரம்பிய பெரியோர் ஆகையால் அவனுக்குப் பாகவத புராண த்தை உபதேசித்தருளினார். அவர் திருவாய் மலர்ந்தருளிய பரி சுத்த மொழியாகிய பாகவத புராணம் அவனுடைய விட மாரணத்தையும் அதற்குக் காரணமான பாவத்தையும் போக்கி அவனைப் பரிசுத்தனாக்கி முத்தி யடைவித்தது. இழுக்கலுடைய சேற்று நிலத்தில் அலைபவர்போல விடமாரணத் துயரத்தில் மூழ்கியிருந்த பரிச்சித்தனுக்குச் சுகமுனிவர் திருவாய்மொழி ஓர் ஊன்றுகோல்போல் உதவிற்று. ஏகாரம் அசைநிலை.

[அறிவுடைமை]

43. சீதரனைப் பார்த்தனன்று சேர்ந்தா னரவுயர்த்தோன்
யாதவரைச் சேர்ந்தா னிரங்கேசா!—ஓதில்
அறிவுடையா ராவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அன்று பாரத யுத்தத்திற்கு முன்பு, சீதரனை - ஸ்ரீ லக்ஷ்மீ மணாளனாகிய கண்ணனை, பார்த்தன் சேர்ந்தான் - (படைத்துணைவனாகப் பெற்று, அவனோடு) அர்ச்சுனன் சேர்ந்துகொண்டான்; அரவு உயர்த்தோன் - சர்ப்பக்கொடியோனாகிய துரியோதனன், யாதவரை சேர்ந்தான் - (ஸ்ரீ கண்ணபிரானுடைய சேனா வீரர்களாகிய) யாதவரைப் படைத்துணைவராகப் பெற்று, அவர்களோடு சேர்ந்துகொண்டான்; (ஆகையால், இது) ஓதில் - சொன்னால், ஆவது அறிவார் அறிவு உடையார்-இனி வருங் காரியத்தை அறிய வல்லவர் அறிவுடையாராவர்; அஃது அறி கல்லாதவர் அறிவு இல்லார் - அதை அறிய மாட்டாதவர் அறிவில்லாதவ ராவர் (என்பதை விளக்குகின்றது.)

(க - ரை) ஆவதறியான் அறிவிலான். முன்பின் அறியாதவன் மூடன்.

(வி - ரை) பாரதயுத்தத்திற்குச் சற்று முந்தி, துரியோதனனும் அர்ச்சுனனும் கண்ணன் படைத்துணையை நாடிச் சென்றார்கள். அப்போது கண்ணன் அவர்களை நோக்கி, "யுத்தத்தில் நான் ஆயுத மெடேன். ஆகையால், நிராயுதபாணியாகிய நான் வேண்டுமோ? ஆயுத வீரர்களாகிய என் சேனை வேண்டுமோ? யாருக்கு யார் வேண்டும்?" என்றான். உடனே அர்ச்சுனன், "நிராயுதபாணியானாலும் நீயே எனக்கு வேண்டும்" என்று கண்ண

னோடு சேர்ந்துகொண்டான். துரியோதனன், "நிராயுத பாணியாற் பல னில்லை; ஆயுதபாணிகளாகிய யாதவவீரரே வேண்டும்" என்று அவர்களோடு கூடிக் கொண்டான்; பிறகு யார் வென்றது, யார் தோற்ற தென்பது எல்லாருக்குந் தெரிந்த விஷயம். அர்ச்சுனன் அறிவுடையான் ஆகையால், இனி ஆவது அறிந்து கண்ணனோடு சேர்ந்துகொண்டான். துரியோதனன் அறிவிலான் ஆகையால் இனி ஆவது அறியாமல் யாதவவீரரோடு கூடிக்கொண்டு தோற்று மடிந்தான்.

[குற்றங் கடிதல்]

**44.** கையரிந்தான் மாறன் கதவிடித்த குற்றத்தால்
எய்யுஞ் சிலைக்கை யிரங்கேசா!—பையத்
தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

(ப - ரை) எய்யும் சிலை கை இரங்கேசா - அம்புவைத் தெய்யுங் கோதண்டத்தை ஸ்ரீ ராமாவதாரத்தில் ஏந்திய கையை உடைய திருவரங்கநாதக் கடவுளே!, கதவு இடித்த குற்றத்தால்- ஒரு வேதியன் வீட்டுக் கதவைத் தட்டின குற்றங் காரணமாக, மாறன் கை அரிந்தான்-பாண்டியன் தன் கையை வெட்டிக்கொண்டான்; (ஆகையால், இது) பழி நாணுவார் - பழிக்கு அஞ்சும் பெரியோர், தினை துணை ஆம் குற்றம் பைய வரினும்-தினையரிசியளவு சிறிய குற்றம் தம்மையு மறியாமலே நேரிட்டாலும், பனை துணை ஆக கொள்வர்-பனையத்தனை பெரியதாகக் கொள்வார்கள் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) சிறிய குற்றத்திற்கும் அஞ்சி நடக்கவேண்டும்.

(வி - ரை) மதுரையி லொருகாலத்தில் வேதியர் வாழும் அக்கிராரத்தில், ஓர் ஏழை வேதியன் காசியாத்திரை செல்வதாகத்

தன் மனைவிக்கு அறிவித்தான். அவளுக்கு வேறு துணை யில்லை யாகையால், அவள் "எனக்கார் துணை?" என்றாள். உனக்கு அரசன் துணை" என்றான் கணவன். அப்போது பாதியிரவாகை யால் நகர் சோதனை வந்த பாண்டியன் அவர்கள் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தான். தன் விஷயத்தில் குடிகளுக் கிருக்கும் நம்பிக்கைக்காக மன மகிழ்ந்த அரசன், மறுநாள்முதல் அவ் வீட்டையும் அதற்காக மற்ற வீடுகளையும் காவல் புரிந்துவந்தான்; அவ் வேதிய மாதுக்குக் கொடுத்தது போலவே, அவ் வக்கிராரத்தி லிருந்த மற்றப் பெண்களுக்கும் அரிசி பருப்பு ஆடை அணிகள் வழங்கினான். இப்படிப் பதினெட்டு மாதங் கழிந்தது. கடைசியாய் ஒருநாள் இரவில் பாண்டியன் அவ் வீட்டண்டை வந்தபோது ஆண்பிள்ளையின் பேச்சரவங் கேட்டது. ஆகையால், அவன் சந்தேகந் தெளியக் கதவைத் தட்டினான். "யாரடா! கதவிடிக்கின் றவன்?" என்று கணவன் சந்தேகத்தோடு அதட்டிக் கேட்டான். "ஐயோ! இவனுக்குச் சந்தேகத்துக்கு இடம் பண்ணிவிட்டோமே! கற்புடைய பார்பனிக்குக் கெடுதி வருமே!" என்று அரசன் கொஞ்சமேனுந் தாழ்க்காமல் மற்ற வீட்டுக் கதவுகளையுந் தட்டிக் கொண்டே போய்விட்டான். விடிந்ததும், அக்கிராரத்தார் அனைவ ரும் அரசனை அணுகி, "யாரோ ஒருவன், போக்கிரி, எங்கள் அக் கிரார வீதியி னுழைந்து, நிர்நிமித்தமாகக் கதவுகளைத் தட்டி எங்க ளுக்குப் பயம் காட்டினான். அவனைப் பிடித்துத் தண்டிக்க வேண் டும்" என்றார்கள். "அப்படியே செய்யலாம்" என்றான் பாண் டியன். அது கேட்ட வேதியர், "அவனைக் கண்டு பிடிக்கத் தாமதிக்கக் கூடாது. ஒருகால் அவன் இன்றைக்கும் வந்தாலும் வருவான். அவனை அதி சாக்கிரதையாய்ப் பிடித்துக் கையை வாங்கிவிடவேண்டும்" என்றார்கள். "நான்தான் அவன்" என்று சொல்லி வாளால் தன் கையைத் தறித்துக்கொண்டான் அரசன். அது கண்ட வேதியர், அரசனால் உண்மை யறிந்து, அவன் கை

யிழந்தமைக்கு வருந்தி, எப்போதும்போல அது வளரும் பெருாட்டு, யாகஞ் செய்தார்கள். அப்படியே அவனுக்குப் பொற்கை வளர்ந்து, பொற்கை மாறன் என்று பெயர் பெற்றான். குற்றம் சிறிதாயினும் பெரிதாகக் கொண்ட பாண்டியன் செய்கை வியக்கற்பாலது.

[பெரியாரைத் துணைக்கோடல்]

45. யோகமுனி ராகவனை யுற்றரக்கர் போர்களைந்தே
யாக முடித்தா னிரங்கேசா!—ஆகையாற்
றக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, யோக முனி - இராஜயோக சாதக மாமுனிவராகிய விசுவாமித்திரர், ராகவனை உற்று - ஸ்ரீ ராமபிரானைத் துணையாகப் பெற்று, அரக்கர் போர் களைந்து - மாரீசன் சுவாகு என்னும் அசுரர் சண்டையை நீக்கி, யாகம் முடித்தான் - தாம் தொடங்கின யாகத்தை நிறைவேற்றிக்கொண்டார்; ஆகையால் - (இது) தக்கார் இனத்தன் ஆய் - மேலோரோடு சேர்ந்துகொண்டவன் ஆகி, தான் ஒழுக வல்லானை - (ஒருவன்) தான் தக்கபடி நடந்துகொள்ள வல்லவனானால் (அவனை), செற்றார் - பகைவர், செய்யக் கிடந்தது இல் - செய்யக் கூடியதாகிய தீங்கு ஒன்றும் இல்லை (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பெரியாரைச் சேர்ந்தாரைப் பகைவ ரஞ்சுவார்கள்.

(வி - ரை) விசுவாமித்திரர் ஸ்ரீ ராமபிரானைத் துணையாகக் கொண்டுபோய்த் தமக்கு முதற் பகையாகிய தாடகையைக் கொல்வித்துப் பிறகு தமது யாகபங்கஞ் செய்த தாடகை மக்களாகிய ‘மாரீசன்’ ‘சுவாகு’ என்பவரில் முன்னவனை

வெருட்டித் தூக்கிக் கடலில் விடுவித்துப் பின்னவனை ஒரே அம்பால் யமபுரஞ் சேர்ப்பித்தார். பிறகு அவர், தமது யாகத்தை இடையூறின்றி முடித்து,

"உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து."

என்றபடி ஸ்ரீ ராமபிரான் தமக்குச் செய்த வுதவிக்கு மாறுதவியாக, அவர்க்குத் தெய்வவாளிகள் வழங்கி, அவரை அழைத்துக் கொண்டு மிதிலாபுரிக்குப் போய்ச் சிவ வில்லை வளைப்பித்துச் சீதையை திருமணஞ் செய்வித்தார். ஏகாரம் அசைநிலை.

[சிற்றினஞ் சேராமை]

**46.** துன்னு சகுனிகன்னன் சொற்கேட் டரவுயர்த்தோன்
என்னபயன் பெற்றா னிரங்கேசா!—மன்னிய
சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அரவு உயர்த்தோன் - சர்ப்பக் கொடியோனாகிய துரியோதனன், துன்னு சகுனி கன்னன் - தனக்கு நட்பினராகப் பொருந்திய சகுனி மாமன், கன்னன் முதலியோருடைய, சொல் கேட்டு - சொல்லைக் கேட்டு, என்ன பயன் பெற்றான் - என்ன பலனை அடைந்தான்? (ஆகையால், இது) பெருமை-பெரியோர் தன்மை, சிறு இனம் அஞ்சும் - அற்பர் உறவை அஞ்சி நீங்கும்; சிறுமை - சிறியோர் இயல்பு, (அற்பர் உறவு உண்டானபோதே அதைச்) சுற்றம் ஆக - உண்மை உறவாக, சூழ்ந்து விடும் - எண்ணித் துணியும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) மூடரை மூடர் கொண்டாடிச் சேர்வார்கள்.

(வி - ரை) வீஷ்மர், துரோணர், கிருபர், அசுவத்தாமன், விதுரன் முதலிய பெரியோ ரினத்தைச் சேர்ந்து அவர்கள் சொல்லைக் கேளாமல், சகுனி-கர்ணன் - துச்சாதனன் முதலிய சிறியோர் சொல்லைக் கேட்டுச் சீரழிந்தான் துரியோதனன் என்பது பாரதத்தில் யார்க்குந் தெரிந்தது. இப்படிக்

"கேடு வரும் பின்னே
மதி கெட்டுவரும் முன்னே."

என்றபடி, மதி கெட்டுச் சிற்றின மஞ்சாமற் சேர்ந்து, அநியாயஞ் செய்து வந்த துரியோதனற்கு, பின்னே வந்த கேடு பெருங் கேடாய் முடிந்தது. உறவினரும் சுற்றத்தாரும் மாண்டதன்றி அவனும் மாண்டு மடிந்து, என்றும் அழியாப் பழிக்கு ஆளானான். ஆகையால், 'சிறுமைதான் சுற்றமாய்ச் சூழ்ந்துவிடும்,' என்றார். 'என்ன பயன் பெற்றான்?' என்னும் உடன்பாட்டு வினா, ஒரு பயனும் பெறவில்லை என்கிற எதிர்மறை விடை தருவது காண்க. தான்: அசைநிலை.

[தெரிந்து செயல்வகை]

47. வீடணன் வன்மம் விளம்ப விலங்கைநகர்
ஈடழிந்த தன்றோ விரங்கேசா!—கூடத்
தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வீடணன் - விபீஷணாழ்வான், வன்மம் விளம்ப-எதிரியின் பகைமை நிலைமையையும் மற்றுமுள்ள உளவுகளையும் ஸ்ரீராமபிராற்குத் தெரிவித்ததனால், இலங்கை நகர் - இலங்காபுரியிலிருந்த இராவணன் முதலியோருடைய, ஈடு - பெருமை, அழிந்தது அன்றோ - கெட்டதல்லவா? (ஆகையால், இது), கூட - கூடியிருக்க, தெரி

ந்த இனத்தொடு - தெரிந்து ஏற்றுக்கொண்ட கூட்டாளியோடு, தேர்ந்து - ஆராய்ந்து, எண்ணி - பிறகு நன்ருய் ஆலோசித்து, செய்வார்க்கு - காரியத்தைச் செய்யும் அரசருக்கு, அருமை பொருள் - செய்து முடித்தற்கரிய பொருள், யாது ஒன்றும் இல்- எதுவும் இல்லை (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) உளவறிந்து காரியஞ் செய்தால் வெற்றி உண்டாகும்.

(வி - ரை) ஸ்ரீ ராமசந்திரன், விபீஷணனை நல்லவனெனக் கண்டு, சத்துருவின் தம்பியென்று கைவிடாமல், அவனுக்கு அபயதானம் அளித்து, கூட்டாளியாகக் கொண்டதனுல், அவன் எதிரியாகிய இராவணனுடைய பகைத் திறத்தையும், அவனுக்குள்ள படைவலிமுதலிய உள்ளளவுகளையும், மற்றுமுள்ள இந்திரசித்தன் கும்பகர்ணன் முதலிய அரக்கர் பலாபலத்தையும் உள்ளபடி உணர்த்தினுன். அவைகளை முந்தி உணர்ந்துகொண்டதனுல் இராமபிரான் முதலியோர் அவைகளுக்குத் தக்கபடி சூழ்ந்து காரியஞ் செய்து, இராவணன் முதலியோரைக் கொன்று வெற்றி பெற்ருர்கள். ஆகையால்,

> 'தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
> கரும்பொருள் யாதொன்று மில்.'

என்ருர். வன்மம் - பகைமையின் உள்ளளவு; மர்மம் எனினுமாம். மர்மம் - இரகசியம். ஈடு - எடுப்பு. 'அரும் பொருள்' என்பதற்குப் 'பெறுதற்கரிய பொருள்' எனினுமாம். 'அன்ரே' என்னும் எதிர் மறைவினு, ஆம் என்னும் உடன்பாட்டு விடை தருவது காண்க.

[வலி யறிதல்]

48. பைதலெனக்கருதிப் பார்க்கவரா மன்சிலையோ
டெய்துதவங் தோற்ரு னிரங்கேசா!—வையத்

னுடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி
யிடைக்கண் முறிந்தார் பலர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, பார்க்கவராமன் - பரசுராமன், பைதல் என்ன கருதி - (ஸ்ரீ ராமபிரானைச்) சிறு பையன் என்றெண்ணி, சிலையோடு - தன் கையிற் கொணர்ந்த விஷ்ணு வில்லோடு, எய்து தவம் தோற்றான் - வருந்திச் செய்த தவத்தையும் இழந்தான்; (ஆகையால், இது) வையத்து - உலகத்தில், உடை தம் வலி அறியார் - ஆள்வினை உடைய தமது படை வலி முதலியவற்றை அறிந்து கொள்ளாதவராகி, ஊக்கத்தின் ஊக்கி - மனவலிமையாற் றம்மின் வலிமையாரோடு சண்டை செய்து, இடைக்கண் முறிந்தார் பலர் - வெற்றி பெறமாட்டாமல் நடுவிலே தோற்றவர் அநேகர் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) தம் பல மறிந்து சண்டை செய்யவேண்டும்.

(வி - ரை) ஸ்ரீ ராமபிரானைச் சிறுபிள்ளை யென்று உல்லங்கனஞ் செய்து வந்தெதிர்த்த பரசுராமன் பட்ட பாடு இராயணத்தில் எல்லாரும் அறிந்தது. சிங்கம் சிறியதாயினும், அதை அசட்டை செய்து வந்தெதிர்த்த யானைக்குச் சமானமானார் பரசுராமர். ஸ்ரீராமபிரான் வலிக்கு முன்னே தம் வலி எம்மாத்திரம் என்று கொஞ்சமேனும் அறிந்து கொள்ளாமல் அவர் தம் மனவலியால் வாய்க்கு வந்தபடி ஏசிப்பேசிக் கடைசியில் தோற்றுக் கூசினார். அவர் கையிற் கொணர்ந்த விஷ்ணு வில்லை ஸ்ரீ ராமபிரான் அநாயாசமாய் வாங்கி வளைத்து நாணேற்றி அதிற் புறப்பட்ட அம்புக்கு அவருடைய தவத்தை இலக்காக்கினார். ஆகையால், அவர் வில்லோடு தவத்தையும் இழந்து அவமான மடைந்தார். இதனால் ‘உடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி, யிடைக்கண் முறிந்தார் பலர்.’ என்பது விசதமாவது காண்க.

[கால மறிதல்]

49 ஆண்டு பதின்மூன் றரவுயர்த்தோன் செய்தவெல்லாம்
ஈண்டுபொறுத் தாண்டான் இரங்கேசா!—வேண்டிய
காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்காதக் கடவுளே!, பதின் மூன்று ஆண்டு-பதின் மூன்று வருடகாலம், அரவு உயர்த்தோன் செய்த எல்லாம் - சர்ப்பக் கொடியோனாகிய துரியோதனன் செய்த கொடுமைகளை யெல்லாம், ஈண்டு - இவ் வுலகத்தில், பொறுத்து - வனவாசமும் அஞ்ஞாத வாசமும் செய்து தரும ராஜன் பொறுத்துக்கொண்டிருந்து, ஆண்டான் - பிறகு அவனைச் சுற்றத்தாரோடு கொன்று அஸ்தினா புரியிலிருந் தரசாண்டான்; (ஆகையால், இது) கலங்காது ஞாலம் கருதுபவர் - தவறாமல் உலகத்தை ஆளவேண்டுமென்று எண்ணும் அரசர், வேண்டிய காலம் கருதி இருப்பர் - தமக்கு அநுகூல மாகவேண்டிய காலத்தை எதிர் நோக்கி இருப்பார்கள் (என்பதை விளக்குகின்றது.

(க - ரை) பொறுத்தார் பூமி யாண்டார்.

(வி - ரை) தருமராஜன் பதின்மூன்று வருஷகாலம் வனவாசமும் அஞ்ஞாத வாசமும் செய்துகொண் டிருந்தபோது, துரியோதனன் செய்துவந்த கொடுமைகள் பொறுக்க முடியாதன வென்பது பாரதத்தில் எல்லார்க்கும் தெரிந்தது. அவைகளை யெல்லாம் தருமராஜன் பதறாமற் பொறுத்துக்கொண்டு வந்ததை அவனுடைய தம்பிமார்களே ஒப்புக்கொள்ள வில்லை. "காலம் வரும், பொறுங்கள்!" என்று அவன் தன் தம்பிமார்களுக்குத் தேறுதல் சொல்லிவந்தான். பிறகு காலம் வந்து பாரதயுத்த

நடந்தபோது அவனும் தம்பிமாரும் தத்தம் போர்த்திறத்தைக் காட்டித் துரியோதனனையும் அவன் நண்பர், சுற்றத்தார்களையும் அடியோடு தொலைத்து, அஸ்தினபுரத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். தருமராஜன் முடி சூடி அரசாண்டான். ஆகையால், காலங் கருதிப் பொறுத்துக்கொண்டிருந்ததின் பலனாக அவன் ஞாலங் கட்டி யாண்டு நற்பேர் பெற்றான்.

"பொறுத்தார் பூமி யாண்டார்.
பொங்கினார் காடாண்டார்."

என்பதை இங்கே கவனிக்கவேண்டும்.

[இடனறிதல்]

50. சார்ந்துபறை கீறிச் சராசந்தன் தன்னுடலை
ஈர்ந்துவென்றான் வீம னிரங்கேசா!—தேர்ந்தக்கால்
எண்ணியா ரெண்ண மிழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வீமன் சார்ந்து - (வீமன் வேதியவேடந் தாங்கிக் கண்ணனோடு) சென்று, பறை கீறி - (சராசந்தன் பட்டணத்தி லிருந்த) பேரிகையைக் கிழித்து, சராசந்தன் தன் உடலை ஈர்ந்து - சராசந்தனுடைய சரீரத்தை இருபிளவாக்கி, வென்றான் - வெற்றி பெற்றான்; (ஆகையால், இது) இடன் அறிந்து - தொழில் முடிப்பதற்குத் தகுந்த இடத்தை அறிந்து, துன்னியார் - சேர்ந்த அரசர், துன்னி செயின் - பொருந்தியிருந்து அத் தொழிலைச் செய்வாராயின், எண்ணியார் - (முன்பு அவரை வெல்ல) எண்ணியிருந்த பகைவர், எண்ணம் இழப்பர் - அவ் வெண்ணத்தை இழந்து தோற்பார்கள் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) இடமறிந்து காரியம் செய்தால் பகைவரை வெல்லலாம்.

(வி - ரை) சராசந்தன் இருதாய்மார் வயிற்றில் அரை, அரை உடலாகப் பிறந்தான். ஆகையால், அந்த அசம்பாவிதத்துக்கு அஞ்சி அவ்வூர் அரசன் அந்த அரை உடல்களைக் கோட்டைக்கு வெளிப்புறத்தில் வீசி யெறிந்தான். நடு நிசியில் சரா என்னும் அரக்கி இரை தேடி அங்கு வந்தபோது, அவ் அரை உடல்களை ஒன்று சேர்த்து, உண்ண மனம் வராமல் வியந்து நோக்கிக் கொண்டிருந்தாள். அதற்குள் பொழுது விடிந்தது. அந்த அதிசயத்தை அவ் வூரார் அனைவருங் கண்டு அரசற்கு அறிவித்தார்கள். அரசன் வந்து சரா என்பவளுக்கு வேண்டிய உணவளித்துச் சந்தோஷப்படுத்தினான். ஆகையால் அவள், தான் ஒன்று சேர்த்த குழந்தைக்குத் தன் பெயரே வழங்கும்படி அதற்குச் சராசந்தன் என்று பெயரிட் டழைக்க வேண்டிக்கொண்டு, அதை விட்டுச் சென்றாள். அரசனும் அப்படியே ஒப்பி அக் குழந்தைக்குச் சராசந்தன் என்று பெயரிட்டு வளர்த்துவந்தான். அவனுக்கு வரத்தினால் தெய்வீகமாய் ஒரு பேரிகை கிடைத்தது. அது சத்துருக்கள் வரவை முன்னம் அறிந்து அறிவிக்கும் ஆற்றல் உடையது, சராசந்தன் வளர்ந்து வயது நிரம்பினபோது அவ்வூரை ஆளும் அரசனாய்ச் சத்துருக்களை வென்று புகழ் பெற்று விளங்கினான்.

தருமராஜன் இராஜசூய யாகம் செய்வதற்குப் பொருள் வேண்டியிருந்தது. அது சேகரிக்கும்பொருட்டுக் கண்ணபிரான் வீமனை அழைத்துக்கொண்டு, சராசந்தன் ஊர்க்குப் போனார். அங்குக் கட்டியிருந்த பேரிகை தங்கள் வரவை அறிவிக்கு முந்தியே, கண்ணபிரான் வீமசேனனைக் கொண்டு அதைக் கிழிப்பித்துச் சராசந்த னரண்மனைக்குள் திடும்பிரவேசமாய் வீமனோடு நுழைந்தார். அது கண்ட அவன் கடுங் கோபங்கொண்டு சண்

டைக்குக் கிளம்பினான். கண்ணபிரான் செய்த சங்கேதப்படி வீமசேனன் கொஞ்சமேனும் பின் வாங்காமல், அவனோடு அகோர மல்யுத்தஞ் செய்து, இரண்டரை நாழிகைக்குள் அவன் உடலை இருபிளவாகக் கிழித்துத் தலைமாறி எறிந்தான். ஆகையால், சராசந்தன் மாண்டான். உடனே கண்ணபிரான், சற்றேனுந் தாழ்க்காமல், அவன் பிள்ளைக்குப் பட்டங் கட்டிவிட்டு, யாகத்துக்காக வேண்டிய பொருளைக் கொள்ளையிட்டு, அங்கிருந்து எடுத்துக் கொண்டுவந்து தருமராஜனிடத்திற் கொடுத்தார். ஆகையால், 'துன்னியார் துன்றிச் செயின், எண்ணியா ரெண்ணமிழப்பர்' என்றார்.

[தெரிந்து தெளிதல்]

51. கன்னற் றெளிந்தாசான் காதலனை யையமுற்றான்
இன்னற் பொலிந்தா னிரங்கேசா!—முன்னமே
தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, கன்னன் - கன்ன மகாராஜனை, தெளிந்து - நம்பி, ஆசான் காதலனை - குருவாகிய துரோணாசாரியர் புத்திரன் அசுவத்தாமனை, ஐயம் உற்றான் - சந்தேகப்பட்டு நம்பாதவனாகிய துரியோதனன், இன்னல் பொலிந்தான் - துன்பத்திற் சிறந்தான்; (ஆகையால், இது) முன்னமே - முந்தியே, தேரான் - (அரசன் ஒருவனை) ஆராயாதவனாகி, தெளிவும் - நம்புதலும், தெளிந்தான்கண் - (அப்படி ஆராய்ந்து) நம்பின ஒருவனிடத்தில், ஐயுறவும் - சந்தேகப்படுதலும், தீராத இடும்பை தரும் - (அவனுக்கு என்றும்) அழியாத் துன்பத்தைக் கொடுக்கும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ஆராயாமல் யாரையும் நம்புதல் கூடாது.

(வி-ரை) துரியோதனன், கன்னனை இன்னனென்றும், இன்ன வித்தையில் வல்லவனென்றும் தெரியாதிருந்தும் நம்பிப் பாரத யுத்தத்தில் துரோணாசாரியர்க்குப் பின்பு படைத்தலைவனாக்கியும்; துரோணாசாரியர் குமாரனென்றும், வில் வித்தையில் வல்லவனென்றும், சிரஞ்சீவியாய் அழியாதவனென்றும் தெரிந்திருந்தும் அசுவத்தாமனைச் சந்தேகித்து, அங்ஙனஞ் செய்யாதொழித்தும் துன்பமுற்ற செய்தி பாரத முணர்ந்தார் யாவர்க்கும் தெரிந்த விஷயமாகும்.

"கேடுவரும் பின்னே, மதி கெட்டுவரு முன்னே."

என்றபடி, மதி கெட்ட மன்னவன் ஒவ்வொருவனும் தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும் கொண்டு தீரா இடும்பைக்காளாவான் என்பதிற் சந்தேக மில்லை. ஏகாரம் தேற்றம்.

[தெரிந்து வினையாடல்]

52. சல்லியனைத் தேருக்குச் சாரதியாய்க் கொண்டதனால்
எல்லவன்சேய் தோற்றா னிரங்கேசா!—சொல்லில்
இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சல்லியனை - சல்லியராஜனை, எல்லவன் சேய் - சூரியகுமாரனாகிய கன்னன், சாரதியாய் கொண்டதனால் - தன் தேருக்குப் பாகனாகக் கொண்டதனால், தோற்றான் - பாரதயுத்தத்தில் தோற்று மடிந்துபோனான்; (ஆகையால், இது) சொல்லில் - எடுத்துச் சொன்னால், இதனை - இத் தொழிலை, இதனால் - இக் கருவியால், இவன் முடிக்கும் என்று - இன்னவன் முடிக்கமாட்டுவான்

என்று, ஆய்ந்து - ஆராய்ந்து (கூறுபடுத்து இம் மூன்றுந் தம் முள் ஒத்திருந்தவிடத்து), அதனை - அத் தொழிலை, அவன் கண்விடல் - அவனிடத்தில் (அரசன்) விடக்கடவன் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) திறந் தெரிந்து வேலை யிடவேண்டும்.

(வி - ரை) இப்படித் திறந் தெரியாமல் சல்லியனைக் கன்ன னுக்குத் தேர்ப்பாக னாக்கினதால் துரியோதனன் அவமான மடைந்தது மன்றிக் கன்னனும் மாண்டொழிந்தான். துரியோ தனன் எண்ணிய தெல்லாம் வேறொன்று மன்று. 'அர்ச்சுனன் தேர்க்குக் கண்ணன் சாரதியாயிருந்தான் ஆகையால் அவனோடு சண்டை செய்யும் கன்னன் தேருக்குச் சாரதியாயிருக்கச் சல்லி யனே தகுதியானவன்' என்ற தப்பெண்ணங் கொண்டான். சல்லி யன் ஆகார புஷ்டியாய், பெருக்கு அரசனாயிருந்தானே யன்றிப் போருக்குந் தேருக்கும் வல்லனல்ல னென்று யாருக்குந் தெரி யும். அப்படியிருந்தும், அதைக் கொஞ்சமேனும் உணராமல், சாம பேத தான தண்டம் என்னும் சதுர்விதோபாயங்களில் வல் லவனாகிய பார்த்தசாரதிக்கு எதிர் சாரதியாகச் சல்லியனை நிய மித்த துரியோதனன் அறிவீனம் வியக்கற்பாலது. இப்படியே அவன், பாரத யுத்தத்தில், 'இதனை இதனால் இவன் முடிக்கும் என் றாராயாமல், அதனை அவன்கண்விட்டுப் பலமுறை தோற்று, அவ மான மடைந்து மாண்டு இகழ்ச்சிக்கு ஆளானான்.

[சுற்றந்தழால்]

53. வில்லாக் கதிபன் விராகனை லவாரக்
கில்லாற்று முய்ந்தா ரிரங்கேசா!—நல்ல
விருப்பறாச் சுற்ற மியைபி னருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வில்லுக்கு அதிபன் - வில்வித்தையில் தன்னை ஒப்பாரில்லாத விதுரனுடைய, விரகினால் - முன்புத்தியினால், ஐவர் - பஞ்சபாண்டவர், அரக்கு இல் உற்றும் - துரியோதனன் கட்டின வஞ்சக அரக்கு மாளிகைக்குள் இருந்தும், உய்ந்தார் - பிழைத்துப் போனார்கள்; (ஆகையால், இது) நல்ல விருப்பு அறாத சுற்றம் இயையின் - என்றும் ஒருபடித்தான அன்பகலாத சுற்றம் ஒருவனுக்குப் பொருந்தி யிருக்குமானால், அரும்பு அறாத ஆக்கம் பலவும் தரும் - (அது) வளர்ந்துகொண்டே யிருக்கும் பலவித செல்வங்களையுங் கொடுக்கும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ஒருவனைப் பற்றி ஓசுத்திரு. அன்புடைய சுற்றத்தால் ஆக்கம் வளரும்.

(வி - ரை) எக்காலத்தும் தன் பிள்ளைகளும் பாண்டவர்களும் பகைத்திருக்கிறார்களென் றறிந்த திருதராட்டிரன், தருமராசனை நோக்கி, "தம்பீ! நீங்களனைவரும், வாரணாவதம் போய் உங்கள் பிதாவுக்குச் சரம கைங்கரியங்களைச் செய்துகொண்டு, ஓராண்டு தங்கியிருந்து திரும்பி வாருங்கள்!" என்றனுப்பினான். ஐவரும் அப்படியே அங்குப் போயிருந்தார்கள். அதுதான் சமயம் என்று துரியோதனன் அவர்களைக் கொல்ல, வாரணாவதத்தில் ஓர் அரக்கு மாளிகை கட்டுவித்து, அவர்களை அதிற் குடியிருக்க வேண்டினான். கள்ளங் கவடறியா உள்ளம் உடையவர்களாகிய ஐவரும் அவன் அன்பிற்கு வியந்து, அதற்கு உடன்பட்டு, நாள் ஏற்படுத்தியிருந்தார்கள். ஐவர்மேல் உண்மை யன்புடைய அவர்கள் சிற்றப்பனாகிய விதுரன், துரியோதனனுடைய வஞ்சகச் சூழ்ச்சியை யறிந்து, அம் மாளிகையை நிருமித்த சிற்பிக்கு அந்தரங்க பரிதானம் செய்து, அதிலிருந்து தப்பி யோடிப் பிழைக்க ஓர் அந்தரங்கச் சுரங்கம் யார்க்குந் தெரியாமல் அவனைக்

கொண்டே செய்வித்து, அதைப்பற்றி வீமனுக்கு மட்டும் சேதி தெரிவித்திருந்தான். தாங்கள் ஏற்படுத்தியிருந்த நன்னாளில் ஐவரும் குந்தியோடு அரக்கு மாளிகையிற் குடி புகுந்தார்கள். குடி புகுந்த அன்றிரவிலேயே துரியோதனன் தன் மந்திரி, புரோசனன் என்பவனை அனுப்பி மாளிகையைக் கொளுத்தக் கட்டளை யிட்டிருந்தான். அவனும் அப்படியே கொஞ்சமேனும் பழிக் கஞ்சாமல் அரையிரவில் ஐவரும் தூங்கும்போது, அதைக் கொளுத்திவிட்டான். ஆயினும், சங்கேதப்படி விழிப்பாயிருந்த வீமன் தன்னுடனிருந்த ஐவரில் தாயையும் தமயனையும் தோள்களின் மேலும், தம்பியரில் அர்ச்சுனனை ஒர் அக்குளிலும், நகுல சகாதேவ ரிருவரையும் மற்றோர் அக்குளிலும் அடக்கித் தூக்கிக் கொண்டு அநாயாசமாய், அந்தரங்க சுரங்கவழியே வெளியேறிப் பிழைத்துப் போனான். விருப்பறாச் சுற்றமாகிய விதுரன் ஒருவன் இருந்ததனால் ஐவருக்கும் அருப்பறா ஆக்கந் தந்தது காண்க. 'அரும்பு அறாத ஆக்கம்' எனப் பிரித்து 'என்றும் அரும்புதலை நீங்காத (அதாவது) என்றும் அரும்பி வளர்ந்துகொண்டே இருக்கும்' என்று பொருளுரைத்தாம். 'வில்லுக்கதிபன்' என்று விதுரனைக் குறித்தது, அவன் வில்லெடுத்தால் வெல்ல வல்லுநர் ஒருவரும் இல்லாதிருந்தமையால் என்க. அவனை அர்ச்சுனனும் வெல்லான். ஆகையால், கண்ணபிரானைப் போலவே அவனும் 'வில்லெடேன்' என்று சபதங் கூறி விடுத்தான் என்க.

[போச்சாவாமை]

54. தன்னார் சடைமுடியைத் தக்கனிழந் தானரனை
என்னாம லன்றோ விரங்கேசா!—மன்னோர்
இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

(பத - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தக்கன் - தக்ஷபிரஜாபதி, அரனை எண்ணாமல் அன்றோ - சிவனை யிகழ்ந்து மதிக்காமையினால் அல்லவோ, தண்மை ஆர் சடைமுடியை இழந்தான் - (தனது) குளிர்ச்சி பொருந்திய சடைத் தலையை இழந்தான்? (ஆகையால், இது) தாம் தம் மகிழ்ச்சியில் மைந்துறும் போழ்து - ஒருவர் தமது செல்வச் செருக்கில் இறுமாந்திருக்கும்போது, இகழ்ச்சியில் கெட்டாரை உள்ளுக - அதனாலாகிய மறதியினால் இகழ்ந்துவிட்டவர்களை (எப்படியேனும்) நினைக்கக்கடவர் (என்பதை விளக்குகின்றது).

(கு - ரை) செல்வச் செருக்கினால் யாரையும் இகழ்ந்து மறந்து விடக்கூடாது.

(வி - ரை) தக்கன் என்பவன் பரமசிவனுக்கு மாமன். அவன் தன் செல்வச் செருக்கினால், பரமசிவனை இகழ்ந்து மறந்துவிட்டு, ஓர் யாகஞ் செய்யத் தொடங்கினான். யாகம் நல்ல காரியம். ஆனாலும், அதைச் செய்தவன் அழுக்காறை மேற்கொண்டிருந்தானாகையால் அவனுக்கு அது கெட்ட காரியமாகவே முடிந்தது. பரமசிவனைத் தவிர மற்றைத் தேவர்களுக் கெல்லாம் அவிப்பாகந் தரவேண்டி அவர்களை வரவழைத்திருந்தான். அவர்களும் அவனைப்போலவே எண்ணித் துணியாமல் யாகத்துக்கு வந்திருந்தார்கள். அது தெரிந்த சிவபிரானுக்குக் கோபம் மூண்டது. கோபமே உருவெடுத்து வந்தது போல அகோர வீரபத்திரர் தோன்றினார். அவரை ஏவி யாகத்தை அழிக்கக் கட்டளையிட்டார் சிவபிரான். அவர் அவ்விடத்திற்குப் போய், யாகத்தை அழித்தது மன்றித் தக்கன் தலையையும் அறுத்தெறிந்தார். அவரைக் கண்டவுடனே மற்றைத் தேவர்களெல்லாம் கையிழந்தவர்களும் - கண்ணிழந்தவர்களும் - பல்விழந்தவர்களும் - மூக்கிழந்தவர்களும் - நாக்கிழந்தவர்களுமாகி ஓட்டம் பிடித்தார்

கள். ஆகையால், ஒருவன் தன் மகிழ்ச்சியில் மைந்தரும்போழ்து இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளவேண்டும். இல்லாவிட்டால் தக்கனுக்கு வந்த கேடு வரும் என்க.

சடைமுடி - சடையையுடைய முடி. தக்கன் தவ விசிட்டன் ஆகையால் அவன் முடியைச் 'சடைமுடி' என்றார்.

[செங்கோன்மை]

55. கண்கொண்டான் பொன்னிக் கரைகட்ட வாரானை
எண்கொண்ட சோழன் இரங்கேசா!—மண்கொண்ட
வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக்கடவுளே!, பொன்னிக் கரை - காவேரிக்கரையை, கட்ட வாரானை - அடைக்க வராத பிரதாபருத்திரன் என்னும் அரசனை, எண் கொண்ட சோழன் - செங்கோலரசனென்று யாவரும் மதித்திருந்த சோழமகாராஜன், கண் கொண்டான் - (அவனுடைய மூன்று கண்களில்) ஒரு கண்ணைக் குத்தி அபராதமாகக் கொண்டான்; (ஆகையால், இது) வெற்றி தருவது - வெற்றியைத் தருவது, மண் கொண்ட - பூமியைத் தன் ஆட்சியிற் கொண்ட, மன்னவன் வேல் அன்று - அரசனுடைய வேலாயுதம் அல்ல, கோல் - அவனுடைய கோலாகும்; அதுவும் - அந்தக் கோலும், கோணாது என்னின் - ஒரு பக்கஞ் சாயாமல் செங்கோலா யிருக்குமாயின் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) அரசனுக்கு வேலாயுதத்தினுங் கோலாயுதஞ் சிறந்ததாம்.

(வி - ரை) காவேரி கரைகண்ட சோழமகாராஜன் அரசாளுங் காலத்தில் அந் நதியின் கரையைக் கட்ட ஐம்பத்தாறு

தேசத் தாசர்களுக்கும் அளந்து விட்டிருந்தான். எல்லாரும் தத்தம் அளவின்படி கரை கட்டி முடித்தார்கள். ஒருவன் மட்டும் சற்றே அசட்டையாய்த் தன் பங்கைக் குறித்த காலத்தில் கட்டி முடிக்காமற் சும்மாவிருந்தான். அவன்தான் பிரதாபருத்திரன். சோழன் கரை கட்டி முடிந்ததை மேற்பார்த்து வரும்போது, கட்டி முடியாதிருந்த கரையைக் கண்டு, "இது யார் பங்கு?" என்ருன். கூட இருந்தவர்கள், "இது பிரதாபருத்திரன் பங்கு" என்ருர்கள். அது கேட்ட சோழன், அவன் படத்தை வரவழைத்து உருவத்தைக் கவனித்து நோக்கினுன். அவனுக்கு எல்லார்க்கும் இருப்பதுபோல இரண்டு கண்கள் இன்றி, மூன்று கண்கள் இருந்தன. "இதனுல்தான் இவனுக்குச் செருக்கதிகம்" என்று, சோழன் அவ் வுருவத்திலிருந்த மூன்ருங் கண்ணுகிய நெற்றிக் கண்ணைத் தன் கை வாளாள் குத்திக் குருடாக்கினுன். சோழன் செங்கோல ஞகையால், அவன் செய்த தண்டனை படத்திற் காயினும், அம் மன்னனும் ஒரு கண்ணிழந்து, அவமானப்பட்டு, விரைந்து வந்து தன் பங்குக் கரையைக் கட்டிச் சோழனை வணங்கி வேண்டிக்கொண்டான். அது கண்டார் யாவரும் சோழன் செங்கோன்மைக்கு வியந்து மகிழ்ந்தார்கள்.

என் கொண்ட - 'எல்லாரும் மனத்தில் மதித்துச் செங்கோலன் என்று கொண்ட' எனலுமாம். அளபெடை இன்னிசை.

[கொடுங்கோன்மை]

56. துன்று புலிக்கிடும்பை சூழ்ந்து புரவேந்தர்
இன்றி யெரிந்தா ரிரங்கேசா!—கன்றியே
அல்லற்பட் டாற்ரு தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, புரம வேந்தர் - திரிபுராதிகள், புவிக்கு - பொருந்திய பூலோகத்திற்கு, இடும்பை சூழ்ந்து-துன்பஞ் செய்து, இன்றி எரிந்தார்-(அரசனுல்) இல்லாமல் வெந்து சாம்பராளுர்கள்; (ஆகையால், இது) செல்வத்தை - அரசனுடைய செல்வமாகிய மரத்தை, தேய்க்கும் படை - குறைக்கும் வாளாவது, கன்றி - மன நொந்து, அல்லல் பட்டு - குடிகள் துன்பப்பட்டு, ஆற்ரு து - (அதைப்) பொறுக்க மாட்டாமல், அழுத கண்ணீர் அன்றோ - அழுது உகுத்த கண்ணீர் அல்லவோ? (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ஏழை யழுத கண்ணீர் கூரிய வாளோ டொக்கும்.

(வி - ரை) திரிபுராதிகள் முறையே செம்பொன், வெண் பொன், கரும்பொன்களாகிய மூன்று கோட்டைகளில் வாழ்ந்து வந்தார்கள். அந்தக் கோட்டைகள் பறக்கும் தன்மை யுடையன. ஆகையால், அவர்கள் தமது வர பலத்தால், அங்கங்கும் பறந்து சென்று பட்டணங்களையும் கோட்டைகளையும் பாழாக்கி உயிர் களுக்குத் துன்பம் செய்து வந்தார்கள். தேவர்களும் அவர்கள் துன்பத்தைச் சகியாமல் முறையிட்டதனுல், சிவபெருமான்: பூமியே தோாகவும், சந்திர சூரியர்களே அதன் சக்கரங்களாகவும், மேருவே வில்லாகவும், ஆதிசேஷனே நாணுகவும், விஷ்ணுவே பாணமாகவும் கொண்டு வந்து, இடையில் தேர் அச்சு முறிந்தத ளுல் சிரித்து அம் மூன்று பட்டணங்களையும் எரித்ததனுல், அவர் கள் மூவரும் சாம்பராய்ப் போனுர்கள். அல்லற்பட் டாற்ரு தளே வரும் அழுத கண்ணீர், திரிபுராதிகள் வர பலத்தையும் செல்வத் தையும் தேய்த்த படையாயினமை காண்க.

ஏகாரம் அசைநிலை. 'அன்றே' என்னும் எதிர்மறை வினு, ஆம் என்னும் உடன்பாட்டு விடை தருவதைக் கவனிக்க.

[வெருவந்த செய்யாமை]

**57.** *தாடகைதன் மைந்தர் தவமுனியை யச்சுறுத்தி*
*ஈடரக்க ராஞ ரிரங்கேசா!—நாடி*
வெருவந்த செய்தொழுகும் வெங்கோல ஞயின்
ஒருவந்த மொல்லைக் கெடும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தாடகைதன் மைந்தர் - தாடகை மக்களாகிய மாரீசன் சுவாகு என்பார், தவம் முனியை அச்சுறுத்தி - தவத்திற் சிறந்த அகத்திய முனிவரைப் பயப்படுத்தி (அதனால்), ஈடு அரக்கர் ஆனர் - அரக்கருக்குச் சமானமானர்கள்; (ஆகையால், இது,) வெருவந்த - (குடிகள்) அஞ்சுகின்ற காரியங்களை, செய்து ஒழுகும் - செய்து நடக்கின்ற, வெம்மை கோலன் ஆயின் - கொடுங்கோலனுப் (அரசன்) இருந்தால், ஒருவந்தம் - நிச்சயமாகவே, ஒல்லை - விரைவில், கெடும் - கெட்டுப்போவான் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) கொடுங்கோலரசன் விரைவில் அழிந்துபோவான்.

(வி - ரை) சுகன் என்ரேர் யக்ஷன் (இயக்கன்) பொதிய மலையைச் சார்ந்த வனத்தில் வந்து, அகத்தியாச்சிரமத்தில் இருந்த பூமரங்களைப் பிடுங்கி நாசமாக்கிச் சேட்டை செய்தான். அது கண்ட அகத்தியமுனிவர், அவனைக் கோபித் தீயினல் எரித்துச் சாம்பராக்கிவிட்டார். அவன் மாண்டது தெரிந்த அவனுடைய மனைவி மக்களாகிய தாடகை, மாரீசன், சுவாகு என்பார், பொதியமலையில் வந்து, பழிக்குப் பழி வாங்க முனிவரைப் பயமுறுத்தினர்கள். அவர்களை அவர் மசகங்களாக எண்ணிக் கோபித்து, "நீவிர் மூவிரும் அரக்க ராகுமின்" எனக் கடுஞ் சாப மிட்டார்: ஆகையால், அவர்கள் மூவரும் அநாதை அரக்கர்களாய்ப்

பாதலத்திற் புகுந்து மாலியவான் ஆதரவில் அடங்கியிருந்து, பிறகு, அரக்கருக்குரிய கொடுங்குணத்தைக் காட்டியதால் ஸ்ரீ ராமன் கைவில்லுக் கிரையாய் மாண்டார்கள்.

[கண்ணோட்டம்]

53. சொல்லுகவென் றங்கதனைத் தூதேவி மாதைவிடல்
இல்லையவ னென்றா னிரங்கேசா!—மெல்ல
ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அங்கதனை - வாலிகுமாரனாகிய அங்கதன் என்பவனை, சொல்லுக என்று - (இராவணனுக்குப் புத்தி) சொல்லிவாவென்று, தூது ஏவி - (நீ) தூதனுப்பியும், (அவன் போய்த் திருமிவந்து) அவன் மாதை விடல் இல்லை என்றான் - '(நான் என்ன சொல்லியும்) அவன் பிராட்டியை விடுகிற விஷயம் இல்லை' என்று சொன்னான். (ஆகையால், இது) ஒறுத்து ஆற்றும் பண்பினார்கண்ணும் - தம்மோடு தண்டஞ் செய்யுந் தன்மையுடைய பகைவரிடத்தும், மெல்ல கண்ணோடி - நிதானமாய்த் தாக்ஷிணியம் செலுத்தி, பொறுத்து ஆற்றும் பண்பே தலை - (அவர் குற்றத்தைப்) பொறுத்துக் கொள்ளும் குணமே (அரசர்க்கு) முதன்மையான குணமாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பகைவரிடத்துந் தாக்ஷிணியஞ் செலுத்துதல் பார்வேந்தர் கடனாம்.

(வி - ரை) ஸ்ரீராமசந்திரர் சுக்கிரீவனைத் தமக்குப் படைத்துணைவனாகக் கொண்டு, சேதுபந்தனம் செய்து, இலங்கையிற் சேர்ந்தபோது, இராவணன் அபசாரஞ் செய்தவனாயிருந்தும்

அவனுக்குப் புத்தி சொல்ல, மெத்தப் பொறுமையோடு, அங் கதனைத் தூதனுப்பினர். அவன் போய் எத்தனையோ திறமான அறிவூட்டியும், "எத்தனை தான் தேய்த்தாலும் பித்தளைக்குத் தன் னுறம் இயற்கை" என்றபடி, அவன் ஒரே பிடிவாதமாய்ப் "பிராட்டி யை விடேன்" என்று சொல்லிவிட்டான். அதை அங்கதன் திருமி வந் துரைக்கக் கேட்ட பிறகே, தாசரதி இராவணனோடு போர் புரிந்து, அவனைக் கொன்றார். ஒருத்தாற்றும் பண்பினனாகிய இராவணனிடத்தும் ஸ்ரீ ராமசந்திரர்க்கு கண்ணோடிப் பொறுத் தாற்றும் பண்பிருந்தமை சால வியக்கற்பாலது.

[ஒற்றுடல்]

59. மேகநா தன்செய்த வேள்விதனை ஒற்றினால்
ஏகியழித் துய்ந்தா ரிரங்கேசா!—சேகரித்த
ஒற்றினு லொற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக்கடவுளே!, மேக நாதன் செய்த வேள்விதனை - இந்திரசித்தன் செய்த நிகும்பலை யாகத்தை, ஒற்றினால் ஏகி அழித்து உயர்ந்தார் - வேவால் (உணர் ந்து) சென்று, அழித்து, (இளையபெருமாள் முதலியோர் வெற்றிபெற்றுப்) பிழைத்தார்கள்; (ஆகையால், இது) ஒற்றினால் ஒற்றி சேகரித்த பொருள் தெரியாத மன்னவன் - வேவால் பகைவரிடத்து நிகழ்பவைகளை அறிந்துகொண் டவற்றின் பிர யோசனத்தை ஆராய்ந்தறியாத மன்னவன், கொற்றம் கொள்ள கிடந்தது இல் - வெற்றிபெறத் தக்க வழி வேறு இல்லை (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) அரசன் ஒற்றால் உளவறிந்து காரியஞ் செய்ய வேண்டும்.

(வி - ரை) இந்திரசித்தன் நிகும்பலையில் செய்திருந்த யாகத்தை இளையபெருமாள் முதலியோர் அறியாதிருந்தார்கள். அவன் இடமென்று மாயமாய் மறைந்திருந்தான். ஆகையால், அவன் இருப்பைப்பற்றிச் சந்தேகமுற்ற இராமபிரான்: விபீஷணனை அனுப்பிப்

"பாம்பறியும் பாம்பின் கால்"

என்றபடி, இந்திரசித்தன் நிலைமையை அறிந்து வரும்படிக் கட்டளையிட்டார். அப்படியே அவர் சென்று, அவன் நிகும்பலையில் யாகஞ் செய்வதை உணர்த்தினர். உடனே இளையபெருமாள் முதலியோரை, ஸ்ரீ ராமபிரான் ஏவி, அவ் யாகத்தை அழிக்கக் கட்டளையிட்டார். அதன்படி அவர்கள் சென்று யாகத்தை யழித்து, இந்திரசித்தனோடு போர் புரிந்து அவனையுங் கொன்று வென்று விளங்கினர்கள். ஒற்றினலொற்றிச் சேகரித்த பொருள் தெரிந்ததனல் வந்த பிரயோசனம் இது. ஆகையால், 'ஒற்றினலொற்றிப் பொருள் தெரியா மன்னவன் கொற்றங் கொளக் கிடந்ததில்' என்ருர்.

[ஊக்க முடைமை]

60. வீசு புகழ்விசயன் விற்றழும்பு சென்னியின்மேல்
ஈசன் றரித்தா னிரங்கேசா!—ஆசையால்
ஆக்க மதர்வினைச் செல்லு மசைவிலா
வூக்க முடையா னுழை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வீசு புகழ் விசயன் - எங்கும் பரவிய கீர்த்தியையுடைய அர்ச்சுனன், வில் தழும்பு - வில்லா லடித்த தழும்பை, ஈசன் - சிவபிரான், சென்னியின்மேல் - தன் சிரசின்மேல், தரித்தான் - (வலியச் சென்று) ஏற்றுக்கொண்டான்; (ஆகையால், இது) ஆசையால் - காரியசித்தி பெறவேண்டும் என்னும் ஆசையினல், அசைவு இல்

லாத ஊக்கம் உடையான் இடை - இடைவிடாத முயற்சி உடையவனிடத்தில், ஆக்கம் - செல்வமானது, அதர்வினாய் செல்லும் - வழி கேட்டுக் கொண்டு வலியச் சென்று சேரும் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்.

(வி - ரை) அர்ச்சுனன், பாசுபதாஸ்திரம் பெறக் கைலையங்கிரிச் சாரலிற் கடுந்தவம் புரிகையில், சிவபிரான் அவன் தவ வைராக்கியத்தை வியந்து, பார்வதிதேவியோடு வேடவடிவந் தாங்கி வந்து, அவனைக் கொல்லத் துரியோதனன் ஏவியிருந்த மூகாசுரன் என்னும் பன்றியைத் துரத்தினார். அது சென்று, அர்ச்சுனன் தவஞ் செய்யுங் கம்பத்தருகில் நின்று அபயதானங் கேட்டது. அப்படியே அவன் தவசிக்கழகாகிய சீவகாருண்ய விசேஷத்தால், அதற்கு அபயம் அளித்தான். உடனே சிவபிரானாகிய வேடன் அங்குச் சென்று, தான் துரத்திய பன்றியை விடச்சொல்லி, அர்ச்சுனனைக் கேட்டார். அவன் "அபயங் காத்தவுயிரைக் கைவிடுவது அழகல்ல" என்று மறுத்தான். தவவேடனுக்கும் சிவவேடனுக்கும் சண்டை நடந்தது. சிவபெருமான், அர்ச்சுனனுடைய வின்னாணியை அறுத்துவிட்டார். ஆகையால், விற்றண்டு நீண்டது. அதுகண்ட அர்ச்சுனற்குக் கோப மூண்டது. ஆகையால், அவன் அந்தத் தண்டத்தால் சிவபிரான் தலையில் மோதி யடித்துக் காய முண்டாக்கினான். அப்படி அன்பனாகிய அவன் செய்ததை இன்பமாய் ஏற்றுக்கொண்டு, சிவபிரான் அவனுக்கு வேண்டிய பாசுபதாஸ்திர முதலிய பொருள்களைத் துன்பந் தீர வழங்கினார். இதனால் விடாத் தவ வைராக்கிய முயற்சியிற் சிறந்த ஊக்க முடையவனாய் விளங்கிய அர்ச்சுனர்க்கு, சிவகடாக்ஷமாகிய ஆக்கம் அதர்வினாய் வலிய வந்தடைந்தமை காண்க.

[மடியின்மை]

61. தூங்குவிழிக் கும்பகன்னன் றுண்டஞ் செவியிழந்தும்
எஞ்சுதலை யுற்றா னிரங்கேசா!—விஞ்சும்
மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, துஞ்சு விழி கும்பகன்னன் - தூங்குங் கண்களையுடைய கும்பகன்னன், துண்டம் செவி இழந்தும் - மூக்கையுங் காதுகளையும் (சுக்ரீவன் கடித்துவிட்டதனால்) போக்கடித்துக்கொண்டும், எஞ்சுதலை உற்றான் - உயிர் பிழைத்திருத்தலைப் பெற்றான்; (ஆகையால், இது) விஞ்சும் மடிமை - மிகுந்த சோம்பலானது, குடிமைக்கண் தங்கின் - ஓர் அரசனுடைய குடியில் பொருந்தி யிருக்குமாயின், தன் ஒன்னார்க்கு - (அது) அவனுடைய பகைவர்களுக்கு, அடிமை புகுத்திவிடும் - (அவனை) அடிமைத்தனஞ் செய்யும்படி நுழைத்து விடும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்.

(வி - ரை) இராமாயண யுத்தத்தில் கும்பகர்னன் சண்டைக்கு வந்து, சகல வானரங்களையுங் கொன்று வெற்றி பெற்று, அதற் கடையாளமாக வானரத்தலைவனான சுக்ரீவனைத் தூக்கிக் கொண்டு முரச முழங்க அதிவேகமாகப் போனான். அப்போது அவனுக்கு வழக்கமாயுள்ள சோம்பற் காரணமான தூக்கம் வந்து விட்டது. அதனால் சற்று மயங்கியிருந்தான். 'அதுதான் சரியான சமயம் அவனை அவமானப்படுத்தி யவனிடத்திருந்து தப்புவதற்கு' என்றெண்ணின சுக்ரீவன், அவனுடைய மூக்கையுங் காதுகளையுங் கடித் தெறிந்துவிட்டுத் தப்பி வந்து தன் சேனையோடு சேர்ந்துகொண்டான். பிறகு அவன் மூக்குமுதலியவைகளை இழந்து பிழைத்திருக்கும் அவமானத்தால், அதற்

கப்புறமும் தன் உயிரை வைத்துக்கொண்டிருக்க மாட்டாமல் சண்டையில் மாண்டு மடிந்தான். மடிமை கும்பகன்னன் குடிமையிற் றங்கி யிருந்ததால் அவனை ஒன்னார்க் கடிமை புகுத்தி விடும் அவமானத்தை அவனுக்கு வருவித்தது காண்க.

[ஆள்வினை யுடைமை]

62. செய்துசிவ பூசை சிரஞ்சீவி யாமபயம்
எய்தினன்மார்க் கண்ட னிரங்கேசா!—நொய்தாக
ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சிவ பூசை செய்து - பத்திவைராக்கியச் சுத்த மனத்தோடு சிவலிங்க பூசை செய்து, மார்க்கண்டன் - மார்க்கண்டேய மாமுனிவர், சிரஞ்சீவி ஆம் அபயம் எய்தினன் - என்றும் சாகாமல் உயிருடன் இருக்கும்படி (சிவபெருமானிடத்தில்) அபயதானம் பெற்றார்; (ஆகையால், இது) உலைவு இன்றி தாழாது - ஊழின் விலக்குக்குப் பின்வாங்கித் தாமதிக்காமல், நொய்து ஆக-(அதை) அற்பமாக மதித்து, உஞற்றுபவர் - முயற்சி செய்பவர், ஊழையும்-(பயனை விலக்குவதாகிய) விதியையும், உப்பக்கம் காண்பர். முதுகு காட்டித் (தோற்கக்) காண்பார்கள் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) விதியை மதியாமல் வெல்லலாம்.

(வி - ரை) மிருகண்டுமுனிவர் சிவனை நோக்கித் தவஞ் செய்து, பதினாறாண்டு என்னும் அற்பவயதுள்ள பிள்ளையைப் பெற்று, மார்க்கண்டன் என்று பெயரிட்டு, சகல கலைகளையுங் கற்பித்துப் பதினைந்து பிராயத்துக்குள் பண்டிதனாக்கி வைத்திருந்தார். 'இன்னும் ஓராண்டில் மைந்தன் இறப்பான்' எனத்

தாய் தந்தையர் வருந்தி வாடியிருந்தார்கள். அது கண்ட மார்க்கண்டர் அதற்குக் காரணந் தெரிந்துகொண்டு, சற்றேனும் அஞ்சாமல் அந்த ஆண்டையும் வீண்போக்காமல், பரமசிவனைப் பூசித்துக்கொண் டிருந்தார். பதினாறுமாண்டு முடிவில் இயமன் தோன்றி, சிவலிங்க பூசையில் மனதைச் செலுத்தி யிருந்த மார்க்கண்டேயர்மேற் பாசத்தை வீசினான். உண்மைச் சிவ பூசையிலிருந்த உத்தமர் உயிரைக் கொஞ்சமேனும் அஞ்சாமற் பிடிக்க வந்த இயமனைச் சிவபெருமான் கோபித் துதைத் துருட்டி, அவரை "அஞ்சாதை!" என்று கையமர்த்தி, அபயமளித்து, "என்றும் பதினாறாய் அழியாமல் வாழக்கடவை" என வாழ்த்தி வரங் கொடுத்தார். பதினாறு மாண்டில் மாண்டுபோகவேண்டும் என்றிருந்த ஊழையும் மார்க்கண்டர் தமது விடாமுயற்சியாகிய சிவபூசையின் விசேஷத்தால் உப்பக்கங் கண்டமை காண்க.

[இடுக்க ணழியாமை]

63. விற்ற மனையாளை வெட்டுதலு முற்றதுயர்
இற்றது மன்னற் கிரங்கேசா!—அற்றுலகில்
இன்றுமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மன்னன் கு - அரிச்சந்திர மன்னனுக்கு, விற்ற மனையாளை - (தான் அந்தணனுக்கு விற்றுவிட்ட) மனைவியை, வெட்டுதலும்-வெட்டினவுடனே, உற்ற துயர் - அதுவரையிற் பொருந்தியிருந்த துன்பமானது, இற்றது-நீங்கிற்று; (ஆகையால், இது) உலகில் அற்று-உலக மாயா வின்பத்தில் ஆசையற்று, இன்றுமை - (ஒருவன் தான் தொழில் முயற்சி செய்யுமிடத்து) வருந் துன்பத்தை, இன்பம் என்ன கொள்ளின் - இன்பமாக எண்ணிக்கொள்வா

றுயின், ஒன்னுர் விழையும் சிறப்பு ஆகும் - (அதனால் அவ னுக்குத் தன்) பகைவரும் விரும்பிப் புகழ்கின்ற மேன்மை உண் டாகும் (என்பது விளங்குகின்றது).

(க - ரை) துன்பத்தை யஞ்சாத தூயோர் இன்பத்தை அடைவர்.

(வி - ரை) அரிச்சந்திர மன்னன் சத்தியந் தவறுமல் கோ சிகர்க்குத் தாரை வார்த்துக் கொடுத்த பொன்னுக்காகத் தன் னுடைய கற்பிற் சிறந்த மனைவியாகிய பெண்ணையும் மகனையும் பார்ப்பானுக்கு விற்றுக் கொடுத்துந் தீராமல், தன்னையும் புலைய னுக்கு விற்றுக் கொடுத்துக் கடன் தீர்த்தான். இப்படிச் சத்தி யங் காத்த மன்னன் விஷயத்தில் விசுவாமித்திரர்க்குப் பொரு மை வளர்ந்தது. ஆகையால், அவனுக்கு அவர் அநேக இடுக்கண் கள் இயற்றினர். விடத்தால் மகனைக் கொல்வித்தார். காசி ராஜன் மைந்தனைக் கொன்றவள் என்ன, மனைவியைக் கொலைக் காரி யாக்கினர். அந்தக் கொலைக்காரியைக் கொல்ல அம் மன் னனையே கொலையாளி யாக்கினர். என்ன செய்தும் மன்னன்,

"இடுக்கண் வருங்கால் நகுக, அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்."

என்றபடி கொஞ்சமேனும் அஞ்சாமல், வைராக்கியத்தோடு விள ங்கினன். மனைவியைத் தன் கை வாளால் அஞ்சாமல் வெட்டி னன். அது அவள் கழுத்திற் பூமாலையாய் விழுந்தது. திரிமூர்த்திக ளும் பிரசன்ன மானர்கள். அவர்கள் வாழ்த்தி வரங்கொடுத்து, அவர்களுடைய அடிமைத்தனத்தை நீக்கிப் பழையபடி அவர் களுக்கு நாடுநகரமும் விசுவாமித்திரருடைய வரத்திற் பாதியும் கொடுப்பித்தார்கள். சத்தியத்தை ஒரே பிடிவாதமாகக் கொண்டு, உலகத்தில் மற்றப் பற்றற்று, சத்தியங் காத்தற் ருெழின்

முயற்சியில் வந்த துன்பங்களை யின்பங்களெனக் கொண்டதனால், அரிச்சந்திரன் தன்னுடைய ஒன்னார்களாகிய விசுவாமித்திரர் முதலியோரும் விரும்பிப் புகழும் பெருஞ் சிறப்புற்றான். ஆகை யால், 'இன்றமை யின்ப மெனக்கொளின் ஆகுந்தன், ஒன்னார் விழையுஞ் சிறப்பு' என்றார் என்க.

அரசியல் முடிந்தது.

---

## அமைச்சியல்

[அமைச்சு]

**64.** மானவன்மால் தேவர் வனசரரா மாதைவிடாய்
ஈனமுறு மென்றா னிரங்கேசா!—ஞானத்
தறிகொன் றறியா னெனினு முறுதி
உழையிருந்தான் கூறல் கடன்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மால் - ஸ்ரீமந் நாராயண மூர்த்தியே, மானவன் - (நீ) மனிதன் என்று எண்ணிக்கொண்டிருக்கும் அந்த இராமன்; தேவர் - தேவர்களே, வனசரர் ஆம் - (நீ) குரங்குகள் என்று எண்ணிக்கொண்டிருக்கும் அவனுடைய சேனைகளாம்; (ஆகையால்) மாதை விடாய் - (இது தெரிந்த பிறகாயினும் நீ சாதாரண மானுடப் பெண்ணென் றெண்ணியிருக்கும்) சீதையை விட்டுவிடு!, ஈனம் உறும்-உனக்கு அவமானம் வந்து சேரும், என்றான் - (என்று விபீஷணாழ்வான் தன் தமையனுக்குத் தான் மந்திரிபோற் பின்வருங் காரி யத்தை முன் அறிந்து) சொன்னான்; (ஆகையால், இது) ஞானத்து - நல்லறிவால், அறி கொன்று - (மந்திராலோசனைக் காரர் அறிந்து) சொன்ன நன்மையையும் அழித்து, அறியான் எனினும் - தானும் (அதை) அறியானே யாயினும், உறுதி - (அரசனுக்கு) நன்மை தரும் விஷயத்தை, உழை இருந்தான்-

அவனுக்கருகிலுள்ள மந்திரியானவன், கூறல் கடன் - சொல்லுதல் முறைமையாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) மந்திரிக் கழகு வரும்பொருள் உரைத்தல்.

(வி - ரை) இலங்கையைக் கொளுத்திவிட்டு, அநுமார் சென்ற பிறகு, இராவணன் மந்திராலோசனை செய்தான். அப்போது "குரங்கல்ல இலங்கையைக் கொளுத்தினது; சீதையாகிய நெருப்பை நீயே கொண்டுவந்து வைத்து இலங்கையைக் கொளுத்தினாய்" என்று பலரும் மதி கூற, அவனுக்கு மட்டும் அது தோன்றவேயில்லை. 'இன்னுந் தாழ்ப்பது தகாது' என்று வீபீஷணர் எழுந்து, "அண்ணா! ஸ்ரீமந் நாராயண பரமாத்மாவே, நீ மனிதன் என்று சொல்லும் அந்த இராமன். தேவர்களே நீ குரங்குகள் என்று எண்ணியிருக்கும் அவனுடைய படைகளாம். இன்னும் என்ன வேண்டும்! நரர்களாலும் வானரர்களாலும் சாவாதிருக்க நாம் வரம் பெற்றோம் இல்லை. ஆகையால், அவர்களை வெல்ல நம்மால் ஆகாது. நீ சாதாரண மானுடப் பெண்ணென் றெண்ணிக்கொண்டு வந்து சிறை வைத்திருக்கும் சீதாதேவியை விட்டுவிடு. இல்லையேல் நாம் சாவது சாதம். பிறன்மனைப் புகாமையே மேலான விரதம்" என்று உறுதி கூறினான். அறி கொன்று அறியான் இராவணன் ஆனாலும், அவனுக்கு முதன் மந்திரிபோல் உழை யிருந்தானாகிய விபீஷணன் உறுதி கூறல் தனது கடனென் றுரைத்தமை காண்க.

[சொல்வன்மை]

65\. சோழன் சிவாற்பரச்சொல் தோற்றமைதா னிந்தவுல
கேழு மறிந்த விரங்கேசா!—தாழாமல்
சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சோழன் - கிருமிகண்ட சோழமகாராஜனுடைய, சிவாற்பரம் சொல் - சிவனே பரம் என்னும் சொற்கள், தோற்றமை - (கூரத்தாழ்வாரால்) தோற்றுப்போன விஷயத்தை, இந்த உலகு ஏழும் அறிந்த - இந்த ஏழுலகங்களும் தெரிந்துகொண்டன; (ஆகையால், இது) சொல்லை-(ஒருவன் தான் சொல்லக் கருதிய) வார்த்தையை, வெல்லும் சொல் பிறிது ஓர் சொல் இன்மை அறிந்து - வெல்லவல்ல சொல்லாகிய வேறொரு சொல் இல்லாமையைத் தெரிந்து, அ சொல்லை சொல்லுக - அந்த வார்த்தையைச் சொல்லக்கடவன் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) சொற் சோர்வு படேல். பேச்சறிந்து பேச வேண்டும்.

(வி - ரை) கிருமிகண்ட சோழன் ஒரு காலத்தில் விஷ்ணுத்தலங்களை யழித்து, அத் தலாதிகாரிகளிடத்தில் 'சிவனே பரம்' என்று கையொப்பம் வாங்கிவந்தான். அவன், ஸ்ரீரங்கத்தில் வந்தபோது, அங்குக் கூரத்தாழ்வார் இருந்தார். அவரிடத்திலும் அவன், 'சிவனே பரம்' என்று கையொப்பங் கேட்டான். அவர், 'துரோண மஸ்தி தற்பரம்' என்று கையொப்ப மிட்டார். அதற்கவன் "பொருள் என்ன?" என்றான். சிவம் குறுணி உண்டானபோதே துரோணம் பதக்குண்டு" என்றார் ஆழ்வார். அதைக் கேட்டவுடனே சோழனுக்குக் கோபமுண்டு, ஆழ்வார் கண்ணைப் பிடுங்கிப்போட்டான். பிடுங்கின கண்ணைப் பெருமாள் அருளால் உடனே வரப்பெற்றார் ஆழ்வார். அதுமுதல், சோழன் விட்டுணுத் தலங்களை அழிப்பதை விட்டொழித்தான். 'துரோண மாஸ்தி தற்பரம்' என்ற சொல்லை, வெல்லுஞ் சொல் பிறிதோர் சொல் இன்மை யறிந்து அச் சொல்லை ஆழ்வார் சொன்னதனால், வெற்றி பெற்றமை காண்க. 'அறிந்த திரங்கேசா!' எனக்

கொண்டு, 'தோற்றமை' எழுவாய், 'அறிந்தது' பயனிலை என்னும் சொல்லலாம்; அதற்குத் 'தோல்வியடைந்த தன்மை, எழுலகம் அறிந்த விஷயம்' என்பது பொருள். 'எழுலகம்' என்றது எழு திவுகளை. உலகம்: ஆகுபெயராய் மாந்தரைக் குறித்தது.

[வினைத் தூய்மை]

66. தன்மகனைற் றோற்றாள் தரணிமுழு துங்கைகை
என்மகற்கு நல்கென் றிரங்கேசா!—நன்மை
கடிந்த கடிந்தொராஈ செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, கைகை- கைகேசியானவள், தரணி முழுதும் - உலக ஆட்சி முழுவதையும், என் மகற்கு நல்கு என்று - என்னுடைய பிள்ளையாகிய பரதனுக் குக் கொடு என்று கேட்டு, தன் மகிணன் தோற்றாள் - தன் னுடைய கணவனாகிய தசரதனை யிழந்து கைம்பெண் ஆனாள்; (ஆகையால், இது) நன்மை கடிந்த - நன்மையைத் தள்ளின தியதொழில்களை, கடிந்தொரார்-தள்ளாதவர்களாகி, செய்தார்க்கு- செய்தவர்களுக்கு, அவைதாம்- அத்தியகாரியங்கள்தாம், முடிந்தா லும் - நிறைவேறினாலும், பீழை தரும் - துன்பந் தருவனவாம் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) தீமை விதைத்தால் தீமை விளையும்.

(வி - ரை) தசரதன் தனக்குத் தருவதாகச் சொல்லியிருந்த இரு வரங்களைக் கொண்டு இரண்டு பெரிய தீய காரியங்களைச் செய்யத் துணிந்தாள் கைகேசி. அவைகளில் ஒன்று: இராமன் காடாள்வதும், மற்றொன்று: பரதன் நாடாள்வதுமாம் என்பது எல்லார்க்குந் தெரிந்த விஷயம். இந்தத் தீய காரியங்கள் ஒருவாறு முடிந்தன. ஆனாலும், அவைகள் பெரும் பீழைகளாகிய தசரதன்

சாவையும், கைகையின் கைம்மையையும் பலனாகத் தந்தன. நன்மை கடிந்த கடிந்தொழிலாள் செய்தாளாகிய கைகேசிக்கு, அவைதாம் முடிந்தும் பிழை தந்தமை காண்க. ஆகையால், தீய காரியங்களைத் தவிர்த்து தூய காரியங்களைச் செய்து, வினைத்தூய்மைக் கிடம் பண்ணவேண்டும் என்க. மகிழ்நன் - மகிணன், வாழ்நாள்-வாணாள் என்புழிப்போல.

[வினைத் திட்பம்]

67. ஆர்க்குங் கடனீ ரருந்த வொருகரத்தில்
எற்க வடங்கிற் றிரங்கேசா!—பார்க்கும்
உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

(பத-ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, ஆர்க்கும் - ஒலிக்கின்ற, கடல் நீர் - சமுத்திர ஜலம், அருந்த - (குறுமுனிவராகிய அகத்தியர் உளுந்தளவாக்கிக்) குடிக்கும்படி, ஒரு கரத்தில்- அவருடைய உள்ளங்கையொன்றில், எற்க-கொள்ள, அடங்கிற்று- (அவ்வளவு கொஞ்சமாக) அடங்கிவிட்டது; (ஆகையால், இது) உருள் பெருமை தேர்க்கு - உருண்டோடுகின்ற பெரிய தேருக்கு, அச்சு ஆணி அன்னார் உடைத்து - சக்கரத்தை நிறுத்தும் தடையாணிபோலத் தொழில்செய்வதில் வலியாரை (இவ் வுலகமானது) உடையதா யிருக்கின்றது; (ஆகையால் நாம்) பார்க்கும் உருவு கண்டு எள்ளாமை வேண்டும் - காணும் அவர்களுடைய சிற்றுருவத்தைக் கண்டு, இகழாமை வேண்டும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) தொழிலாலன்றி உருவத்தால் ஒருவரை மதித்தல் கூடாது.

(வி - ரை) சுப்பிரமணியர், அசுரசம்மாரம் பண்ணினகாலத்தில், அவர்களிற் சிலர் கடலில் ஒளித்துக்கொண்டார்கள். அவர்களை வெளிப்படுத்திக் கொல்விக்கும் பொருட்டு, அகத்தியர் கடல்

நீரை உள்ளங்கையில் அள்ளி ஆசமனம் பண்ணிவிட்டார். அத ளுல் அசுரர் வெட்ட வெளியில் அகப்பட்டுக்கொண்டு சுப்பிர மணியர் கைவேலால் மாண்டார்கள் அகத்தியர் பார்வைக்கு அங் குட்டப் பிரமாணமுள்ள குறுமுனிவர். ஆயினும், தவ மகிமையால் கடல்நீரை உளுந்தளவாக்கி உட்கொள்ளக் கூடிய அத்தனை பெரிய தொழிலில் வல்லவராயிருந்தார். ஆகையால், அகத்தியரைப் போன்ற சிற்றுரு வுடையவர்களை நாம் உருவுகண் டெள்ளாமை வேண்டும். அவர்களும் உருள் பெருந்தேர்க் கச்சாணி யன்னாய்ச் செய்தொழிலில் வல்லவராயிருக்கக் கூடும் என்க.

[வினை செயல்வகை]

68. தொட்ட தெரிப்போன் சுடர்முடிமே லங்கைவைப்பித்
திட்டவனைச் செற்று யிரங்கேசா!—முட்ட
வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தொட் டது எரிப்போன் - தான் தொட்டதை எரித்துவிடக் கூடிய வரம் பெற்றிருந்த பத்மாசுரனுடைய, சுடர் முடிமேல் - விளங்கு கின்ற சிரசின்மேல், அங்கை வைப்பித்திட்டு - அவனுடைய உள்ளங்கையை வைக்கச் செய்து, அவனை செற்றாய் - அவனை அழித்தாய்; (ஆகையால், இது) வினையான் - (ஒரு சிறு தந்திரத்) தொழிலால், வினை ஆக்கி கோடல் - வேறொரு பெருந்தொழிலை முடித்துக்கொள்ளுதல், நனை கவுள் - (மதத்தால்) நனைந்த கன் னத்தையுடைய, யானையால் - (ஒரு பழகிய) யானையால், யானை யாத்தற்று - வேறொரு காட்டானையைக் கட்டினதுபோலாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) தந்திரத்தால் ஆகிற காரியம் சரீர பலத்தால் ஆகாது.

(வி - ரை) தன் கையை, யார் தலைமேல் வைத்தாலும் அவர்கள் சாம்பராய்ப் போகவேண்டுமென்று பத்மாசுரன் பரமசிவனிடத்தில் வரம் பெற்றான். ஆகையால், அவன், குரங்கின் கையில் கொள்ளிக்கட்டை அகப்பட்டது போல், அந்த வரத்தைப் பெற்றவுடனே, 'அது பலிக்கிறதா, இல்லையா!' என்று பார்க்க, அதைக் கொடுத்த பரமசிவன் தலைமேலேயே கைவைக்கப் போனான். ருத்திரமூர்த்தியாகிய அவர், அவனிடத் தகப்படாமல் ஒடினார். அவனும் விடாமல் துரத்தினான். கடைசியாக அவர், ஐவேலங்காயில் ஒளித்துக்கொண்டார். அப்போது விஷ்ணுமூர்த்தி மோகினிப் பெண்ணாக வடிவெடுத்து, பத்மாசுரனுக்கெதிரில் தோன்றி, அவனை மயக்கினார். அவனும் அவளைக் கண்டு மோகித்து, "ஏ, பெண்ணே! வா! என்னை வந்து கலியாணம் பண்ணிக்கொள்" என்றான். "நீ அழுக்காயிருக்கிறாய்; ஸ்நானம் பண்ணி வந்தால் கலியாணம் பண்ணிக்கொள்ளுகிறேன்," என்றாள் மோகினி. அவன் குளிக்கத் தண்ணீர் தேடி ஒடினான். விஷ்ணுமூர்த்தி மாய்கையால் எங்கும் தண்ணீர் அகப்படவில்லை. ஒரு மாட்டுக் குளம்படியில் கொஞ்சம் தண்ணீர் தென்பட்டது. அதைக் கண்டதும் பத்மன் மகிழ்ந்து, கையால் தொட்டுத் தன் தலைமேல் தேய்த்ததும் வர பலத்தால் தானே எரிந்து மாண்டான். யானையால் யானை யாத்தது போல, விஷ்ணுமூர்த்தி பத்மனைக் கொல்லும் பெருவினையை, அவன் தலைமேல் அவன் கையை வைப்பிக்கும் ஒரு சிறு தந்திர வினையால் முடித்தமை காண்க.

[தூது]

69. அக்கன் முதலரக்க ராவிதனை வாங்கியூர்
எக்கியனுக் கீந்தா னிரங்கேசா!— மிக்க
இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அக்கன் முதல் அரக்கர் ஆவிதனை வாங்கி - அக்ஷகுமாரன் முதலிய இராக்ஷதர்கள் உயிரைப் போக்கி, ஊர் எக்கியனுக்கு ஈந்தான் - இலங்கையூரை அநுமார் அக்கினி பகவானுக்கு ஆகாரமாக வழங்கினர்; (ஆகையால், இது) மிக்க இறுதி பயப்பினும் - (தன்னரசர் சொல்லச் சொன்ன வார்த்தை தனக்கு) மிகுந்த கெடுதியைத் தருவதாயினும், எஞ்சாது - (வேற்றரச னூரிற் கொஞ்சமேனும்) பின்னிடையாமல், (தான் சென்ற காரியத்தை முடித்துக் கொண்டு திரும்பி வந்து), இறைவர்க்கு - தன் னரசனுக்கு, உறுதி பயப்பது தூது ஆம் - நன்மையைத் தரவல்லவனே தூதனுவான் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) சாமி காரியத்தைத் தளராமல் முடிப்பவனே சரியான தூதனும்.

(வி-ரை) இராமசாமி தூதராகச் சென்ற அநுமார் கடலைத் தாண்டிச் சென்று, வேற்றரசன் ஊராகிய இலங்கையிற் கொஞ்சமேனும் அஞ்சாமல் சீதாதேவியைக் கண்டு, அசோகவனத்தை யழித்து, அக்ஷகுமாரன் முதலிய முந்நூறு வெள்ளம் அரக்கர் சேனையை அநாயாசமாகக் கொன்று, இராவணனை நேரிற் கண்டு, தாம் வந்த காரியத்தை வெளிப்படையாகச் சொல்லி, அவனுக்கு நல்லறிவு கற்பித்துங் கேளாமையால், இலங்கையைக் கொளுத்தித் தாம் சென்ற காரியத்தையும் முடித்துக்கொண்டு வந்தார்.

[மன்னரைச் சேர்ந்தொழுகல்]

70. அக்ஷ னிகியோற் கபசாரஞ் செய்ததனல்
எக்ஷன் பிரிந்தா னிரங்கேசா!—பக்ஷம்
பழைய மெனக்கருதி பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்,

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அக்ஷன் நிதியோன் கு - இயக்கனாகிய குபேரனுக்கு, அபசாரம் செய்ததனால் - குற்றம் செய்ததனால், எக்ஷன் - (அவனுக்கு முடிப்பெடுத்து வரும் மற்றோர்) இயக்கன், பிரிந்தான் - (தன் மனைவியை ஒருவருட காலம்) பிரிந்திருந்தான்; (ஆகையால், இது) பக்ஷம் பழையம் என கருதி - அரசனுக்கு யாம் அன்பினால் பழமையோம் என்றெண்ணி, பண்பு அல்ல செய்யும் கெழுதகைமை - தமக்கு இயல்பலாதவைகளைச் செய்கின்ற வுரிமையானது, கேடு தரும் - (மந்திரிமார்களுக்குக்) கெடுதியை விளைவிக்கும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) வேந்தன் சிறின் ஆந்துணை யில்லை. (மந்திரி) பழையனாயினும் பண்பல்ல செய்யின் (அரசற்குப்) பிழையனாவான்.

(வி - ரை) இயக்கனாகிய குபேரனுக்கு நாள்தோறும் முடிப் பெடுத்துவரும் பழைய மந்திரியாகிய மற்றோர் இயக்கன் தன் மனைவிமேல் வைத்த மோகத்தால் ஒருநாள் அம் முடிப்பை அவளிடத்திற் கொடுத்துவிட்டுத் தன் அரசனாகிய குபேரனிடத்திற்கு வாராமலே இருந்துவிட்டான். அது தெரிந்த குபேரன் அவனைப் பழையன் என்றெண்ணாமல், அவன்மேற் கடுங்கோபங் கொண்டு, "ஏ மந்திரீ! நீ பழையன் ஆகையால் இவ்வளவு துணிவான காரியஞ் செய்தனை! அன்றியும், நீ பெண் மயக்கத்தால் இது செய்தாய் ஆகையால், அவளை நீ ஓராண்டளவு பிரிந்திருக்கக் கடவாய்" என்று தண்டனை விதித்தான். அதன்படி அவன் அவளைப் பிரிந்து ஓர் ஆண்டு விரகவேதனையால் வருந்தினான். ஆகையால், மந்திரிமார், பக்ஷம் பழையம் எனக் கருதி பண்பல்ல செய்யும் கெழுதகைமையால் கேடடைவார்கள்.

[குறிப்பறிதல்]

71. பார்வைகண்டி ராமன் பரன்வில் ஜொடித்தணங்கை
ஏர்வையாக் கொண்டா னிரங்கேசா!—நீர்மையொடும்
ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, இராமன் - ஸ்ரீ ராமபிரான், பார்வை கண்டு - விசுவாமித்திருடைய நோக்கத்தைக் கண்ட மாத்திரையில், பரன் வில் ஒடித்து - சிவபிரானுடைய வில்லை வளைத்து முறித்து, அணங்கை-தெய்வப் பெண்ணாகிய சீதாபிராட்டியை, ஏர்வையா கொண்டான். (தனக்கு) உகந்த மனைவியாகக் கொண்டான்; (ஆகையால், இது) அகத்தது-ஒருவன் மனத்தினிடத்தில் நிகழ்வதை, நீர்மையோடு, உம் - நிரம்பின அறிவோடும், ஐயப்படாது - சந்தேகப்படாமல், தெய்வத்தோடு ஒப்ப கொளல் - (மனிதனேயாயினும்) தெய்வத்தோடு சமானமாக மதிக்கக்கடவர் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) குறிப்பறிய வல்லவன் பரம்; குறிப்பறிய மாட்டாதவன் மரம்.

(வி - ரை) ஜனகன் வில்லைக் கொண்டுவந்து வைத்து, அதன் பெருமையைக் கூறி முடித்தவுடனே, விசுவாமித்திரர் ஸ்ரீராமபிரானை நோக்கினர். அந் நோக்கமே ஊக்கமாக, யாகத்திற் கிளம்பு நெய்யாகுதிப் புகைபோல் எழுந்த இராமபிரான் வில்லை நோக்கினபடியே அருகிற் சென்று, அதை யொரு பூமாலை போல் அநாயாசமாய் எடுத்து வளைத்து முறித்து எறிந்தார். எல்லாரும் அதிசயித்தார்கள். ஜனகன் வாக்களித்திருந்தபடி, சீதாபிராட்டியை ஸ்ரீராமபிரான் திருமணஞ் செய்துகொண்டார். ஸ்ரீ ராமபிரான், விசுவாமித்திரருடைய பார்வை கண்டு,

அவருடைய அகத்தில் நிகழ்ந்ததை நீர்மையோடு ஐயப்படாமல் உணர்ந்து, பான் வில்லை வளைத்தொடித்து, அணங்கை எர்வையாகக் கொண்டார். ஆகையால், அவரைத் தெய்வத்தோடொப்ப அன்றித் தெய்வமாகக் கொள்வதற்குத் தடை யொன்று மில்லையென்க.

அளபெடை, அசைநிறை. உம்மை முற்று. கொளல்: 'அல்' ஈற்று வியங்கோள்.

[அவை யறிதல்]

72. தேவர் குழாத்தினிடைத் தென்பா லகத்தியனை
ஏவினிக ரென்றா னிரங்கேசா!—பூவில்
அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தேவர் குழாத்தினிடை (சிவனுக்குக் கலியாண நடந்தபோது இமயமலைக் கருகில் கூடிய) தேவர் சபைக்கு நடுவிலிருந்த (விசுவகர்மன்), தென்பால் அகத்தியனை ஏவின் - தென்திசையில் அகத்திய முனிவரை அனுப்பினால், நிகர் (ஆம்)-(இப்போது இங்குக் கூடிய கூட்டத்தின் பளுவால் தாழ்ந்துள்ள இந்த வடதிசை) சரியாகும், என்றான் - என்று சொன்னான்; (ஆகையால், இது) பூவில் - இந்தப் பூலோகத்தில், சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர் - சொற்றொகுதியின் பொருளறிந்து பேசவல்ல வாக்குச் சுத்தமுடையவர்கள், அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக - (தாம் கூடியிருக்கும்) சபையின் தன்மையைத் தெரிந்துகொண்டு, யோசித்துப் பேசக்கடவர் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பாத்திரமறிந்து பிச்சை யிடவேண்டும் என்பது போல, சபை யறிந்து பேசவேண்டும்.

(வி - ரை) ஒரு காலத்திற் சிவபிரானுக்கு, இமயமலைக் கருகில் திருக்கலியாணம் நடந்தது. அதற்காக அங்குப் பெருங் கூட்டங் கூடியது. மேல், நடு, கீழ் என்னும் மூன்றுலக வாசிகளும் அங்கு வந்து சேர்ந்திருந்தார்கள். பளுவால் வடதிசை தாழ்ந்தது, தென்திசை உயர்ந்தது. (பூமியின் வடதிசை தென்திசை யென்பது புராண சித்தாந்தம்; ஆராய்ந்து பார்த்தால் அப்படியில்லை). அங்குக் கூடியிருந்த தேவர்முதல் யாவரும் பயந்தார்கள். இன்னது செய்வதென்று யார்க்குந் தோன்றவில்லை. அப்போது அந்தக் கூட்டத்திடையில் விசுவகர்மன் எழுந்து நின்று, அகத்தியரைச் சுட்டிச் சிவபிரானுக்குக் காட்டி, "இவரைத் தென்திசையில் அனுப்பினால் வடதிசை உயர்ந்து, பூமி சரியாகும்" என்றான். அப்படி அவன் அவை அறிந்து ஆராய்ந்து பேசியதால், அவன் சொன்னபடியே சிவபெருமான் அகத்தியரைத் தென்திசையிற் செலுத்தினர். அதனால் பூமி சரியாயிற்று.

[அவையஞ்சாமை]

73. ஆன்றசங்கர் போற்றவொன்றை யையிரண்டா மாநிலத்தார்க்
கீன்றவரிற் சொன்னா ரிரங்கேசா!—தோன்றவே
கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, ஆன்ற சங்கர் போற்ற - கல்வி கேள்விகளால் நிரம்பிய தெய்வீகப்புலவர்களாகிய கடைச் சங்கத்தார் துதிக்க, ஒன்றை - (அறம் பொருளின்ப மென்னு முப்பாற் பொருள்களில்) ஒவ்வொன்றையும், ஐயிரண்டு ஆக - பப்பத்துக் குறள்வெண்பாவாக, மாநிலத்தார்க்கு- இவ்வுலக மாந்தர்க்கு, ஈன்றவரின் - பெற்றோர்களைப் போல, சொன்னார் - திருவள்ளுவர் திருக்குறள் என்னும் பெயரான் நீதி கற்பித்து அரங்கேற்றினர்; (ஆகையால் இது) கற்றார்முன் -

நன்றாய்ப் படித்தவர்கள் சபையில், தோன்ற - சொற்பொருள் தோன்றும்படி, கற்ற - தாம் கற்ற விஷயங்களை, செல்ல சொல்லுவார்-(அவர்கள்) கொள்ளும்படி (அஞ்சாமல்) சொல்ல வல்லவர், கற்றாருள் - கற்று வல்லவ ரெல்லாரினும், கற்றார் என்னப்படுவார் - நன்றாகக் கற்றவர் என்று சொல்லப்படுவர் (என்பதை விளக்குகின்றது).

(ந - ரை) கல்விக்கழகத்திற் பேசக் கற்றவனே கற்றானெனப்படுவான்.

(வி - ரை) திருவள்ளுவநாயனார் திருக்குறளென்னும் நீதி நூலை நூற்றுமுப்பத்து மூன்றதிகாரமாக்கி, ஒவ்வோ ரதிகாரத்திற்கும் பப்பத்துப் பாடல் செய்து, இவ் வுலகிலுள்ள மாந்தர்க்குப் பெற்றோர்களைப்போல நீதி கற்பித்து உபகாரஞ் செய்ய எண்ணினார். ஆகையால், அதை முடித்தவுடனே அவர், அதன் அருமை தோன்றக் கடைச்சங்கத்தா ரிருந்த மதுரைக்குச் சென்று, அவர்களும் இன்னுங் கல்வி கேள்விகளால் நிரம்பிய பிறருங் கூடிய சபையில் எல்லாரும் சிரக்கம்பங் கரக்கம்பஞ் செய்து மெச்சும்படி, தமது மாணவை மண்ணுறுத்தும் விழுச் செல்வமாகிய பிரசங்கத்தைச் செய்து அரங்கேற்றினார். கற்றாராகிய சங்கத்தாரும் பிறருங் கூடிய சபையில் தாம் கற்ற செலச் சொன்னவராகிய திருவள்ளுவர் கற்றாருட் கற்றா ரெனப்பட்டார் என்பதை எல்லாரும் அறிவர். சிலர் நன்றாய்க் கற்றிருப்பார்கள்; நூலெழுத மாட்டார்கள். சிலர், நூலெழுதுவார்கள்; சபையிற் பிரசங்கஞ் செய்து அரங்கேற்ற மாட்டார்கள். இப்படியெல்லாங் குறைவின்றி, நன்றாய்க் கற்றிருத்தல், நூலெழுதுதல், அரங்கேற்றுதல் ஆகிய முக்குணங்களும் ஒருங்கே அமையப் பெற்றிருந்த நாயனாரைத் தெய்வப்புலவரென்று யார்தாம் ஒப்பாதவர்?

'ஈன்றவரின்' என்பதில் 'இன்' உருபு ஒப்புப்பொருளது. ஏகாரம் அசைநிலை. 'கற்ருருள்' என்பது வேற்றுமை மயக்கம்.

அமைச்சியல் முடிந்தது.

---

## அங்கவியல்

[நாடு]

74. சீரிதா மெண்ணமுற்ற தேசத்திற் றென்றிருக்கா
வேரிசூழ் சோணு டிரங்கேசா!—ஆரப்
பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, எண்ணம் உற்ற தேசத்தில் - உலகத்தார் மதிப்பைப் பொருந்திய தேசங்களெல்லாவற்றிலும், தென் திருக்காவேரி சூழ் சோணுடு சீரிது ஆம் - தெற்குத் திசையிலுள்ள காவேரிநதி சூழ்ந்த சோழ ணுடு சிறந்ததாகும்; (ஆகையால், இது) நாடு - நாடானது, பெருமை பொருளால் ஆர - (கரும்பு; நெல் முதலிய அளவற்ற) பெரிய பொருள்களால் நிறைந்திருப்பதனுல், பெட்டக்கது ஆகி - (பிற தேசத்தாரும்) விரும்பத்தக்கதாகி, அருமை கேட்டால் - (அதிவெள்ளம், வெள்ளமின்மை முதலிய) அழிவில்லாமையினுல், ஆற்ற விளைவது - மிக நன்ருய் விளைவதேயாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) சீரகம் பொருந்திய ஆரகத்திரு. நன்ருய் விளைவதே நாடா மென்க.

(வி - ரை) சோழன் காவேரி கரைகண்டு, வெள்ளம் பெருக்கித் தன்னுட்டை எந் நாட்டினும் நன்னுடென்னப் புனனுடாக்கி,

வாணுட்டிலிருந்து லைகுந்தச் சம்பாமுதலிய நெல்விதை கொண்டு வந்து விதைத்துப் பயிராக்கி; கரும்பு, எள், வாழை, கமுகு, தெங்கு முதலியவைகளை எங்குங் கணக்கின்றிப் பெருக்கி,

"சோறுடைத்துச் சேணுடு"

என்று யாரும் புகழப் பரிபாலனஞ் செய்தான். நாட்டைப் பெரும் பொருளால் பெட்டகமாக்கி, அருங்கேட்டால், ஆற்ற வினை விப்பது அரசர் கடமையாய்ச் சீர்திருத்தினர்.

'நாடு' காரண இடுகுறியாய் நாட்டைக் குறிக்கு மென் றுணர்க.

[அரண்]

75. சிந்துவிடை யெழுமதில் சேர்ந்த விலங்கைநகர்
எந்தவகை போய திரங்கேசா!—முந்தும்
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்க ணில்லா தரண்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சிந்து இடை - சமுத்திர நடுவில், எழு மதில் சேர்ந்த இலங்கை நகர் - எழு சுற்றுக் கோட்டைகள் சூழ்ந்த இலங்காபுரி, எந்த வகை போயது - எப்படி அழிந்துபோயிற்று! (ஆகையால், இது) முந்தும் - முதன்மையாகிய, எனை மாட்சித்து ஆகிய கண்ணும் - எப்படிப்பட்ட பெருமையையுடைய இடத்தும், அரண் - (மதில்) அரண்முதலிய காவல்களில் எதுவும், வினை மாட்சி இல்லார் கண் இல்லாது - தொழில் செய்யும் அறிவின் பெருமை யில்லாத வர்களிடத்தில் நின்று தாங்காது (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) போர்வினை செய்யு மதி யிலார்க்கு, அரண் இருந்தும் பய னில்லை.

(வி - ரை) இலங்காபுரிக் கோட்டை யென்றால் யாரும் வியந்து பயந்து மதிக்கத் தக்கதாய், சமுத்திர நடுவில் எழு சுற்று மதில்களுடையதாய் விளங்கியிருந்தது. இன்னும் அந்தக் கோட்டையையும் ஊரையுங் காக்க இரண்டாயிர (2000) வெள் ளம் இராக்ஷத சேனைகள் இருந்தன. இந்தச் சேனைகளைக் காக்க, இந்திரசித்தன், கும்பகன்னன், கும்பன், மகோதரன், மகாபாரிசன் முதலிய வீரர்கள் பல ரிருந்தார்கள். எல்லா அர ணிருந்தும், அரசனாகிய இராவணனுக்கு ஒன்றுமட்டும் இல்லை. அது யாதெனின், போர்வினை செய்யும் சமயோசித புத்தி. எதிரி யை மதித்தறியும் இயற்கை யறிவில்லாதவனாகையால், அவன், சேதுபந்தனத்திற் சருங்கல் மிதந்ததையும், நிராயுதக் குரங்கு கள் ஆயுதபாணிகளான அசுரரைக் கொன்றதையும் ஆய்ந்தறியா மல், புத்திர மித்திர களத்திராதியருடனே பத்துத்தலைகளை யும் இருபது கரங்களையு மிழந்து, தானு மடிந்து, அருமையான அரண் சூழ்ந்த ஊரையும் போரையும் பேரையும் சீரையும் இழந் தான். இப்படிப்பட்ட அவிவேகிக்கு அரண் இருந்தும் இல்லா தென்பதற்கு யாரையும் கேட்கவேண்டியதில்லை.

[பொருள் செயல் வகை]

**76.** நட்டுவனும் பற்குணன்றான் நாடாளக் கண்டுதிசை
எட்டும் பணிந்த திரங்கேசா!—கிட்டுபொருள்
இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, நட்டு வன் ஆம் பற்குணன் - (விராடபுரத்தில் அரசன் மகளுக்கு ஆட் டங் கற்றுக்கொடுக்க நட்டுவனாய் உருமாறியிருந்த) அர்ச்சுனன், நாடு ஆள கண்டு - பிறகு அத்தினாபுரியில் அரசனா யிருந்து ஆளப்பார்த்து, எட்டு திசையும் பணிந்தது - எட்டுத்திக்கிலுமுள்ள

அரசர்களும் வந்து வணங்கினார்கள்; (ஆகையால், இது) கிட்டு பொருள் இல்லாரை - வருவாயாகிய பொருள் இல்லாத தரித்திரர்களை, எல்லாரும் என்னுவர் - அவர்கள் நல்லவராயிருந்தாலும் எல்லாரும் இகழ்வார்கள்; செல்வரை - பணக்காரர்களை, எல்லாரும் சிறப்பு செய்வர் - (அவர்கள் தீயவராயிருந்தாலும்) எல்லாரும் புகழ்வார்கள் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பணம் பந்தியிலே; குலம் குப்பையிலே.

(வி - ரை) பாண்டவர், ஒரு வருடகாலம் விராடபுரத்தில் அஞ்ஞாதவாசஞ் செய்யத் தங்கியிருந்தார்கள். தருமர், பஞ்சாங்கப் புரோகிதராய் உருமாறி யிருந்தார். வீமன், மடையனாய் மாறியிருந்தான்; அர்ச்சுனன், பேடியாய் நட்டுவத் தொழில் செய்தான்; நகுலன், குதிரையாளாய் உருமாறியிருந்தான்; சகாதேவன் மாடு மேய்த்தான்; திரௌபதி, பணிப் பெண்ணானாள். இவர்கள் செய்த ஒவ்வொரு தொழிலும் மதிப்பிற் குறைந்ததாகையால் அப்போது இவர்களைக் கவனித்தார் யாரு மில்லை. பிறகு இவர்கள் துரியோதனனோடு போர் புரிந்து வென்று அத்தினாபுரியிலிருந்து அரசாண்டபோது, 'ஒருகாலத்தில் இவர்கள் விராடனுக்கு ஊழியஞ் செய்தவர்கள் ஆயிற்றே,' என்று இவர்களை இழித்துரைத்துக் கழித்து ஒழித்தார் ஒருவரு மிலர். எல்லாரும் வந்து வணங்கினார்கள். ஐம்பத்தாறு தேசத்தரசர்களும் பகுதி கட்டித் தகுதியாய் மரியாதை செய்தார்கள். இவர்கள் எல்லாக் குணநலமும் பெற்றிருந்தும், பணம் இல்லாதவர்களாய் விராடனகரத்தில் உருமாறி இருந்தபோது இவர்களை எல்லாரும் எள்ளினார்கள். பிறகு, இவர்கள் அத்தினாபுரியில் அரசாண்டு செல்வர்களா யிருந்தகாலத்தில், விராடபுரியி லிவர்கள் ஊழியர்களாயிருந்ததையுங் கவனிக்காமல் பலதேசத்து மன்னரும் வந்து சிறப்புச் செய்தார்கள்.

[படை மாட்சி]

77. மொய்கொள் கடல்போலு மூல பலமடிய
எய்துவென்ற தோர்வில் லிரங்கேசா!—வையத்
தொலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

(ப-ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, ஓர் வில் - உன்னுடைய ஒரே வில்லாகிய கோதண்டம், மொய் கொள் கடல் போலும் மூலபலம் மடிய-நெருங்கிய கடலைப்போலும் ஏராளமான மூலபல சேனை இறக்க, எய்து வென்றது - அம்பெய்து வென்றது; (ஆகையால், இது) வையத்து - பூலோகத்தில், எலி பகை உவரி ஒலித்தக்கால் என் ஆம் - எலிகளாகிய பகை திரண்டு கடல் போல இரைந்தால் (பாம்புக்கு) என்ன துன்பம் உண்டாகும்?, நாகம் உயிர்ப்ப கெடும் - அப் பாம்பு ஒரு மூச்சுவிட்டால், அது, தானே கெட்டு அழியும் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) ஆயிரங் காக்கைக் கோர் கல். ஆயிர நக்ஷத்திரங் கூடினாலும் ஒரு சந்திரனாகாது. மெலியார் பலர், வலியார் ஒருவரை வெல்லார்.

(வி-ரை) இராமாயணத்தில் மூலபல யுத்தம் நடந்தபோது, இராவணனுடைய சேனையின் தொகை ஓர் ஆயிரவெள்ளம். இந்த ஆயிரவெள்ளஞ் சேனையையும், இரகுநாயகராகிய ஸ்ரீ ராமபிரான், தமது ஒரே வில்லால் ஒன்றரைமணி நேரத்திற் கொன்று வென்றார். எலிப் பகைபோலும் அரக்கர் உவரிபோல் ஒலித்ததனால் என்னவாயிற்று? நாகமாகிய ஸ்ரீ ராமபிரானுடைய வில்லின் குணத்தொனியால் ஒன்றரைமணி நேரத்திற் கெட்டழிந்து போயிற்று.

[படைச் செருக்கு]

78. மார்பத் தழுந்துகணை வாங்கிவிடுத் தான்கரங்கள்
ஈர்பத்தன் மைந்தன் இரங்கேசா!—ஆர்வத்தால்
கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, கரங்கள் ஈர்பத்தன் மைந்தன் - இருபது கரங்களைக் கொண்ட இராவணனுடைய மகனாகிய இந்திரசித்தன், மார்பத்து அழுந்து கணை - (இலக்ஷ்மணர் எய்ததனால் தன் மார்பில் தைத்திருந்த அம்பை, வாங்கி விடுத்தான்-(தன்னிடத்து வேறம்பில்லாமையால்) பிடுங்கி அவர்மீது எய்தான்; (ஆகையால், இது) ஆர்வத்தால் (சண்டையிற் கொண்ட) உற்சாகத்தால், கை வேல் - தன் கையிலிருந்த வேலாயுதத்தை, களிற்றொடு போக்கி - (தன்னை யெதிர்த்த யானைமேல் எய்து) அதனொடு போகவிட்டு, வருபவன் - (இன்னும் வருகின்ற யானையை எய்ய, வேல் தேடித் திரிந்து) வருகிறவன், மெய் வேல் - தன் மார்பில் தைத்திருந்த வேலாயுதத்தைக் (கண்டு), நகும் - பிடுங்கி மகிழ்வான் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) சூரனுக்குப் பிராணன் துரும்பு; ஆகையால், சண்டையிற் புறங்கொடான். வீரனுக்குச் சமயத்தில் எதிரி ஆயுதமும் தன் ஆயுதமாகும்.

(வி - ரை) இந்திரசித்தன், நிகும்பலையாகத்தை இழந்து, இலக்ஷுமணரோடு போர் புரிந்தபோது, அவர் இவனுடைய அம்பறாத்தூணியை அறுத்துத் தள்ளிவிட்டார். அதனாலிவன், தனக்கு, அவ்விடத்துக்கு வேறே அம்பு இல்லாமையால், இலக்ஷுமணர் தன் மார்பில் எய்த அம்பைப் பிடுங்கி அவர்மீது எய்தான். இதனால் வீரனாகிய இந்திரசித்தன் தன் கையில் ஆயுத மில்லாதிருந்

தும், புறங்கொடாமல், பிராணனைத் துரும்பா மதித்து, எதிரி ஆயுதத்தையும் தன் ஆயுதமா யுபயோகித்த ஆண்மை விளங்குவது காண்க.

'கரங்கள் ஈர்பத்தன்' என்பதை ஈர்பத்து கரத்தன் என்று மாற்றுக. இரண்டு பத்து கரத்தன்-இருபது கையன்-இராவணன்.

[நட்பு]

79. வாசவன் தக்ஷன் மகம்புகா வாறுற்றான்
ஈச னயன்போற் றிரங்கேசா!—நேசன்
அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதா நட்பு.

(ப-ரை) ஈசன் அயன் போற்று இரங்கேசா - உருத்திரனும் பிரமனும் புகழ்ந்து துதிக்கின்ற திருவரங்கநாதக் கடவுளே!, வாசவன்-தேவேந்திரன், தக்ஷன் மகம் புகா ஆறு-தக்ஷன் என்னும் பாம்பரசன், (ஜனமேஜயன் செய்த சர்ப்ப யாகத்தில்) விழுந்து சாகாதபடி, உற்றான் - (அவனுக்கு) உற்ற துணையாய்ப் பொருந்தியிருந்தான்; (ஆகையால், இது) நட்பு - (ஒருவனுக்கு) நட்பென்பது, அழிவினவை நீக்கி - கெடுதியைத் தருகின்ற தீய வழிகளை விலக்கி, ஆறு உய்த்து-(அவனை) நல்வழியிலே செலுத்தி, அழிவின்கண் - (அவனுக்கு வரவேண்டியதாகிய) கேடு வந்தவிடத்து, அல்லல் உழப்பது ஆம் - (அவனோடிருந்து) அத் துன்பத்தைத் தானும் அனுபவிப்பதாம் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) நண்பன் துன்பத்தைத் தானும் அனுபவிப்பவனே நல்ல நண்பனாவன்.

(வி-ரை) ஜனமேஜயன்: உதங்கமுனிவர் உதவியால் உரகயாகம் பண்ணி, உலகத்தில் உள்ள உரகங்களை (பாம்புகளை) எல்லாம் அதில் வீழ்த்திக் கொல்வதைக் கண்ட தக்ஷகன்,

என்னும் பாம்பரசன், பயந்து, தன் நண்பனாகிய தேவேந்திரனிடத்திற் சென்று அடைக்கலம் அடைந்து, அவன் சிங்காதனத்தைச் சுற்றிக்கொண்டிருந்தான். இங்கு யாகம் நடந்துகொண்டே யிருந்தது; பாம்புகளும் அதில் வீழ்ந்து மடிந்துகொண்டேயிருந்தன. கடைசியாக, தக்ஷகன் ஒருவன்தான் மிகுந்திருந்தான். அது தெரிந்த யாகமுனிவர்கள், "தேவேந்திரனும் தக்ஷகனுக்கு இரக்ஷகனாய் இப்போது அவனைத் தன்னிடத்தில் அடைக்கலமாய் வைத்திருக்கிறான். ஆகையால், நமது மந்திரசக்தியால் இருவரையுஞ் சேர்த்துக் கொண்டுவந்து, இதில் வீழ்த்தவேண்டும்" என்று, துணிந்து, 'இந்திராய, தக்ஷகாய' என்று ஆகுதி யெடுத்தார்கள். அது போய் இந்திரனைத் தக்ஷகனோடு ஈர்த்துக் கொண்டுவந்தது. அதைக் கண்ட அகஸ்தியர், ஜனமேஜயனுடைய யாகசாலைக்கு வந்து, அவனைச் சர்ப்ப பிக்ஷை கேட்டு, அவ் விருவரையும் விடுவித்தார். இதனால் தேவேந்திரன் தன் நண்பனாகிய தக்ஷகனுடைய அழிவின்கண் அல்லலுழந்தமை வெளியாயினமை காண்க.

[நட்பாராய்தல்]

80. தேசுபெறு மார்த்தாண்டன் செல்வன்முடி சூடியிலங்
கேசனை வென்றா னிரங்கேசா!—மாசில்
குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தேசுபெறும் மார்த்தாண்டன் செல்வன் - ஒளியொருந்திய சூரிய பகவானுடைய மகனாகிய சுக்கிரீவன், முடி சூடி - (இராமபிரானோடு நட்புக்கொண்டு, தன் தமையனைக் கொல்வித்து, கிட்கிந்தைக் காசனாய்) முடி சூடி, இலங்கேசனை வென்றான் - பின்பு, இராவணனைக் கொல்வதற்கு உடந்தையாயிருந்து வெற்றி பெற்

றான்; (ஆகையால், இது) மாசு இல் குடி பிறந்து பழி நாணு வானை - குற்றமற்ற உயர்குடியிற் பிறந்து, (தன்மேல் உலகோர் சொல்லும்) பழிக்கு அஞ்சுகிறவனை, கொடுத்தும் நட்பு கொள் ளல் வேண்டும் - சில கொடுத்தாயினும் சிநேகம் கொள்ளுதல் வேண்டும் (என்பதை விளக்குகின்றது.)

(கு - ரை) கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்முடன் கூடுதல் கோடி பெறும்.

(வி - ரை) இடையில், அநுமார் இருந்து கூட்டுவித்ததால், இராமபிராற்கும் சுக்கிரீவற்கும் உண்டான நட்பின் விசேடம் எல்லார்க்குந் தெரியும். இந்தச் சுக்கிரீவன் உயர்குடியிற் பிறந்து, பழிநாணுவானு யிருந்தபடியால், ரகுநாயகர் இவனுடைய பகைவனுகிய வாலியைக் கொன்று, இவனுக்கு முடி சூட்டிக் கிட்கிந்தைக்கு அரசனுக்கினர். இப்படி இவற்கு நன்மை கொடு த்து, இவனுடைய நட்பை விரும்பிக்கொண்டார் ஸ்ரீ ராமபிரான். அதற்குத் தக்கபடி இவனும், எழுபது வெள்ளஞ் சேனை யுடன் ஸ்ரீ ராமபிரானேடு சென்று, கடலிற் பாலங் கட்டி இலங் கையைச் சேர்ந்து, இராவண சம்மாரஞ் செய்து, சீதாபிராட்டி யை மீட்டுக் கொடுத்துப், பிறகு அயோத்திக்குத் திருமிவந்து, ஸ்ரீராமபட்டாபிஷேக தரிசனஞ் செய்து, அவருடனே பதினுயிர வருஷம் வாழ்ந்திருந்து பரமபதஞ் சென்றான். ஆகையால், மாசில் குடிப்பிறந்து, பழி நாணுவானுகிய சுக்ரீவனைப் போன்றவனேடு, சில கொடுத்தும் நட்புக்கொண்ட ஸ்ரீ ராமபிரான் செய்கை சிறந்த தாயினமை காண்க.

[பழைமை]

**81.** தானவர் வேந்தைச் சடாயு பொருதிறந்தான்
ஏன வுருவா மிரங்கேசா!—மாநிலத்தில்

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

(ப - ரை) என உருவாம் இரங்கேசா - வராகாவதார மெடு த்த திருவரங்காநாதக் கடவுளே!, தானவர் வேந்தை - அரக்கவரச னாகிய இராவணனோடு, சடாயு பொருது இறந்தான் - சடாயுவென் னும் கழுகரசன் சண்டை செய்து மாண்டான், (ஆகையால் இது) மாநிலத்தில் - பூலோகத்தில், எல்லைக்கண் நின்றார் - நட்பின் வரம்பிலே நின்றவர், தொல்லைக்கண் நின்றார் தொடர்பு - பழை மையில் வேறுபடாது நின்றவரது நட்பை, தொலைவு இடத்தும் துறவார் - (தமக்கு உயிர்த்தொலைவு) உயிரழிவு வந்தவிடத்தும் விடார் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பழைய நேசம் உயிர் போனாலும் விடாது.

(வி - ரை) சடாயு, தசாதருக்குப் பழைய நண்பர். ஆகை யால், இவர் வனத்திற் கண்ட ஸ்ரீ ராம லக்ஷ்மணரையும் சீதா தேவியையும் முறையே தமது மக்கள் மருமகள்போற் பாது காத்துவந்தார். பிராட்டியைத் தூக்கிக்கொண்டு போன இராவ ணனை ஆகாயத்தில் தேர்மேற் கண்ட இவர், அவனோடு அகோர சண்டை செய்தார். ஆயுதபாணியாகிய அவனை, நிராயுதபாணி யாகிய இவர் தமது மூக்காலும் நகங்களாலும் கொத்திக் கீறித் தடுத்து நிறுத்தினார். ஆனாலும், அவன் தன் கை வாளால் இவர் சிறகை வெட்டி வீழ்த்திச் சென்றான். அதனால் இவர் உயிர் துறந் தார். ஆகையால், நட்பின் எல்லைக்கண் நின்றாராகிய சடாயு தம் மோடு பழைய நட்பில் வேறுபடாது நின்றவராகிய தசரதர் தொடர்பை, தமக்கு உயிர்த் தொலைவு வந்தவிடத்தும் துறவா ராயினமை காண்க. வேந்தை: வேற்றுமை மயக்கம்.

[தீ நட்பு]

82. மாயமாரீசன் மடிந்தான் கவுசிகன்றான்
ஏயதவ முற்றான் இரங்கேசா! - ஆதலால்
பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மாயா மாரீசன் - மாயமானாகி வந்த மாரீசன் என்பான், மடிந்தான் - (இராவணனோடு நெடுநாள் நட்புக் கொண்டிருந்தும், அவன் பேச்சைக் கேட்டு, அதன்படி செய்ததால், இராமன் கையம்பால்) இறந்தான்; கவுசிகன் தான்-விசுவாமித்திரன், ஏய தவம் உற்றான்- (வசிஷ்டரோடு பகை கொண்டிருந்தும்) இசைந்து செய்த தவ மகிமையைப் பெற்றான்; ஆதலால் - ஆகையால் இது, பேதை பெரும் கெழீஇ நட்பின் - அறிவில்லாதவனது மிகவு நெருங்கிய நேசத்தைக்காட்டிலும், அறிவு உடையார் ஏதின்மை - நல்லறிவுடையவரது பகைமை, கோடி உறும் - கோடி பங்கு நன்மை பெறும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பேதை நட்பின் மேதை பகைமையே மேலானது.

(வி - ரை) மூடனாகிய இராவணனுக்கும் மாரீசனுக்கும் பல்லாண்டு நேசம் பெருகி மருகன் மாமன் முறை ஏற்பட்டிருந்தது. இருந்தும் பேதையாகிய இராவணன் பேச்சைக் கேட்டு, அதன்படி மாய மானாகி சீதாபிராட்டிக் கெதிரிற் சென்ற மாரீசன், இராம னம்பால் உயிர் துறந்து மாண்டான். வசிஷ்டர்க்கும் விசுவாமித்திரர்க்கும் பெரும் பகை நேரிட்டிருந்தது. இருந்தும், வசிஷ்டர் மேதாவியாகையால், அவரோடு பகைகொண்ட விசுவாமித்திரர்க்கு நன்மையே உண்டாயிற்று. அந்தப் பகைமை காரணத்தால், அவர் கடுந் தவம் புரிந்தார்; ஆகையால், அருந் தவ

விசிஷ்டராய், வசிஷ்டர் மெச்சும் வேதியமுனிவராய் விளங்கினர். இதனால் இராவணனைப் போன்ற பேதையின் பெருங்கெழீஇ நட்பைப்பார்க்கிலும், வசிஷ்டரைப் போன்ற அறிவுடையாரது எதின்மை கோடி உறும் என்பது விளங்குகின்றமை காண்க.

[கூடா நட்பு]

83. சார்ந்துதிதி கர்ப்பஞ் சதகிருதேழ் கண்டமா
ஈர்ந்தன னன்றோ விரங்கேசா!—சேர்ந்தார்போல்
சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சதகிருது - தேவேந்திரன், சார்ந்து - (வணங்கிச் சென்று) நெருங்கியிருந்து, திதி கர்ப்பம் - திதி யென்பவளுடைய கர்ப்பத்திலிருந்த சிசுவை, ஏழ் கண்டம் ஆக - ஏழு கூறுகளாக, ஈர்ந்தனன் அன்றோ - அறுத்தானல்லவா? (ஆகையால், இது) வில் வணக்கம் - வில்லினுடைய வளைவு, தீங்கு குறித்தமையால் - (அதன் எதிரிலிருப்பவர்களுக்குத்) துன்பத்தைக் குறித்துக் காட்டினது போல, சேர்ந்தார்போல் - நண்பர்போல், ஒன்னார்கண் - பகைவரிடத்திலும், சொல் வணக்கம் - சொல்லினது வணக்கத்தை, கொள்ளற்க - (நன்மைசெய்தலைக் குறித்ததென்று (நினையாதிருக்கக்கடவர் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) வில் வளைவைப்போல் பகைவர் வணக்கம் தீங்கு தருமென்க.

(வி - ரை) தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் அதினின் றெழுந்த அமுதத்திற்காகப் பெருஞ் சண்டை உண்டாயிற்று. அவர்களுக்கிடையில் ஸ்ரீ மஹாவிஷ்ணு

மோகினிப்பெண்ணெனத் தோன்றி அமுதத்தை மறைத்துக் கொண்டுபோய், அசுரரை வஞ்சித்துத் தேவர்களுக்கு மட்டும் பங்கிட்டுக் கொடுத்தார். அதை உண்டதனால் அவர்கள் அஞ்சாமல் அசுரரைக் கொன்று அமரராய் வாழ்ந்தார்கள்.

திதிக்குத் தன் மக்களாகிய நைந்தியர் இறந்ததனால் விசன மேலிட்டுத் தன் கணவராகிய காசிபரிடத்துச் சென்று முறை யிட்டுத் தன் மக்களைக் கொன்ற தேவர்களைக் கொல்லத் தனக் கொரு மைந்தன் வேண்டுமென்று கேட்டாள். அதற்கவர் உடன் பட்டு, 'ஆசாரந் தவறாமல் ஆயிர வருடம் தவஞ் செய்தால், உன க்கு மகன் பிறப்பான்' என்று சொல்லி அனுப்பினார். அவளும் அப்படியே ஒப்பித் தவமேற் சென்றாள். அது பொறாத பகைவ னாகிய தேவேந்திரன் வில்வணக்கம்போலத் திதியைக் கண்டு வணங்கி அவளுக்கு வேலையாளாக அமர்ந்திருந்தான்.

இன்னும் ஒருபதாண்டில் தவமுடியுமென்றிருக்கையில், திதி தலைவைக்குமிடத்தில் கால் வைத்து உறங்கினாள். ஆகையால், அவ ளுடைய ஒழுக்கந் தவறிற்று. அதுதான் சமயமென்று தேவேந் திரன் தொள்ளாயிரத்துத் தொண்ணூறாண்டு, அவள் கர்ப்பத்தில் முதிர்ந்திருந்த சிசுவைத் தன் வச்சிராயுதத்தால் எழு கூறாக்கத் தொடங்கினான். பிறகு, திதி விழித்துக்கொண்டும் பயனில்லா மற் போயிற்று. தன் எண்ணம் நிறைவேறாமல், அந்த எழு கூறும் எழு மருத்துக்களாய்ப் பிறந்தன. ஆகையால், சேர்ந்தாரிடத்திற் போலத் தேவேந்திரனாகிய பகைவனிடத்திலும், தீங்கு குறிக் கும் வில்வணக்கம் போன்ற சொல்வணக்கத்தை நம்பிக்கொண் டதனால், திதிக்குத் தன் எண்ணம் நிறைவேறாமல் தீங்கு நேரிட் டமை காண்க.

'சேர்ந்தார்போல்' என்பதைச் 'சேர்ந்தாரிடத்திற் போல' என்று ஏழாம்வேற்றுமையில் விரித்துக்கொள்க. 'தீங்கு குறித்த

மையால்' என்பது துணிவினால் இறந்தகாலமாயிற்று, கால வழுவமைதி. 'ஈர்க்தனனன்றோ' என்று எதிர்மறை வினா உடன் பாட்டு விடை தருவது காண்க.

[பேதைமை]

84. மாதாபி தாவை மதியாம லேசிறையில்
ஏதாக வைத்தா னிரங்கேசா!—மேதினியில்
ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மாதா பிதாவை - (கஞ்சன்) தனது தாய்தந்தையரை, மதியாமல் - (கொஞ்சமேனும் தன்னைப் பெற்றவர்களென்று) எண்ணாமல், சிறையில் - சிறையறையில், ஏது ஆக வைத்தான் - தான் என்ன கேடு கெடுவதற்காகப் பூட்டிவைத்தான்? (ஆகையால், இது) மேதினியில் - பூமியில், பேதை - அறிவில்லாதவன், பெருமை செல்வம் உற்ற கடை - பெரிய செல்வத்தை உரிமையால் அடைந்தவிடத்து, ஏதிலார் ஆர - அன்னியர் அதை அனுபவிக்க, தமர் பசிப்பர் - அவனுக்குச் சம்பந்தமுள்ள பெற்றோர் பிறந்தார் முதலியோர் பசியால் வருந்துவார்கள் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பேதை செல்வம், உற்றோர்க் குதவாமல், மற்றோர்க் குதவு மென்க.

(வி - ரை) உக்கிரசேனனுக்குக் கஞ்சன் பிறந்தபோது, 'மாதா பிதாவைப் பீடிப்பான்' என்றிருந்தமையால், அவனை அவர்கள் பெட்டியில் வைத்து மூடி, ஆற்றில் மிதக்கவிட்டார்கள். அந்தப் பெட்டி வேற்றரசன் கையிற்சிக்கினதனால், சிசு பிழைத்து வளர்ந்தது. பிறகு அது வாலிபனானபோது வசுதேவரிடத்தில்

வில்வித்தை முதலியவற்றைக் கற்றுத் தேறிற்று. அப்படித் தேறி யிருந்த இளைஞனாகிய கஞ்சன் சிங்கவாகனனை வென்று, சாரசந்தன் மகளையும் விவாகஞ் செய்துகொண்டு, தன் பூர்வோத்தர முணர்ந்து, வடமதுரையில் வந்து முடி சூடி அரசாளுகையில், தன் மதாபிதாக்களை மறவாமல் சிறையறையி லடைத்துவைத் தான். ஆகையால், பேதையாகிய கஞ்சன் பெருஞ்செல்வம் உற்ற இடமாகிய வடமதுரையில், எதிலாராகிய மற்றவர்களெல் லாம் அவனோடிருந்து அவன் செல்வத்தை ஆர, அவனைப் பெற்றவர்களாகிய, தமர் பசித்துச் சிறைச்சாலையி லடைபட் டிருந்தமை காண்க.

ஏகாரம் அசைநிலை, அல்லது தேற்றமெனக் கொள்க. 'எதாக வைத்தான்?' என்பதற்குத் 'தான் எந்த இழிபொருளாவதற்கு வைத்தான்?' என்றுங் கொள்ளலாம்.

[புல்லறிவாண்மை]

85. தாதை சிலையொடிப்பத் தான்மொழிந்தான் தீதாக
ஈதடையார் செய்யா ரிரங்கேசா!—ஓதில்
அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவர்க்குஞ் செய்த லரிது.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தாதை-(விதுரனாகிய) சிறிய தந்தை, சிலை ஒடிப்ப - (தனது) வில்லை இரு துண்டாய் முறித்தெறியும்படி, தீது ஆக தான் மொழிந்தான்-(அவற்கு) மனக்கிலேசம் உண்டாகத் துரியோதனன் பேசினான்; ஈது - இந்தப் பிழை, அடையார் செய்யார் - அவனுக்கு அவன் பகைவரும் செய்யமாட்டார்கள்; (ஆகையால், இது) ஓதில் - எடுத்துச் சொன்னால், அறிவு இல்லார் - புல்லறிவாளர், தாம் தம்மை பீழிக்கும் பீழை - தாமே தங்களை வருத்திக்கொள்ளும்

வருத்தமானது, செறுவார்க்கும் - வருத்துதற்குரிய தமது பகைவர்க்கும், செய்தல் அரிது - செய்தலரிதாகும் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) "நுணலுந் தன் வாயாற் கெடும்" என்றபடி பேதை, தன் வாயாலேயே தான் கெடுவான்; அவனுக்கு வேறு பகை வேண்டா.

(வி-ரை) ஸ்ரீ கண்ணபிரான் அத்தினபுரத்துக்கு ஐவர் தூதாகச் சென்றபோது, விதுரனரண்மனையிற் றங்கி விருந்துண்டார். அவரை விருந்தேற் றுபசரித்ததற்காக, துரியோதனன் தன் சிற்றப்பனாகிய விதுரன்மேற் கோபித்துத் தூஷித்துப் பேசினான். கண்ணபிரானை வெகு கேவலமாக ஏசினான். தன்னைத் தூஷித்திருந்தாலும் விதுரற்கு அவனிடத்தில் அத்தனை வெறுப்பு உண்டாயிராது. நிரபராதியான கண்ணனைத் தூஷித்ததனால் அவன்மேல் விதுரற்குக் கடுங்கோப மூண்டது. ஆகையால், அவன், யாராலும் வெல்லுதற்கரிய தனது வில்லை இரு துண்டாக ஒடித் தெறிந்தது மன்றி, "போர்க்களத்தில் நான் வரமாட்டேன்," என்று பெருஞ் சபதஞ் செய்து அங்குத் தங்கியிராமல் தீர்த்த யாத்திரை சென்றான். இதனால் அறிவிலானாகிய துரியோதனன் தான் தன்னைப் பிழித்த பிழை அவனுடைய செறுவார்க்குஞ் செய்த லரிது என்பது விளங்குகின்றது. அறிவிலார்தாம் தம்மைப் பிழிக்கும் பிழை, அவர்களுடைய செறுவாராலும் செய்தலரிது என்றும் பொருள் உரைத்துக் கொள்ளலாம். அப்படிக் கொண்டால் 'செறுவார்க்கு' என்பது வேற்றுமை மயக்கம்.

[இகல்]

86. சொன்ன நிறத்தான் சுதனை யரும்பகையாய்
இன்னுயிரைக் கொன்று னிரங்கேசா!—மன்னும்

இகல்காணு னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சொன்ன நிறத்தான் சுதனே - இரணியனுடைய மகனாகிய பிரகலாதாழ்வானே, அருமை பகையாய் - (அவனுக்குப்) பெரும் பகையாகியாய், இனிமை உயிரை கொன்றான் - (அவனுடைய) ஆருயிரைப் போக்கினான்; (ஆகையால், இது) ஆக்கம் வருங்கால் - ஒருவனுக்குச் செல்வம் வரும்போது, மன்னும் - (பிறரிடத்தில்) பொருந்திய, இகல் காணான் - பகைமையைக் (காரணமிருந்தும்) நினையான்; கேடு தாற்கு - தனக்குத் தானே கேடு தருவித்துக்கொள்வதற்கு, அதனை (காரண மில்லாதிருந்தும்) அந்தப் பகைமையில், மிகல் காணும் - மிகுதலை நினைப்பான் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) ஆங்காலத்திற் பகையு முறவாம்; போங்காலத்தில் உறவும் பகையாய்விடும்.

(வி - ரை) இரணியன் அரசாளுங்காலத்தில் மேல், நடு, கீழ் என்னும் மூன்றுலகமும் தனக்கு ஏவல் செய்ய, ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் முத் தொழிலையுந் தானே நடத்தித், தன்னையன்றித் தெய்வ மில்லையென்று எல்லாருஞ் சொல்ல இகலின்றி வாழ்ந்தான். அவனுக்கு அழிவு வந்தகாலத்தில் தன் பிள்ளையே தனக்குச் சத்துருவான காரணத்தால், அவன் இறந்தான். இதனால், ஒருவன் ஆக்கம் வருங்கால், மன்னும் இகல் காணான்; கேடு தாற்கு அதனை மிகல் காணும் என்பது விளங்குகின்றது.

'அதனை' என்பது வேற்றுமை மயக்கம்,

[பகை மாட்சி]

87. சித்திரசே னன்கையிற் சிக்கினான் மன்னவர்மன்
இத்தரணி போற்று மிரங்கேசா—சுத்த
வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

(ப - ரை) இத்தரணி போற்றும் இரங்கேசா - இவ்வுலகத்தார் வந்து வணங்கித் துதிக்கின்ற திருவரங்கநாதக் கடவுளே!, மன்னவர் மன் - இராஜாதிராஜனாகிய துரியோதனன், சித்திரசேனன் கையில் சிக்கினான் - (தேவலோகத்திலிருந்து வந்த) சித்திரசேனனிடத்தில் அகப்பட்டுக்கொண்டான்; சுத்த வழி நோக்கான் - (ஆகையால் இது) (ஒருவன்) நல்வழியைக் காட்டும் நீதிநூலைக் கல்லாதவனும், வாய்ப்பன செய்யான் - அது விதித்த காரியங்களைச் செய்யாதவனும், பழி நோக்கான் - அப்படிச் செய்யாததனால் வரும் பழிபாவத்திற்கு அஞ்சாதவனும், பண்பு இலன் - நல்ல குணமுடையவன் அல்லாதவனுமா யிருப்பின், பற்றார்க்கு இனிது - (அவன்) பகைவர்க்கு இன்பமாவான் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) கொடுங்கோலரசனைப பகைவர் சுளுவிற் கொல்லுவார்கள்.

(வி - ரை) துரியோதனன்: பாண்டவர்களைச் சூதால் வென்று, திரௌபதியை அம்பலத்திற் கொண்டுவந்து துகில் உரிந்து மானபங்கஞ் செய்து, அவர்களை வனவாசம் போக்கிப் பிறகு மோசமாக ஒரு தந்திரஞ் செய்தான். தான் தேவேந்திரனுடைய ஆனிரையை மடக்கினால், அர்ச்சுனன் சண்டைக்கு வருவான். அப்போது அவனை மோசம் பண்ணிச் சுளுவில் நாசஞ் செய்து விடலாம் என்றெண்ணி அப்படியே செய்தான். அதுகண்ட

அர்ச்சுனன் 'நமக்கென்ன' என்று சும்மா இருந்துவிட்டான். உடனே தேவலோகத்திலிருந்து சித்திரசேனன் என்பவன் வந்து துரியோதனனோடு போர் புரிந்து, அவன் சேனைகளைக் கொன்று புறங்கண்டு வென்று, அவனைக் குண்டுருட்டாய்க் கட்டிக்கொண்டு போனான். அதுகண்ட அர்ச்சுனற்கு மனந் தாளவில்லை.

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்."

என்றபடி தனக்குள்ள பெருமிதகுணத்தைக் காட்ட, விரைந்து சென்று துரியோதனனை மீட்டுக்கொண்டு வந்தான். இதனால், நல்வழி நோக்கான், வாய்ப்பன செய்யான், பழி நோக்கான், பண்பிலனாகிய துரியோதனன், தன்னுடைய பற்றாகிய சித்திரசேனனுக்கு இனிதாக, அவனிடத்திற் சுளுவிற் சிக்கிக் கொண்டமை காண்க.

[பகைத்திறந் தெரிதல்]

88. தெவ்வை யிளந்தையென்று செப்பியே விக்கிரமன்
எவ்வமிக வுற்றா னிரங்கேசா!—வவ்வி
இளைதாக முள்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, விக்கிரமன் - விக்கிரமார்க்கன், தெவ்வை - தன் பகைவனாகிய சாலிவாகனனை, இளந்தை என்று செப்பி - இளையவனாயிருக்கிறானென்று சொல்லிப் (பொறுத்திருந்து), எவ்வம் மிக உற்றான் - அதிக துன்ப மடைந்தான்; (ஆகையால், இது) முள் மரம் - களைய வேண்டுவதாகிய முள்மரத்தை, இளைது ஆக - இளையதாகிய நிலைமையிலேயே, வவ்வி கொல்க - பிடித்துக் களையக்கடவர்; காழ்த்த இடத்து - (அல்லாமல் அது) முதிர்ந்த நிலைமையில்

(களையத் தொடங்கினால்), களையுநர் கை கொல்லும் - களைபவரது கையை அது தானே ஊறுபடுத்தும் (என்பதை விளக்குகின்றது).

(உ - ரை) "தன் வீட்டு விளக்கென்று முத்தம் கொடுத்தால் சுடாமலிருக்குமா?"

"செடியில் வளையாதது மரத்தில் வளையுமா?"

(வி - ரை) விக்கிரமார்க்கன் தன் பகைவனாகிய சாலி வாகனனைச் சிசுவென்று விட்டிருந்தமையால், அவன் குயவன் வீட்டில் வளர்ந்து பெரியவனாகி, மண்ணாற் செய்த யானை, குதிரை, தேர், காலாளாகிய நால்வகைச் சேனைகளுக்கும் உயிருண்டாக்கி, அவைகளை நடத்திக்கொண்டு வந்து, விக்கிரமார்க்கனோடு யுத்தம் பண்ணி வென்று, அவனைக் கொன்று, அவனுக்குப் பின், தானே அரசனானான். இதனால், சாலிவாகனனாகிய முள் மரத்தை விக்கிரமார்க்கன் இளைதாகக் கொல்லாமையினால், அது காழ்த்து வளர்ந்து, விக்கிரமார்க்கனுடைய உயிரையே கொன்றுவிட்டது காண்க.

ஏகாரம் அசைநிலை, அல்லது தேற்றமெனக் கொள்க.

[உட்பகை]

89. இவ்வுலகை யாளா திராமனைக்கான் போக்கினாள்
எவ்வமனக் கூனி யிரங்கேசா!—அவ்வியஞ்சேர்
எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை யுள்ளதாங் கேடு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, எவ்வம் மனம் கூனி - குற்றமுள்ள கூனியாகிய மந்தரை என்பவள், இராமனை - ஸ்ரீராமபிரானை, இ உலகை ஆளாது - இப் பூமியை ஆளவொட்டாமல், கான் போக்கினாள் - காட்டுக்கு அனுப்புவித்

தாள்; (ஆகையால், இது) ஒருவன் பெருமையை நோக்க, அவனுக்கு) அவ்வியம் சேர் - பொறாமையோடு கூடிய, உள் பகை - உள்ளுக்குள்ளே உள்ள பகையானது, எள் பகவு அன்ன சிறுமைத்து ஏ ஆயினும் - எள்ளின் பிளவை யொத்த சிறுமையை உடையதே ஆனாலும், (அப் பெருமை யெல்லாம் அழியவரும்) கேடு உள்ளது ஆம் - கேட்டையுடைய தாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) சீலையிற் பொதிந்த சிறு நெருப்புப் பொரிபோல், உட்பகை சிறியதாயினும் பெருங் கேடு தரும்.

(வி - ரை) இரகுநாயகராகிய ஸ்ரீ ராமபிரான், சிறு பிள்ளையாய் உண்டைவில் வைத்து விளையாடுகையில், அதற்குக் குறி, கூனியின் கூனும் எனக் கொண்டு, ஒவ்வொரு சமயத்திற் கையைப் பச்சைமண் உண்டை தெரித்துச் சிரித்துக் குதித்தாடினார். குழந்தை யருமை தெரியாதவ ளாகையால், கூனி அச் சிறுபிள்ளை விளையாட்டை வினையா மதித்து, நஞ்சுள்ள நாகம்போல், ஸ்ரீராமபிரானிடத்தில் உட்பகை கொண்டிருந்தாள். இதை யாரும் பாராட்டிப் பார்க்கவில்லை. கூனிமட்டும் சமயம் பார்த்துக்கொண்டிருந்தாள். இராமபிரானுக்கு முடிசூட்டுங் காலத்தில், அவள் தன் உட்பகையை வெளிப்பகையாக்கிக், கைகேசி மனத்தைக் கலைத்து, அவளுக்கு அவர்மே லிருந்த அன்பை யோட்டி, பொறாமைத் தீயை மூட்டிக் காட்டினாள். ஆகையால், கைகேசி ஸ்ரீ ராமபிரானை, வனம் போகக் கட்டளையிட்டாள். அதனா லவர் நாடாளாமல், காடாள நேர்ந்தது. எட்பகவன்ன சிறுமைத்தாகிய கூனியின் உட்பகை ஸ்ரீ ராமபிரானை வனம் போக்கும் அத்தனை பெருங் கேடுள்ளதாயினமை காண்க. இப் பாடலின் முன்னிரண்டடியை 'நாடரசு செய்யாமல் ராமனைக் கான் போக்கினாள், ஈடிலாக் கூனியிரங்கேசா! - நீடுலகில்,' என்றும் பாட மோதுவா ருளர்.

[பெரியாரைப் பிழையாமை]

90. சொல்வ லகத்தியர்க்குச் சூழ்ச்சிசெய்த வாதாவி
இல்வல னு மாய்ந்தா ரிரங்கேசா!—மல்வல்ல
கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சொல் வல் - தப்பாமற் பலிக்குஞ் சொல்லில் வல்லவராகிய, அகத்தியர்க்கு-அகத்திய முனிவரைக் (கொல்வதற்கு), சூழ்ச்சி செய்த - வஞ்சனை செய்த, வாதாவி இல்வலனும் - வில்வலன் வாதாவி என்னும் இரண்டு இராக்ஷத சகோதரர்களும், மாய்ந்தார் - இறந்தார்கள்; (ஆகையால், இது) ஆற்றுவார்க்கு - மூவகையாற்றலுமுடைய முனிவர்க்கு, ஆற்றாதார் - (படைத்தல், காத்தல், அழித்தலாகிய அம் மூன்றில் ஒன்றிலேனும்) வல்லா ரல்லாதார், இன்னா செய்யல் - கெடுதி செய்வது, மல் வல்ல - (உயிர்களை) வருத்தவல்ல, கூற்றத்தை - (தானே வருந் தன்மையனாகிய) இயமனை, கையால் - கை காட்டி, விளித்து அற்று - அழைத்தது போலாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) "சிறியோர் பெரும்பிழை செய்தன ராகில்
பெரியோ ரப்பிழை பொறுத்தலு மரிது.

(வி - ரை) அகத்திய முனிவர் பொதியமலைக்குப் போகும் வழியில், தொண்டைநாட்டில் வாதாவி வில்வலன் என்னும் இராக்ஷத சகோதர ரிருவர், முனிவரை வஞ்சித்துக் கொல்லுந் தங்கள் வழக்கம்போல, அவரையுங் கொல்ல எண்ணினார்கள். ஆகையால், வாதாவி ஆடாய் மேய்ந்துகொண்டிருந்தான். வில்வலன், முனிவரை எதிர்கொண் டழைத்து, பிராமணார்த்தத்திற் கிருக்க வேண்டினான். அதற்கவர் சம்மதித்ததனால், அக்காலத்திய வழக்

கம்போல் அவன் வாதாவியாகிய ஆட்டை அறுத்துக் கறி சமைத்துப் படைத்தான். அகத்தியர், அகத்தில் வஞ்சனையின்றி ஆட்டுக்கறியைக் கொஞ்சமேனும் விடாமல் புசித்துப் பிராமணார்த் தத்தை நிறைவேற்றினார். உடனே, வில்வலன், தன் வழக்கம் போலச் சஞ்சீவி மந்திரோச்சாடனத்தால், அவர் வயிற்றிலிருந்த ஆட்டுக்கறியாகிய வாதாவியை உயிர்ப்பித்து, வயிற்றைக் கீறிக் கொண்டு வெளியில் வரவழைத்தான். அவர் வயிற்றில் வாதாவி உயிர் பெற்றதனால் கொட கொடவென் றிரைந்தான். அந்த அர வத்தால், மோசத்தை உணர்ந்த முனிவர், வாதாவியின் நாசத் தை எண்ணி, "வாதாவி ஜீர்ணஹா, சுவாஹா" என்று தம் வயிற்றைத் தடவினார். அவன் அவர் வயிற்றிலேயே ஜீர்ணமாய் மாண்டு போனான். வில்வலனையும் அவர் கோபாக்கினியினாலே சாம்பராக்கிச் சென்றார். இதனால், ஆற்றுவாராகிய அகத்தி யர்க்கு, ஆற்றாராகிய வில்வல வாதாவியர் வலிய வழைத்து, இன்னா செய்ததனால், கூற்றத்தைக் கையால் விளித்ததுபோல், அவரால் உயிர் துறந் தழிந்தமை காண்க.

'இல்வலன்' வில்வலன்: போலி. 'இரங்கேசா' என்னு மோ னைக்கு, 'இல்வலன்' என்பதே ஒத்திருப்ப துணர்க.

[பெண்வழிச் சேரல்]

91. சந்தநுவேந் தேழு தனைய ருயிரிழந்தான்
இந்து நுதற் கங்கை யிரங்கேசா!—அந்தோ!
மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்காதக் கடவுளே!, இந்து நுதல் கங்கை - (மூன்றாம்பிறைச் சந்திரனைப் போன்ற நெற்றி

யை யுடைய) கங்கையாகிய (மனைவியின் பேச்சைக் கேட்டதனால்) சந்தநுவேந்து - சந்தநு மகாராஜன், எழு தனையர் உயிர் இழந்தான் - எழு பிள்ளைகளின் உயிரைப் போக்கடித்தான்; (ஆகையால், இது) அந்தோ! - ஐயோ!, மனை விழைவார் - (இன்பங் காரணமாகத்) தம் மனையாளை விரும்பி (அவள் வழியாக நடப்பவர்), மாண் பயன் எய்தார் - (தமக்கினிய துணையாய்ப் பெரிய பிரயோசனத்தைத் தர வல்லதாகிய அறத்தை அடையார்; வினை விழைவார்-(பொருள் தேடும்) தொழிலை விரும்பி (அதிலே முயல்பவர்), வேண்டாத பொருளும்-(அதற்கு விரோத மென்று) இகழும் பொருளும், அது - அந்த இன்பமே யாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ளா) "தையல்சொற் கேளேல்."

பெண்புத்தி கேட்பவன் பேதையிற் பேதையாவான்.

(வி-ளா) வசிஷ்டர் செய்யும் சிவபூசைக்குப் பஞ்சகௌவியங் கொடுக்கப் போய்க்கொண்டிருந்த காமதேனுவை இடைவழியில் அஷ்டவசுக்கள் மடக்கிப் பிடித்துத் தங்கள் பதிக்குக் கொண்டுபோனபோது, அது, அவ் வெண்மரையும் இழுத்துக் கொண்டு வசிஷ்டரிடம் சென்று, நடந்த செய்தியைச் சொல்லிற்று. உடனே அம்முனிவர்க்கு அடங்காக் கோப மூண்டதனால், அவர் அவ் வெண்மரையும், "நீங்கள் பூமியிற்போய்ப் பிறக்கக்கடவீர்கள்" என்று சபித்தார். அவர்களில் எழுவர் பயந்து, முனிவரை வணங்கி, "ஐயரே! இது எங்கள் எண்மரில் தலைவனாகிய ஒருவனால் நேரிட்ட குற்றமென்றே கொள்ளவேண்டும். ஏனென்றால், நாங்கள் எழுவரும் அவன் சொற்படி நடந்தோம்" என்றார்கள். ஆனால், நீங்கள் எழுவரும் பூமியிற் பிறந்தவுடனே, ஜனன நீங்கி வசுக்க ளாவீர்கள். இக் குற்றத்திற்குக் காரணனான உங்கள் தலைவன் மட்டும் பூமியிற் பல்லாண்டு சந்நியாசியா யிருந்து, பாரத

யுத்தத்தில் அர்ச்சுனன் கையம்பா லிறந்து, வசுவாய் வாக்கட வன்" என்று சாப விமோசனங் கூறினார்.

அப்படியே எண்மரும் பூமியை நோக்கி வந்துகொண்டிருந் தார்கள். இடைவழியி லவர்களுக்குக் கங்கை தென்பட்டாள். அவளை அவர்கள், "நீ எங்கே போகிறாய் அம்மா?" என்று கேட்க, "நான் பிரமன் சாபத்தால் பூலோகத்திற் போய்ப் பிறக் கப் போகிறேன்" என்றாள். அதற்கவர்கள், "நாங்களும் வசிஷ் டர் சாபத்தால் பூமியிற் போய்ப் பிறக்கப் போகிறோம். ஆகை யால், உன் வயிற்றிற் பிள்ளைகளாய்ப் பிறக்கிறோம். நீ மட்டும் எங்களுக் கோருபகாரம் பண்ணவேண்டும் அம்மணி! எங்களில் எழுவரைப் பிறந்த அப்போதைக் கப்போது கொன்றுவிடவேண் டும். அதனால் நாங்கள் உடனே பழையபடி வசுக்களாய்விடு வோம். ஒருவனைமட்டும் கொல்லாமல் விடவேண்டும். இதுவே வசிஷ்டர் சாப விமோசனம்" என்று வேண்டிக்கொண்டார்கள்.

அதற்குக் கங்கையும் உடன்பட்டுப் போய்ப் பூமியிற பிறந்து சந்தநு மகாராசனுக்கு மனைவியானாள். அவன், அவள்மேல் அதிக காதலாய் அவள் சொற்படி நடந்துவந்தான்; ஆகையால், அவள் வேண்டிக்கொண்டபடி, அவள் வயிற்றிற் பிறந்த முத லேழு பிள்ளைகளையும் பிறந்தவுடனே ஒவ்வொன்றாய்க் கங்கையில் வீசி யெறிந்து கொன்றான். எட்டாம்பிள்ளை அவள் கர்ப்பத்தி லிருந்தபோது, சந்தநுவின் மந்திரி பிரதானிகள் முதலியோர் அவனை நோக்கி, "வேந்தே! நீர் பெண் மோகத்தால், மனைவியின் பேச்சைக் கேட்டு, சிசுவதை செய்தது மன்றி சந்ததி வளர்ச்சிக் கும் இடம் பண்ணாமற் போனீர். இனியாவது அங்ஙனஞ் செய்யா மல் இந்த எட்டாம் பிள்ளையைக் காப்பாற்றக்கடவீர்" என்று நல்லறிவு கூறினார்கள்.

அதுகேட்ட அரசனுக்கு நல்லறிவுதித்து, பெண்மயக்கமு நீங்கிற்று. எட்டாம் பிள்ளையும் பிழைத்து, வீஷ்மர் என்று பெயர் பெற்றுப், பல்லாண்டு சந்நியாசியா யிருந்து, பாரதயுத்தத்தில் மாண்டு, பழையபடி வசுவாயிற்று. இதனால், மனைவிழைவார் மாண்பயன் எய்தார் என்பது விளங்கினமை காண்க.

சந்தநுவேந் தேழு தனைய ருயி ரிழந்தான். (அதற்குக் காரணியா யிருந்தவள் அவன் மனைவியாகிய) இந்துநுதற் கங்கை என்றும் பொருள் விரிக்கலாம். 'அந்தோ!' என்பது இரக்கக்குறிப்பு. மேலே பொருள் விரித்துள்ளபடி 'கங்கை' என்பதை மூன்றும் வேற்றுமைத் தொகையாக்கிக் 'கங்கையால்' என்று விரித்துரைத்துக் கொள்க.

[வரைவின்மகளிர்]

92. தொண்ட ரடிப்பொடியைத் தோளிறுக வீக்குதலால்
எண்டிசையும் போற்று மிரங்கேசா!— கண்டிருந்தும்
தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

(ப - ரை) எண் திசையும் போற்றும் இரங்கேசா - எட்டுத்திக்கி லுள்ளவர்களும் வந்து வணங்கித் துதிக்கின்ற திருவரங்கநாதக் கடவுளே!, தொண்டரடிப்பொடியை-தொண்டரடிப் பொடியாழ்வாரை, தோள் இறுக கட்டுதலால் - (அரசன் சேவகர், அவர்தாம் வைத்திருந்த தாசிக்காகக் கோயிற் கிண்ணத்தைத் திருடினாரென்று (அவருடைய) இரு தோள்களும் அழுந்தக் கட்டினதனால், கண்டு இருந்தும் - அதைப் பார்த்திருந்தும், தகை செருக்கி புன்மை நலம் பாரிப்பார் தோள் - ஆடல் பாடல் அழகு என்பனவைகளால் இறுமாந்து, தம் அற்பசுகத்தை, விலை கொடுப்பவர்க்கெல்லாம் விற்கும் பெண்களது தோளை, தம் நலம் பாரிப்

பார் - தமது புகழை உலகில் பரப்புதற்குரிய வுயர்ந்தோர், தோயார் - தீண்டார்.

(க - ரை) "மைவிழியார் மனை யகல்."

(வி - ரை) தொண்டரடிப்பொடி யாழ்வார், ஸ்ரீ ரங்கத்தில் நந்தனவனத் திருப்பணி செய்து, திருவரங்கநாதருக்குத் திருப் பூமாலை தொடுத்துக் கொடுத்துக்கொண்டு வழிபட்டுவருங் காலத்தில், அவரை, அவ் வூரிலுள்ள தாசி ஒருத்தி, தன் மாய வலைவீசிப் பிடித்து மயக்கி வைத்திருந்தாள். அவ் வலையை யறுத்துத் தப்ப முயலாமல், அவரும் அவளிடத்தில் உண்மைக் காதல் வைத்து ஒழுகினர். ஒருநாள் அவளுக்கு அவர், பொருள் கொடுக்க முட்டுப்பட்டதனால், அவரை அவள் வேண்டாவென்று ஒதுக்கினாள். அதற்காக வருந்தின ஆழ்வார் தனியே கிடந்து உறங்காமல் தவித்தார். ஸ்ரீ ரங்கநாதர், ஒரு வேதியச் சிறுவனாக வடிவெடுத்து, அரையிரவில் சந்நிதியிலிருந்த ஒரு பொற் கிண்ணத்தைக் கொண்டுபோய் அவ் வேசிக்குக் காட்டித் "தொண்டரடிப்பொடி கொடுக்கச் சொன்னார்" என்று கொடுத்துவிட்டு, அவரிடத்திற் போய், "உம்மை வேசி வரச்சொன்னாள்' என்று சொல்லிப் போனார். ஆழ்வார் அன்றிரவு அவளோடிருந்து, விடியற்காலையிற் புறப்பட்டுப் போய்விட்டார். சந்நிதியிலிருந்த கிண்ணங் காணாமையால் அரசனுக்கினையாற் காவல்காரர், தேடிப் புறப்பட்டு, அநுமானத்தால் தாசி வீட்டைச் சோதித்தபோது கிண்ணம் அகப்பட்டது. அவள், "தொண்டரடிப்பொடி, ஒரு வேதியச் சிறுவனிடத்தில் இதைக் கொடுத்தனுப்பினர்" என்று வாக்குமூலங் கொடுத்தாள். அதற்காகக் காவல்காரர் அவரைப் பிடித்துக் கட்டிக்கொண்டு போனார்கள். உடனே, ஸ்ரீரங்கநாதர் தோன்றி அவரை விடுவித்தார். இதனால், புன்னலம் பாரிப்பார் தோளைத் தோய்வதனால் வருங் கேடு விளங்குகின்றது. ஆகையால்,

அவர் தோளைத் தங்கலம் பாரிப்பார் தோயார் என்றமை சரி யென்க.

[கள்ளுண்ணுமை]

93. தக்கருரு மைந்தனென்பு சார்ந்தமது வுண்டசுங்கன்
எக்கருமஞ் செய்தான் இரங்கேசா!—மிக்க
களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

(ப-ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, தக்க குரு மைந்தன் என்பு சார்ந்த மது - பெருமையாய் மதிக்கத் தகுந்த வியாழபகவானுடைய பிள்ளையின் எலும்பு (மாமிச) முதலிய வைகளை அரைத்துக் கரைத்துக் கலக்கிய கள்ளை, உண்ட சுங்கன் - குடித்த சுக்கிரபகவான், எ கருமம் செய்தான் - என்ன காரியம் செய்தான்? (தன் பிராணனுக்கே ஆபத்தான காரியஞ் செய்துகொண்டான். ஆகையால், இது) மிக்க களித்து அறியேன் என்பது கைவிடுக - (ஒருவன்) அதிகமான கள்ளை மறைவிற் குடித்து வெறித்து, வெளியில் வந்து நான் குடித்தறியேனென்று (கள்ளுண்ணுதபோது பொய்யாசாரம் பேசுதலை) விடக் கடவன்; நெஞ்சத்து ஒளித்ததும் ஆங்கே மிகும் - (அவ் வுண்ட போதே, முன், பிறரறிந்தால் இழுக்காமென்று) மனதி லொளித்த குற்றமும், முன்னையளவின் மிகுந்து வெளிப்படும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) மதுவை மறைத்துக் குடித்தாலும் மயக்கத்தால் அதுவும் வெளியாமே.

"சாராயத்தை வார்த்துப் பூராயத்தைக் கேள்."

"கள்ளுண்டால் கள்ளனும் அகப்படுவான்."

(வி - ரை) வியாழ (குரு) பகவான் மைந்தன், சுக்கிர பகவானிடத்திற் கல்வி கற்கப் போயிருந்தான். சுக்கிர பகவான்

அசுரகுருவானமையால், அசுரர்களுக்குச் சுரகுருவாகிய வியாழ பகவான் மைந்தனுக்குத் தமது குரு கல்வி கற்பிப்பது பொறாமையாயிருந்தது. அப் பிள்ளையைக் கொண்டுபோய், அவர்கள் அநேக முறை கொன்றார்கள். அவ்வப்போதும் அவனைச் சுக்கிரபகவான் சஞ்சீவி மந்திரத்தால் பிழைப்பித்துக்கொண்டேயிருந்தார். அது தெரிந்த அசுரர் ஒருநாள், அவனை, நெடுந்தூரங் காட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய்க் கொன்று, கல்லில் வைத்தரைத்துக் கள்ளிற் கரைத்துக் கொண்டுவந்து, குருவுக்குக் கொடுத்தார்கள். அதை யவர் வாங்கி முன்பின் பாராமல் குடித்துவிட்டார். அந்த மயக்கத்தால், அவன் போனவிடந் தெரியாதிருந்த சுக்கிரபகவான், அவனைப் போஜன வேளையில் தேடத் தொடங்கினார். நெடுநேரந் தேடியுங் காணாமையால் அவர், 'அவன் எங்கிருக்கிறான்' என்று ஞானக் கண்ணால் நோக்கினபோது, தமது வயிற்றிலிருக்கிறானென்று கண்டுகொண்டார். உடனே சஞ்சீவி மந்திரத்தால் அவனை யவர் பிழைப்பித்து, அந்த மந்திரத்தை அவனுக்கு உபதேசித்தார். அவன் அவருடைய வயிற்றைக் கிறிக்கொண்டு வெளியில் வந்து, அம் மந்திரத்தால் அவரைப் பிழைப்பித்தான். இதனால் கள்ளுண்டார் படும் பாடு பெரும் பாடாவது காண்க; நெஞ்சத் தொளித்ததாகிய சஞ்சீவி மந்திரமும் வெளியாயினமை உணர்க. அஃது அங்ஙனம் வெளியாயிராதேல் சுக்கிரபகவான் கள்ளின் வெறியால் தமதுயிர்க்கே கெடுதி தேடிக்கொண்டிருப்பாரென்பதைத் தேர்ந்து தெளிக.

[சூது]

**94.** தன்மர் துரியோ தனனுடன் சூதாடி
இன்மையுற்றா ரன்றோ விரங்கேசா!—நன்மைப்
பொருள்கொடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, தன்மர் - தருமராஜர், துரியோதனனுடன் சூது ஆடி - தம் பங்காளியாகிய துரியோதனனோடு சொற்கேட்டான் ஆடி, இன்மை உற்றார் அன்றே - வறுமையை அடைந்தார் அல்லவா?, (ஆகையால், இது) சூது-சூதாட்டமானது, (தன்னைப் பழகினவனது) நன்மை பொருள்கெடுத்து-நல்ல பொருளைப் போக்கி, பொய்மேல் கொளீஇ-பொய்யை மேற்கொள்ளச் செய்து, அருள் கெடுத்து - மனத்திற் கொஞ்சமேனும் தயை யில்லாமற் போக்கி, அல்லல் உழப்பிக்கும் - இப்படி யவனை யெப்போதும் துன்பம் அனுபவிக்கச் செய்யும் (என்பதை விளக்குகின்றது).

(கு-ரை) "சூதும் வாதும் வேதனை செய்யும்." "சூது விரும்பேல்."

(வி - ரை) தருமபுத்திரர் துரியோதனனோடு சூதாடித் தம் ஆதினமும் அழிந்து, பன்னிரண்டு வருடம் வனவாச துக்கத்தையும், ஒரு வருடம் அஞ்ஞாதவாசத் துயரத்தையும் அனுபவித்து, மீட்டுந் தமது நாடு நகரத்தைப் பெறும்படி துரியோதனனோடு யுத்தஞ் செய்தபோது, "அசுவத்தாமா அதா குஞ்சரா" என்று பொய்யுஞ் சொல்லிக் கிளைஞரையும் நன்பரையுங் கொன்றார். இதனால், சூது தருமருடைய பொருள் கெடுத்து, பொய்மேற் கொளீஇ, அருள் கெடுத்து அல்லல் உழப்பித்தவாறு காண்க.

[மருந்து]

95. *அம்பருடன் வேள்விநுகர்ந் தக்கினிக்கு மந்தமுற்ற*
*தென்ப தறிந்து மிரங்கேசா!— தன்பசியின்*
*றியள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்*
*நோயள வின்றிப் படும்.*

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அம்பருடன் - இரகுவமிசத் தாசனாகிய அம்பரீடணமகாராசனுடைய, வேள்வி - யாகாகுதியை, நுகர்ந்து - அதிகமாகப் புசித்ததனால், அக்கினிக்கு - அக்கினிபகவானுக்கு, மந்தம் உற்றது - மந்தநோய் உண்டாயிற்று, என்பது அறிந்தும் - என்பதை அறிந்த பின்பும், தன் பசியின் தீ அளவு அன்றி - (ஒருவன்) தன் பசி தீபனத்தின் அளவுக்குத் தக்கபடி அல்லாமல், தெரியான் - (தன் உடற்கூறும், அதற்கேற்ற உணவும், காலமும்) ஆராயாதவனாகி, பெரிது உண்ணின் - (வேண்டிய வுணவை வேண்டிய காலத்து) மிக வுண்ணுவானாயின், நோய் - நோயானது, அளவு இன்றி - (அவனிடத்தே) அளவில்லாமல், படும் - வளரும்.

(க-ரை) "மிதூண் விரும்பேல்." பசியளவு அறிந்து புசி.

(வி - ரை) இரகுவமிசத் தாசனாகிய அம்பரீடண மகாராஜன் ஒருகாலத்தில், யானைத்துதிக்கைபோல ஆகுதி கொடுத்துப் பன்னிரண்டு வருடகாலம் விடாமல் ஒரு பெரு வேள்வி செய்தான். அந்த யாகத்திற் கொடுத்த ஆகுதியைத் தன் பசியள வறிந்து மிதமாய்ப் புசியாமல் அமிதமா யுண்டதனால், அக்கினி பகவானுக்கும் மந்தநோய் வந்தது. அதனால் அவன் நெடுங்காலம் வருந்திப் பிறகு குண மடைந்தான். இதனால் தீயி னளவன்றித் தெரியான் பெரிதுண்டதனால், அக்கினிபகவானும் தன் உதராக்கினி கெட்டு, நோயளவின்றிப் பட்டமை காண்க.

அங்கவியல் முடிந்தது.

---

## ஒழிபியல்

### [குடிமை]

96. தூடணமா மைவருடன் றுன்னுதலென் றேகன்னன்
ஈடன்னையை நீத்தா னிரங்கேசா!—நீட
அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, கன்னன் - கன்ன மகாராசன், ஐவருடன் துன்னுதல் - (தன் தாய் வந்தழைத்தபோது தான் போய்ப்) பாண்டவருடன் சேர்ந்து கொள்ளுதல், தூடணம் ஆம் என்று - பிறர் பழித்தற் கிடமாகும் என்றெண்ணி (அங்ஙனம் போகாமல்) ஈடு அன்னையை - தன்னை (அவள் மக்களாகிய பாண்டவரோடு) சரியாக எண்ணி யழைத்த தாயாகிய குந்திதேவியை, நீத்தான் - பிரிந்தான்; (ஆகையால், இது), நீட - வளர, அடுக்கிய - (பலவாக) அடுக்கிய, கோடி பெறினும் - கோடியளவாகப் பொருளைப் பெற்றாலும், குடி பிறந்தார் - உயர்குடியிற் பிறந்தவர்கள், குன்றுவ - தம் மொழுக்கங் குன்றுஞ் செயல்களை, செய்தல் இலர் - செய்யார் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) உயர்குடிப் பிறந்தார் கோடி பெறுவதாயினும் ஒழுக்கந் தவறார்.

(வி - ரை) ஸ்ரீ கண்ணபிரான் ஐவர்க்காகத் துரியோதனனிடத்திற் றூதுபோய்த் திரும்புகையில், குந்திதேவியைக் கண்டு, கன்னன் அவளுடைய பிள்ளையென்று உண்மையைச் சொல்லி, "நீ போய்க் கன்னனைக் கண்டு, அவனை உன் பிள்ளை யென்று தெரிவித்து அழைத்துவந்து ஐவரோடு சேர். அப்போது அர்ச்சுனற்கும் கன்னனுக்கும் உள்ள பகைமை ஒழியும். உன் ஆறு மக்க

ரும் க்ஷேமமாய் வாழ்வார்கள்" என்று அவனிடத்தில் அவளை அனுப்பினார். குந்திதேவியும் அப்படியே சென்று கன்னனைக் கண்டு, தன் பிள்ளையெனத் தெரிவித்து, அவன், தன்னோடு வந்தால், தலைப்பிள்ளை யாகையால், ஐவருக்கும் மூத்தவனாய், அவர்கள் அவன் சொற்படி ஏவல் கேட்க அரசாளலாம் என்று அழைத்தாள். கன்னன் அதை நம்பினான். ஆயினும், "அம்மே! இத்தனை நாள் கழித்து நீ வந்து இது சொன்னாய். இப்போது அப்படிச் செய்ய முடியாது. துரியோதனனை நான் விட்டு வந்தால் துரோகி யாவேன். அன்னமிட்ட வீட்டில் கன்ன மிடுவதுபோல நான் ஒழுக்கந் தவறி நடக்கமாட்டேன். நீ தாயாகையால் உனக்கு ஆயிரம் வந்தனம் தந்தனன்" என்று அவளை வணங்கி வழி விட் டனுப்பினான். அப்படியே அவன், ஒழுக்கங் குன்றாமல் கடைசிவரையில் துரியோதனன் பக்கமே யிருந்து, யுத்தத்தில் அவனுக்காகத் தன்னுயிர் கொடுத்து மாண்டான். இதனால், நீட அடுக்கிய கோடி பெறுவதா யிருந்தும் கன்னன் உயர்குடிப் பிறந்த சூரிய குமாரனாகையால், குந்தியாகிய தன் தாய்ப் பேச்சை யுந் தட்டிக் குன்றுவ செய்யாம லிருந்தமை காண்க.

'ஈடனையை' என்பதை 'ஏடனையை' என்றும் பாடம் ஓதுவாருளர்.

[மானம்]

97. ஆகங் குறைந்துருவே றானனில் லாளைவிடுந்
தேகநள வேந்த னிரங்கேசா!—ஆகையினால்
குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, நள வேந்தன் - நளமகாராஜன், இல்லாளை விடுத்து ஏகி - தன் மனைவியாகிய தமயந்தியைக் காட்டில் விட்டுப் பிரிந்து சென்று,

ஆகம் குறைந்து உரு வேறு ஆனான் - சரீரம் இளைத்துக் கறுத்து, உருவம் மாறினான்; ஆகையினால் - ஆகையால் (இது), குன்றின் அனையரும் - (குடிப்பிறப்பால்) மலைபோல் உயர்ந்தவரும், குன்றுவ - தாழ்வதற் கேதுவாகிய செயல்களை, குன்றி அனைய செய்யின் - ஒரு குன்றிமணி யளவாயினுஞ் செய்தால், குன்றுவர் - தாழ்வார்கள் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) உயர்குடிப் பிறந்தார் குன்றிமணியத்தனை மானங் குறைந்தாலுங் குன்றுவர்.

(வி - ரை) நளமகாராஜன் நடுக் காட்டில் நடு நிசியில் தன் இல்லாளை இல்லாளாய் விட்டுப் பிரிந்ததனால், பெருமை குறைந்து, உடல் சிறுத்துக் கறுத்து, உரு மாறிப்போய்ப் பிறகு, அவளைக் கண்டவுடன் தன் பழைய உரு வடைந்தான். இதனால், குன்றினனையாராகிய நளனும் மதிமயக்கத்தால், குன்றியனைய மானக்குறைவான காரியத்தைச் செய்ததனால் குன்றினமை காண்க.

[பெருமை]

98. மண்பரவு சக்கரத்தை மாலெடுப்ப வீட்டுமனார்
என்புகழாக் கொண்டா ரிரங்கேசா!—பண்பாற்
பெருமை யுடையவ ராற்றுவா ராற்றின்
அருமை யுடைய செயல்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மால் - திருநெடுமா லவதாரமாகிய கண்ணபிரான், மண் பரவு - உலகம் புகழும், சக்கரத்தை எடுப்ப-(பாரதயுத்தத்தில்) தமது சக்கராயுதத்தை எடுத்ததனால், வீட்டுமனார் - வீட்டுமாசாரியர், என் புகழ் ஆக கொண்டார் - (தமது சபதம் பலித்ததனால் தம்மை எல்லாரும்) மதிக்கத்தகுந்த கீர்த்தியாக (அதை) எண்ணிக்

கொண்டார்; (ஆகையால், இது) பண்பால் - நற்குணத்தால், பெருமை யுடையவர் - மேன்மையை உடையவர்கள், அருமை உடைய செயல் - (தாம் வரியவராகியும் பிறராலே செய்தற்கு) அருமையாகிய காரியங்களை, ஆற்றின் - (அவை செய்யும்) வழியால், ஆற்றுவார் - (முடிவுபெறச்) செய்ய வல்லவராவார் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) மேன்மக்கள் பிறரால் செய்தற்கரிய மேலான காரியங்களைச் செய்து முடிப்பார்கள்.

(வி - ரை) பாரதயுத்தத்தில் ஸ்ரீ கண்ணபிரான் தாம் ஆயுத மெடுக்கிறதில்லை யென்று சொன்னபோது, வீட்டுமர், "உம்மை நான் ஆயுதம் எடுக்கச் செய்கிறேன்" என்று சபதம் பண்ணினர். அப்படியே சயிந்தவனைக் கொல்விக்கக் கண்ணபிரான் சக்கராயுத மெடுத்துச் சூரியனை மறைத்ததனால், வீட்டுமர் சபதம் பலித்தது. வீட்டுமர்தாம், கண்ணபிரானை அப்படிச் சக்கரம் எடுப்பித்ததற்குக் காரணராயிருந்தவர். இதனால், பெருமை யுடையவராகிய வீட்டுமர், அருமையுடைய செயலை, ஆற்றினமை காண்க.

[சான்றாண்மை]

99. புத்தனெறி கற்கும் புராரி பதமளித்தான்
இத்தரணி போற்று மிரங்கேசா!—மெத்தவே
இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

(ப - ரை) இ தரணி போற்றும் இரங்கேசா - இவ் வுலகத்தார் வணங்கிப் புகழ்கின்ற திருவரங்கநாதக் கடவுளே!, புராரி - திரிபுர தகனஞ் செய்தவராகிய சிவபிரான், புத்தன் எறி கற்கும் - பௌத்த மதத்தினராகிய சாக்கியநாயனார் தம்மேல் எறிந்த கல்லுக்கும் பதம் அளித்தான் - (மகிழ்ந்து) சிவபதம் வழங்கினார்; (ஆகை

யால், இது,) மெத்த - மிகவும், இன்னா செய்தார்க்கும் - துன்பம் செய்தவர்களுக்கும், இனியவே செய்யாக்கால் - (சால்புடையவர்) இன்பந் தருமவைகளையே செய்யாவிட்டால், சால்பு - அவரது சான்றாண்மை, என்ன பயத்ததோ - (வேறே) என்ன பயன் உடையதாகுமோ? (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) துன்பஞ் செய்தார்க்கும் இன்பஞ் செய்தலே சான்றாண்மையாம்.

(வி - ரை) காஞ்சிப்பதியில் இருந்த பௌத்தமதத்தின ராகிய சாக்கிய நாயனார்க்குச் சிவபக்தி முதிர்ந்திருந்தது. அத னால் அவர் தம்மைத் தம் மதத்தினர் சந்தேகித் தொறுக்காத படி, சிவலிங்கத்தின்மேல் கல்லெறிவதையே நியமமாகக் கொ ண்டு தினந்தோறு மறவாமல் அக் கடுந்தொழிலைச் செய்து வந் தார். ஆயினும், சிவபெருமான் தமக்குத் துன்பம் விளைத்த அந் நிய காரியஞ் செய்தவர்க்கும், இன்பம் விளைக்குந் தமது தூய பதவியை யளித்தார். மெத்த இன்னா செய்தவராகிய சாக்கியநாய னார்க்கும், சிவபிரான் இனியவே செய்ததனால் அவருடைய சால் பின் பயன் இன்னதென வெளியாயினமை காண்க. அப்படிச் செய்யாவிட்டால் சால்பு என்ன பயனுக்குத்தா னிருக்கிறதோ? என்பதில் ஒகாரம் ஐயம், ஏகாரம் அசைநிலை. இதனால், இன்னா செய்தார்க்கும் இனிய செய்தலே சால்பு. அப்படிச் செய்யாக் கால் சால்பினாற் பயனில்லை என்பது பெறப்பட்டது. சாக்கிய நாயனார் பரமசிவனுக்கு இன்னா செய்யவேண்டும் என்று தம் மனத்திற் கொண்டவரல்லர். சிவனை மறவாமல் இருப்பதற்கு அடையாளமாகவும், அதற்காகத் தம்மைப் பிற சாக்கியர் வருத்தாம லிருக்கவும், கல்லெறிந்து வந்தார். அதனால், அவர் சிவபத்தியின் முதிர்ச்சிக்கு வியந்த சிவபெருமான் அவ ரெறிந்த கல்லைப் பூவா கக் கொண்டார். ஆகையால், இப் பாடலில் சாக்கிய நாயனாரை

இன்று செய்தவராகக் கொண்டுள்ள உவமையைத் தொழிலுவம மாகமட்டும் கொள்ளவேண்டும்; பயனுவமாகக் கொண்டாற் பயன் படாதென்றறிக.

[பண்புடைமை]

100. துன்பமுறுந் தங்கையெனச் சொல்லி யுதிட்டிரனூர்
இன்பமுற்றா னன்றோ விரங்கேசா!—அன்பின்
நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, யுதிட்டிரனூர் - தருமர், தங்கை துன்பம் உறும் என்ன சொல்லி - (சயிந்தவனை அர்ச்சுனன் கொன்றால்) தங்கை துன்பப்படுவாள் ஆகையால், சாக்கிரதையாயிரு என்று துரியோதனனுக்குச் சொல்லி யனுப்பி, இன்பம் உற்றான் அன்றோ - (அதற்காகச்) சந்தோஷம் அடைந்தா ரல்லவா? (ஆகையால், இது) இகழ்ச்சி - (தன்னை) இகழ்தல், அன்பின் நகை உள்ளும் - (ஒருவனுக்கு) அன்போடு கூடிய விளையாட்டினிடத்தும், இன்னாது - துன்பந் தருவதாம்; (ஆகையால்) பாடு அறிவார் மாட்டு - பிறரியல்பு அறிந்து நடப்பவரிடத்தில், பகையுள்ளும் - பகையுள்ளவிடத்தும், பண்பு உள - (அப் பகை யுண்டாகாமல் இனிமையாகிய நல்ல குணங்களே உண்டாவனவாம் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) நல்லார், பகையுள்ளவிடத்தும் நற்குணமே காட்டுவார்கள்.

(வி - ரை) பாரதத்தில் பதின்மூன்றாநாட் போரில், அர்ச்சுன குமாரனாகிய அபிமன்னனோடு வீமசேனன் சேராதபடி, சயிந்தவன் தடுத்ததால், அபிமன்னன் ஒருவருஞ் சகாய மில்லாமல் மாண்டான். அந்தச் சேதி தெரிந்த அர்ச்சுனன், "என் மகன் சாதற்குச் சாதகமாயிருந்த சயிந்தவனை நாளை யுத்தத்தில் சூரியன்

மறைவதற்குள் மாய்ப்பேன்; அப்படி மாய்க்காமற்போவேனானால், நான் அக்கினிப் பிரவேசஞ் செய்து மாய்வேன்" என்று சபதஞ் செய்தான். அதைத் தருமர் அறிந்தவுடனே, "சயிந்தவனிறந்தால், தங்கை துன்பப்படுவாள்; ஆகையால், நாளை யுத்தத்தில் சயிந்தவனைக் காப்பாற்று" என்று துரியோதனனுக்குச் சொல்லியனுப்பினார். இதனால் பாடறிந்தவராகிய தருமருக்குப் பகைவரிடத்திலும் பண்பிருந்தமை காண்க.

[நன்றியில் செல்வம்]

101. செப்பு மிருநிதிகள் சேர்ந்துங் குபேரனுக்கு
எப்பொருளா லென்னா மிரங்கேசா!—கைப்பொருள்
அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியன்மூத் தற்று.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, குபேரனுக்கு - குபேரன் என்னும் அஷ்டதிக்குப் பாலகர்களில் ஒருவனுக்கு, செப்பும் - உயர்வாகச் சொல்லும், இரு நிதிகள் - சங்கநிதி பதுமநிதிகள், சேர்ந்தும் - சேர்ந்திருந்தும், எ பொருளால் - எந்தப் பொருளால், என் ஆம் - என்ன பிரயோசனம் உண்டாகும்?, (அவன் கொடையாளி அல்லவாகையால் ஒரு பிரயோசனமும் உண்டாகாது என்றபடி. ஆகையால், இது) கை பொருள் அற்றார்க்கு - கையிலே பொருள் இல்லாத வறியவர்க்கு, ஒன்று ஆற்றாதான் செல்வம் - (அவர் வேண்டிய) ஒரு பொருளைக் கொடாதவனுடைய செல்வமானது, மிக நலம் பெற்றாள் - மிகுந்த அழகு வாய்ந்த ஒருத்தி, தமியன்-(மணஞ்செய்து கொடுப்பா ரில்லாமையினால்) தனியளாயிருந்து, மூத்து அற்று - வயதில் முதிருந் தன்மையை உடையது (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) "எட்டி பழுத்தென்ன? ஈயாதான் வாழ்ந்தென்ன?"

(வி - ரை) அஷ்டதிக்குப் பாலகர்களில் ஒருவனாகிய குபே ரனுக்கு அளவற்ற ஆஸ்தியும் சங்கநிதி பதுமநிதி முதலியவைகளும் பொக்கிஷத்தில் நிரம்பியிருக்கின்றன. உலகத்தில் ஒருவரிடத்தி லும் இல்லாத செல்வம் தன்னிடத்தில் சேர்ந்திருக்க வேண்டு மென்று, அவன் வரம் பெற்றுச் சேர்த்துவைத்திருக்கிறான். 'எட்டி பழுத்ததுபோல,' அது யாருக்கும் உபயோக மில்லை. இந் தப் பொருளே கன்னமகாராஜனிடத்தில் இருந்திருந்தால், எத் தனை பேர்க்கு உபகாரமா யிருந்திருக்கும்! இதனால், கைப்பொ ருள் அற்றார்க்கு ஒன்றாற்றாத குபேரன் செல்வம், மிக நலம் பெற்றாள் தமியளாய் மூத்ததுபோ லாயினமை காண்க. குபேரன் கொடையாளி அல்லன்; ஆகையால், அவனுக்கு எப் பொருளால் என்ன பிரயோசனம் உண்டாகும்? என்றார்.

[நாணுடைமை]

102. வாவி புகுந்த மகிபன் தனதுயிரை
ஈவதற்குப் போந்தா னிரங்கேசா!—ஆவதனால்
நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டால்
நாண்டுறவார் நாணாள் பவர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வாவி புகுந்த மகிபன் - (சண்டையிற் செத்தவர்களை எழுப்பத் தவஞ் செய்யும் பொருட்டுத்) தடாகத்தி லிறங்கின துரியோதனன், தனது உயிரை ஈவதற்கு - (வீமசேனன் வந்தழைத்தபோது, நாணத்தால்) தன் உயிரைக் கொடுப்பதற்கு, போந்தான் - (அதி னின்றும்) வெளிப்பட்டு வந்தான்; ஆவதனால்-ஆகையால் (இது), நாண் ஆள்பவர் - நாணத்தை (அதனது சிறப்பறிந்து) விடாது நடப்பவர், நாணால் - (அந்நாணும் உயிருங் கூடி நிற்கமாட்டாத விடத்து), நாணத்தையே பெரிதா மதித்து) அதைக் காக்கவேண் டும் என்பதனால், உயிரை துறப்பர் - உயிரை நீங்குவார்; உயிர்

பொருட்டால் - உயிர் சிதையாமற் பொருட்டு, நாண் துறவார் - நாணினை விடார் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) உயிரினும் நாணமே சிறந்தது. நாணுடையார் உயிரினும் நாணத்தையே பெரிதா மதிப்பர்.

(வி - ரை) துரியோதனன் பாண்டவர்களோடு பதினேழு நாள் யுத்தஞ் செய்து, தன் சேனைகளையெல்லாம் மடித்துப் பதினெட்டாநாள் காலையில், 'அவர்களை யெழுப்பிச் சண்டைக்கழைத்துக்கொண்டு போகலாம்' என்றெண்ணித் தவஞ் செய்யப் புறப்பட்டான். 'அது யாருக்குந் தெரியாமல் இரகசியமாயிருக்க வேண்டும்' என்றெண்ணின அவன், அங்கொரு தடாகத்தி லிறங்கிக் கண் மூடிக் கடுந்தவம் செய்துகொண்டிருந்தான். மாயவனாகிய கிருஷ்ண சகாயத்தால், அதை அறிந்துகொண்ட வீமசேனன், சற்றேனுந் தாழாது அத் தவ முடிவதற்குள் அதை அவமாக்க, ஓடிவந்து, தடாகத்தி லிருந்த துரியோதனனைப் போருக்கழைத்தான். அது கண்ட துரியோதனன், 'இப்போது, இங்கு நாம் இன்னுந் தாமதித்திருந்தால், சத்துருவைக் கண்டஞ்சி ஒளித்துக்கொண்டோம்' என்னும் அவகீர்த்திக் கிடமாகும். ஆகையால், நமக்கு உயிரினும் நாணமே சிறந்தது' என்றெண்ணி, அதினின்றும் வெளிப்போந்து, யுத்தஞ் செய்து பிராணனை விட்டான். இதனால், நாணுள்ளவனாகிய துரியோதனன், உயிர்ப்பொருட்டால் நாண் டுறவாமல், நாணால் உயிரைத் துறந்த உத்தம குணமுடையான் ஆயினமை காண்க. இச் செய்யுள் சிதைந்திருப்பதனால் வேறு பாடபேதமும் உண்டெனவறிக.

[குடிசெயல் வகை]

103. அன்னை யடிமைக் கமுதுகொள்ளார்ந் தெள்ளனுடன்
இன்னல் துடைத்தா ளிரங்கேசா!—உன்னுங்கால்

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அன்னை அடிமைக்கு - (கருடபகவான் தன்) தாயின் அடிமைத்தனத்தை நீக்கும்பொருட்டு, அமுது கொணர்ந்து - (தேவலோகம் போய்) தேவாமிர்தங் கொண்டுவந்து கொடுத்து, எள்ளலுடன் இன்னல் துடைத்தான் - தன் தாயின் இகழ்ச்சியுடன் துன்பத்தையும் நீக்கினான்; (ஆகையால், இது) உன்னுங்கால் - யோசிக்குமிடத்து, ஒருவனுக்கு நல் ஆண்மை என்பது - ஒருவனுக்கு நல்ல ஆண்தன்மை என்று சொல்லப்படுவது, தான் பிறந்த இல் ஆண்மை ஆக்கி கொள்ளல் - தான் பிறந்த குடும்பத்தை ஆளுந் தன்மையைத் தனக்கு உண்டாக்கிக்கொள்ளுதலாம்.

(க - ரை) தன் குடும்பத்தைத் தான் ஆளப்பெறுதலே நல்லாண்மையாம்.

(வி - ரை) விநதை யென்பவளும் கத்துருவை யென்பவளுங் காசிபரிடஞ் சென்று,"அக்கை தங்கைகளாகிய நாங்களிருவரும் தங்களிடத்திற் பிள்ளை வரத்துக்கு வந்தோம்" என்றார்கள் அப்போது அவர் விநதையை நோக்கி, "உனக்கெத்தனை மக்கள் வேண்டும்?" என்றார். "இருவர் போதும்" என்றாள் விநதை. அவர், கத்துருவையைக் கேட்டபோது, அவள், தனக்கு ஆயிர மக்கள் வேண்டுமென்றாள். இருவர்க்கும் "அப்படியே தந்தோம்; போங்கள்!" என்றார் முனிவர். சில நாளில் இருவரும் கருவுற்றார்கள். இளையவளாகிய கத்துருவை ஆதிசேடன் முதலிய ஆயிரமக்களைப் பெற்று மகிழ்ந்திருந்தாள். மூத்தவளாகிய விநதைக்கு இரண்டு முட்டைகள் பிறந்து நெடுநாளாகியும் வெடிக்காம லிருந்ததனால், அவள், 'அவைகள்அழுகிப்போயினவோ, என்னவோ,' என்றையுற்றவசரப்பட்டு, அவைகளில் ஒன்றை உடைத்துப் பார்த்தாள். அதி

லிருந்து அருணன் ஜனிப்பினான். அவனுக்கு உருவம் இடுப்புவரை
யில்தான் ஏற்பட்டிருந்தது. மற்றவை யில்லாமையால் முடவனான
அவன், தாயைப் பார்த்து, "நீ அவசரப்பட்டு முட்டையை உடைத்த
தால் நான் முடவனானேன். இன்னும் மற்ற நாளும் சென்று நான்
பிறந்திருப்பேனானால் சுத்தவீர னாவேன். என்னை நீ யிப்படிச் செய்
ததனால், உன் தங்கைக்கு அடிமையாகக் கடவாய்" என்று சபித்
தான். "நான் தெரியாமல் குற்றஞ் செய்தேனென்று உனக்குத்
தெரிந்தும், என்னை நீ இப்படிச் சபித்தாயே; இதற்கு விமோசனம்
எப்படி?" என்றாள் விநதை. அதற்கு அருணன், "அம்மே! நீ விச
னப்படாதே! இன்னும் உடையாமலிருக்கிற மற்றொரு முட்டை
யை நீ அதிசாக்கிரதையாய்ப் பாதுகாத்துவா! அதினின்றும் மகா
வீரனாகிய கருடன் தோன்றுவான். அவனால் உனக்கிந்த அடிமைத்
தன்மை நீங்கும்" என்று சொல்லிச் சூரியனுக்குச் சாரதியாகப்
போனான். பிறகு விநதை, அருணன் சொற்படி மற்றொரு முட்டை
யைப் பத்திரமாய்ப் பாதுகாத்துவந்தாள். அங்கு உச்சைசிரவம் என்
னும் தேவேந்திரன் குதிரை புல் மேய்ந்துகொண்டிருந்தது. அதைக்
கண்ட விநதை, "இந்தக் குதிரை சுத்த வெள்ளை" என்றாள். அது
கேட்ட கத்ருவை, "இல்லை; வாலில் கறுப்பிருக்கிறது" என்
றாள். "ஆனால் இப்போது இருட்டாய்விட்டது; இதில் தோற்ற
வர் வென்றவர்க்கு அடிமை யாகவேண்டும்; நாளைக்குப் பார்ப்
போம்" என்று இருவரும் போய்விட்டார்கள். அதற்குள் கத்ரு
வை, அக்கைக்குத் தெரியாமல், தன் பிள்ளைகளில் ஒரு கரும்
பாம்பைக் கொண்டுபோய், அதன் வாலிற் சுற்றிவைத்தாள். மறு
நாள் இருவரும் போய்ப் பார்த்தபோது, கத்ருவை விநதையை
நோக்கி, "பார்த்தாயா அக்கா! நான் சொன்னது சரியாயிருக்
கிறது; வாலிற் கறுப்பு" என்று காட்டினாள். விநதை, தன் தங்கை
யை நம்பி மோசம்போய், அவளுக்கு அடிமையாய்க் காலங்
கழித்துவந்தாள்.

பின்பு சில நாளில் கருடன், நாள் நிரம்பி முட்டை வெடித்து வெளிப்பட்டான். வெளிப்பட்டதும் அவன், தாயை வணங்கி, அவள் முகவாட்டத்தைக் கண்டு, அதற்குக் காரணம் அவளுடைய தங்கைக்கு அவள் அடிமையா யிருப்பதே என்றறிந்து, தன் சிறிய தாயிடத்திற் சென்று, "என் தாயின் அடிமைத்தனத்தை மாற்ற உங்களுக் கென்ன கொடுத்தால் முடியும்?" என்று கேட்டான். அதற்கு, அவள் மக்களாகிய சேடன் முதலிய பாம்புகள், "தம்பீ! எங்களுக்கு நீ தேவாமிர்தம் கொண்டுவந்து கொடுத்தால் உன் தாயின் அடிமைத்தனத்தை நீக்கிவிடுகிறோம்" என்றார்கள். அப்படியே கருடன் அதி வேகமாய்த் தேவலோகம் போய்ச் சகல தேவர்களையும் வென்று, தேவேந்திரனைத் துரத்தி முதுகு காட்டி யோட்டித் தேவாமிர்தத்தை எடுத்துக் கொண்டுவந்து கொடுத்துத் தன் தாயின் அடிமைத்தனத்தையும் துன்பத்தையும் நீக்கிக்கொண்டான். இதனால், கருடற்கு நல்லாண்மை யிருந்ததனால், அவன், தான் பிறந்த இல்லாண்மை யாக்கிக் கொண்டது காண்க.

[உழவு]

104 வன்பா ரதத்தலங்கை வைத்தார்க் கெதிரில்லை
என்பா ரதனால் இரங்கேசா!—முன்பார்
உழுவா ருலகத்தர்க் காணி யஃதாற்
றெழுவாரை யெல்லாம் பொறுத்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வன்மை பாரதத்து - பலம் பொருந்திய பாரதயுத்தத்தில், அலம் கை வைத்தார்க்கு - கலப்பை ஆயுதத்தைக் கையில் வைத்துக்கொண்டிருந்த பலபத்திரராமர்க்கு, எதிர் இல்லை என்பார் - எதிர் நின்று சண்டை செய்பவர் இல்லையென்று ஸ்ரீ கிருஷ்ணன் முதலியோர் எண்ணினதுபோலவே எல்லோர்க்கும் உலகோர் சொல்லுவார்கள்.

அதனல் - ஆகையால், (இது) முன் பார் உழுவார் - முதன்மையாய் நின்ற பூமியை உழுகிறவர்கள், அஃது ஆற்ருது - அவ்வுழவுத்தொழிலைச் செய்யமாட்டாமல், எழுவாரை எல்லாம் பொறுத்து - வேறு தொழில்களிற் செல்பவர்களை யெல்லாம் தாங்குதலால், உலகத்தார்க்கு - உலகத்தாராகிய தேர்க்கு, ஆணி - அச்சாணியாவர்கள் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) "தொழுதூண் சுவையி னுழுதூண் இனிது."
"ஒறுவா ரெல்லாம் உழுவான் தலைக்கடையில்."

(வி - ரை) பாரதயுத்தத்தில் அர்ச்சுனன் பக்கத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இருந்தும், பலபத்திரரும் பதினுயிரம் தேர்க்காரரும் துரியோதனன் பக்கம் இருந்ததால், "ஜயாபஜயம் எப்படியிருக்குமோ?" என்று சந்தேகப்பட்டார். 'எத்தனையோ விற்படை, வேற்படை, வாட்படை, ஆட்படை, குதிரைப்படை, தேர்ப்படைகளாகிய அறுவகைப் படைகளும், பலபத்திராமர் கையி லிருந்த அலப்படையாகிய கலப்பைப் படைக்கு நிகரல்ல' என் றுணர்ந்த கண்ணபிரான், பலபத்திராமரை வஞ்சனை செய்து, யுத்தத்தி லிருக்கவொட்டாமல் தடுத்துப் பூப் பிரதக்ஷணம் செய்ய அனுப்பிவிட்டார். இதனல், பலபத்திராமரைப்போல்கலப்பையை ஆயுதமாக வைத்து உழுவாரெல்லாம், அஃதாற்ரு தெழுவாரையெல்லாம் தமக்குள்ளடக்கித் தாங்குவதனுல்,உலகத்தார்க்கு ஆணியாவார் என் றுணர்க. அஃதாற்ரு தெழுகின்ற உலகத்தாராகிய தேர்க்கு, உழுவார், அச்சாணிபோலிருந்து தாங்குவா ரென்றறிக.

[நல்குரவு]

105. காவலனும் பாஞ்சாலன் கண்டு துரோணரைநீர்
ஏவரென்று னன்றே விரங்கேசா!—தாவில்
அறஞ்சார நல்குர வின்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, காவலன் ஆம் பாஞ்சாலன் - அரசாட்சி செய்துகொண்டிருந்த (நேசனாகிய) பாஞ்சாலதேசத்து மன்னன், துரோணனை கண்டு - தனக்குப் பாலிய சிநேகராகிய துரோணாசாரியரைப் பார்த்து, நீர் எவர் என்றான் அன்றோ - நீர் யார் என்று கேட்டானல்லவா?, (ஆகையால், இது) தாவில் - கெடாத, அறம் சாரா நல்குரவு - (பொரு ளில்லாமையினால்) அறமும் பொருந்தியிராத தரித்திரமுடையவன், ஈன்ற தாயாலும்-பெற்ற தாயினாலும், பிறன்போல நோக்கப்படும் - அன்னியன்போல நினைத்துப் பார்க்கப்படுவான் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை)) இல்லானை ஈன்ற தாயும் வேண்டாள்.

(வி - ரை) பாஞ்சால மன்னனும் துரோணாசாரியரும் பாலிய சிநேகராயிருந்தவர்கள். அப்போதவர்களுக்குள்ளிருந்த நேசத்தின் முதிர்ச்சியால், பாஞ்சாலன், துரோணனை நோக்கி, "நேசரே! உம்மை நான் என்றும் மறவேன். உமக்கு, நான் அரசாளுங் காலத்தில், பாதி ராச்சியம் பங்கிட்டுக் கொடுப்பேன்" என்று சொல்லியிருந்தான். பிறகு, அவன் அரசாளுங் காலத்தில், துரோணர், பிள்ளைக்குப் பாலில்லாமையால் பசு வேண்டி, அவனிடத்திற் சென்றார். இவரைக் கண்டதும் அவன், "நீர் யாவர்?" என்றான். அதற்கிவர், "ஓஹோ! உமக்கு அடையாளந் தெரியவில்லையோ! நான்தான் துரோணன். நீரும் நானும் தனுர்வேதங் கற்றபோது, நீர் அரசாட்சி செய்கையில் எனக்குப் பாதி யிராச்சியம் தருவதாகச் சொன்னீரே! மறந்தீரா?" என்றார். அது கேட்டவுடனே அவனுக்குக் கோபம் வந்தது. இவர், தலையுந் துணியுங் கறுத்து, ஏழைப் பிராமணராய் அவன் கண்ணுக்குத் தோன்றினார். ஆகையால், அவன், "இவன் யாரோ பயித்தியக்காரன்!— பாதி ராச்சியம் பங்கிட்டுக்கொடுக்கச் சொல்கிறான்.

இவனை இங்கிருந்து கொண்டுபோய்த் தூரத்தில் விட்டு வாருங்கள்!" என்று காவல்காரருக்குக் கட்டளையிட்டு, அவரைத் தூரத்தி விட்டான். இதனால், துரோணர், நாவில் அறஞ்சார நல்குரவடைந்திருந்ததனால், ஈன்ற தாயினும் ஏற்றமான அன்புடையவனாயிருந்த அவருடைய நண்பனாகிய பாஞ்சாலனால் பிறன்போல நோக்கப்பட்டமை காண்க.

'அன்றோ' என்னும் எதிர்மறை வினா, ஆம் என்னும் உடன்பாட்டு விடை தருவதறிக. நல்குரவு: ஆகுபெயராய் அஃது உடையானைக் குறித்தது.

[இரவு]

106. அங்கியும்பர் கோன்கா வருந்தநினைந் தர்ச்சுனன்பால்
இங்கிதமாப் பெற்றா னிரங்கேசா!—மங்கா
திரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அங்கி- அக்கினி பகவான், உம்பர்கோன் கா - தேவேந்திரனுடைய தாகிய காண்டவவனத்தை, அருந்த நினைந்து - உண்ண எண்ணி, அர்ச்சுனன்பால் - அர்ச்சுனனிடத்தில் (யாசித்து), இங்கிதம் ஆக பெற்றான்- (யாதொரு தடையுமின்றி) மனமகிழ்ந்து கொடுக்கப் பெற்றான்; (ஆகையால், இது) கரத்தல்-தமக்குள்ளது மறைத்தலை, கனவிலும் தேற்றாதார் மாட்டு - கனவிலும் அறியாதவரிடத்து, மங்காது - கூசாமல், இரத்தலும் - யாசித்தலும், ஈதலே போலும் - வறியவர்க்குக் கொடுத்தலே போலும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) இயல்வது கரவாரிடத்தில் இரத்தலும் ஈதலே போலாம்.

(வி - ரை) அக்கினி பகவான் காண்டவவனத்தைப் புசித்து ருசி காண இச்சை கொண்டான். ஆகையால் அவன், அது தேவேந்திரனுடையதென்று தெரிந்திருந்தும், 'அவன் குமாரனாகிய அர்ச்சுனனே அதைத் தனக்கு வழங்கவல்லவன்' என்றறிந்து, அவனிடத்தில் ஒரு வேதியனாக வடிவெடுத்துச் சென்று, "ஏ, பற்குண! நான் பசித்திருக்கின்றேன்; எனக்கு உணவாகக் காண்டவ வனத்தை நீ வழங்கினால் என் பசி தணியும்" என்று இரந்தான். அதற்கு அர்ச்சுனன் மன மகிழ்ந்து, "அப்படியே ஆகுக" என்று சற்றேனுந் தாழாமல் தத்தஞ் செய்து கொடுத்து, தேவர்களோடு போர் புரிந்து வென்று, காண்டவவனத்தை அக்கினியுண்ணக் கொடுத்துப் புகழ் பெற்றான். காத்தல் கனவிலுந் தேற்றாதவனாகிய அர்ச்சுனனிடத்தில் அக்கினிபகவான் காண்டவ வனத்தையிரந்து பெற்று, அதனால் அவனுக்குப் புகழைக் கொடுத்தான். காத்தல் செய்யாது கொடுத்தவனுக்கு, அவன் கொடுத்ததைப் பெற்றுக்கொண்டவன், அதற்கு ஈடாகப் புகழைக் கொடுத்ததனால், இரத்தலும் இங்கு, ஈதலாயிற்றென்றுணர்க. இப்படியே இன்றும் இவ் வுலகில் இயல்வது காவாமற் கொடுப்பவர்க்கு, இரப்பவர், புகழைக் கொடுப்பதனால், இரத்தல் ஈவதாவது காண்க.

[இரவச்சம்]

107. சென்று பலிபக்கல் செங்கைவிரித் தேற்றல்பழு
தென்றுகுன்றி நின்றா யிரங்கேசா!—நன்றிதரும்
ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, பலி பக்கல்-மாபலிச் சக்கரவர்த்தியி னிடத்தில், சென்று - (நீ) போய், செங்கை விரித்து ஏற்றல் பழுது என்று - உன்னுடைய இரண்டு கைகளையும் நீட்டி விரித்து (மூவடி மண்ணுக்காக அவன் தாரை)

வார்ப்பதை) ஏற்றுக் கொள்ளுதல் இழிவு என்று எண்ணி, குன்றி நின்றாய் - குறளாய்க் குறுகி நின்றாய்; (ஆகையால், இது) ஆவிற்கு-சிறு தாகமுடைய பசுவுக்கு, நன்றி தரும் - நன்மையைக் கொடுக்கின்ற, நீர் என்று - (தரும நோக்கி, இதற்குத்) தண்ணீர் தரல்வேண்டுமென்று, இரப்பினும் - இரந்து சொல்லும்போதும், இரவின் - அவ் இரவுபோல, நாவிற்கு - (ஒருவனுடைய) நாக்குக்கு, இளிவந்தது இல் - அவமானம் வந்தது வேறில்லை (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) "ஏற்பிகழ்ச்சி." அறத்திற்கிரப்பதும் அவமானமாம்.

(வி-ரை) மாபலிச்சக்கரவர்த்தி, மூன்றுலகையுந் தனக்கு உரிமையாக்கிக்கொண்டு, அவற்றை வேதியர்க்கு யாகத்தில் தானம் பண்ண நினைத்திருந்தபோது, தேவர்கள் தங்களுக்குத் தங்க இடம் இல்லையேயென்று திருப்பாற்கடற் கரையினின்று முறையிட்டார்கள். ஸ்ரீமன் நாராயண பரமாத்மா பிரசன்னமாய், தேவர்களுக்கு அபயாஸ்தங் கொடுத்து, அனுப்பினார். முன்பு நரசிங்கமாய் அவதரித்தபோது, "இனி அசுரரைக் கொல்வதில்லை" என்று வாக்களித்திருந்தபடி அவர், 'பலிசக்கரவர்த்தியைக் கொல்லவொண்ணாது' என்றெண்ணி, ஒரு சிறு குறள் வடிவான வாமன வுருவங்கொண்டு, அவனுடைய யாகசாலையிற் புகுந்து, மூவடிமண் கேட்டார். இதனால், தேவரைக் காத்தலாகிய நற் கருமத்தின் பொருட்டு இரக்கச் சென்றாராயினும் நாராயண பரமாத்மா, தம் நாவிற்கு அதினும் இளிவந்ததில்லையாகலான், தமது இரண்டிலக்ஷத்தெண்பதினாயிர யோசனை தூரம் பருத்து நீண்ட பெரிய சரீரத்தை ஒரு சிறு குறள் வடிவாகக் குறுக்கிக் குன்றிச் சென்றமை காண்க. மாபலியை ஏமாற்றவே அங்ஙனஞ் சிறு குறளாய்ச் சென்றானன்றி, நாராயண பரமாத்மா இரவை நாணி அங்ஙனஞ் செய்யவில்லை. ஆகையால், இதுவும் தொண்ணூற்றென்பதாஞ் செய்யுளைப் போலவே தொழிலுவமமன்றிப் பயன் உவம மாகாது.

'நன்றி தரும்' என்பதை 'நீர்' என்பதனோடு ஒட்டுக. ஐந்தனுருபு எல்லைப்பொருளது. தருமத்திற் கிரந்தாலும் இரவு இரவே யாகும்; ஆகையால், இரவு எஞ்ஞான்றும் இழிவேயாகும் என்க.

[கயமை]

108. தேனிருந்த சொல்லாளைத் தேர்வேந்தர் காணவுடை
என்னுரிந்தான் மேனா ளிரங்கேசா!—ஆனதனால்
நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மேல் நாள் - முற்காலத்தில், தேன் இருந்த சொல்லாளை - தேன் போலும் இனிய மொழியைப் பேசும் திரௌபதியை, தேர் வேந்தர் காண - தேரேறிச் செல்லும் அரசர் பலரும் காணும்படி, உடை என் உரிந்தான் - (துரியோதனன்) துகில் என் உரிந்தான்?, ஆனதனால் - (ஆகையால்), இது நன்றி அறிவார் - தமக் குறுதியானவைகளை அறிபவரைக் காட்டிலும், கயவர் திரு உடையர் - கீழ் மக்கள் நன்மையுடையவ ராவார்; நெஞ்சத்து - (நன்றறியும் அம் மேன்மக்கள்போலத் தமது) மனத்தினிடத்தில், அவலம் இலர் - (அவை காரணமாகக்) கவலை யற்றவர்களா யிருக்கிறார்கள் (ஆகையால் என்பதை விளக்குகின்றது).

(க - ரை) நன்றறிவதிற் கவலையுற்ற மேன்மக்களினுங் கவலையற்ற கீழ்மக்களே நல்லவராவார்.

(வி - ரை) துரியோதனன்: திரௌபதியைச் சபையில் மயிரைப் பிடித் திழுத்துக் கொண்டுவந்து, துகி லுரிந்து அவமானப்படுத்தின கதை எல்லார்க்குந் தெரியும். அவன் அக்காரியஞ் செய்தபோது கொஞ்சமேனுந் தன் மனத்தில், 'உபயகுலத்துக்கும் அவமான மாயிற்றே! மகா பதிவிரதையை மானபங்கஞ்

செய்வதனால் குலநாசமாகுமே! தமையன் மனைவி தாய்க்குச் சமானமல்லவா!' என்னுங் கவலையற் றிருந்தான். இதனால், நன்றறிவதிற் கவலையுற்ற மேன்மக்களைக் காட்டிலும், நன்றறிவதிற் கவலையற்று (இது செய்தால் குற்றம்) என்றுணராது, தகாத காரியம் செய்த கயவனாகிய துரியோதனன் திருவுடையனாயினமை காண்க. கவலையற்று, தீமையையும் நன்மையாக் கொள்ளுங் குணம் ஞானிகளுக்கே உரியதானாலும், கயவரும் இதைக் கொண்டிருப்பதனால் திருவுடையாராவது தெரிக. இதனால் கயமையின் முதிர்ச்சி விளக்கமாவ துணர்க. ஞானிகள், தமக்குப் பிறர் செய்யுந் தீமையை நன்மையாக் கொண்டு கவலையற் றிருப்பார்கள். கயவர், பிறர்க்குத் தாம் செய்யுந் தீமையை நன்மையா மதித்துக் கவலையற் றிருப்பார்கள். ஆகையால், கயவரும் ஞானிகளும் கவலையற்றிருக்கும் விஷயத்தில் மட்டும் திருவுடையாராவது காண்க.

"கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றுமறி வில்லாதவென், கன்மத்தை யென்சொல்லுவேன்?"

என்ற பிற ஆன்றோர் வாக்கையும் ஒத்திட் டுணர்க.

'ஏனுரிந்தான்?' என்னும் வினாவிற்குக் கவலையற்ற கயமையினால் என்பது விடையாவதனால், 'திருவுடையார்' என்பதை வியப்பணியாக் கொள்க. இதனால் கயமையின் உச்சநிலை விளங்குவதறிக. 'நன்றறிவாரின்' என்பதிலுள்ள 'இன்' உவமை முதலில் எல்லைப்பொருளாகவும், பிறகு ஒப்புப்பொருளாகவுங் கொண்டு உரை விரித்திருப்பதை உய்த் துணர்க.

ஒழிபியல் முடிந்தது.

பொருட்பால் முடிந்தது.

# காமத்துப் பால்

## களவியல்

(ஆண்பாற் கிளவிகள்)

### [தகையணங் குறுத்தல்]

**109.** சுந்தர மாமகலி தோள்தோய்ந்து பத்துநூ
றிந்திரன்கண் பெற்றா னிரங்கேசா!—இந்துமுறி
ஒன்றுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, இந்திரன் - (முற்காலத்தில்) இந்திரனானவன், சுந்தரம் ஆம் - அழகிய, அகலி தோள் தோய்ந்து - கௌதமமுனிவருடைய மனைவியாகிய அகலிகையைக் கூடி, பத்து நூறு கண் பெற்றான்-(உடம்பெல்லாம்) ஆயிரங் கண்கள் பெற்றான்; (ஆகையால், இது) ஞாட்பினுள் - போர்க்களத்தில், நண்ணாரும் - வராத பகைவரும், உட்கும்-(வந்தவர் வாய்ச் சொற்கேட்டு) அஞ்சுவதற் கேதுவாகிய, என் பீடு - என் தோள் வலி, இந்து முறி - பிறைச்சந்திரன் போன்ற, ஒண்மை நுதற்கு - (இந்த மாதருடைய) ஒளி வீசும் நெற்றியொன்றற்குமே, உடைந்ததே - அழிந்துவிட்டதே! (என்பதை விளக்குகின்றது).

(க - ை) மாதரைக் கண்டால் மாதவரும் மகிமை குன்றுவர்.

(வி - ரை) கௌதமமுனிவருடைய மனைவியாகிய அகலிகை கடலிற் பிறந்தது முதல் அவள்மேல் இந்திரனுக்கு மோகம் அதிகரித்திருந்தது. ஆகையால், ஒருநாள், அவன் அரையிரவிற் கோழி

யாய்ச் சென்று முனிவர் ஆச்சிரமத்திற் கூவினன். அதனால் விழித்துக்கொண்டவர், விடியற்கால மாயிற்றென்று, நதிக்குச்சென்றார். உள்ளே ஒன்றியாய் உறங்கிக்கொண்டிருந்த அகலிகையிடத்தில், இந்திரன் கௌதமர்போல் உருவெடுத்துச் சென்று, அவளை ஏமாற்றினன். நதிக்குச் சென்ற கௌதமர், அது உறங்குவது கண்டு, 'பொய்க்கோழி கூவிற்று' என் றறிந்து, ஸ்நானம் செய்யாமல் திரும்பி வந்தார். அவர் வரும் அரவங் கண்ட இந்திரன் பூனையாய் ஓடினன். அது கண்ட கௌதமர், அவன் சூதறிந்து,

"ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுறிந்து
வேந்தனும் வேந்து கெடும்."

என்றபடி அவனுக்குக் கடுஞ் சாப மிட்டார். அதனால் அவன், உடம்பெல்லாம் குஷ்டரோகம்போல் புண்ணாய், என்றும் அழியாத வடிவுடைய ஆயிரம் குழிக்கண்களாய், அவமானம் அடைந்தான். இதனால், ஞாட்பினுள் நண்ணாரை முட்கும் இந்திரனுடைய பீடானது அகலிகையின் இந்து முறி ஒண்ணுதற்கு உடைந்தது காண்க.

அகலிகை யென்பது 'அகலி' என்று கடை குறைந்தது.

[குறிப்பறிதல்]

110. மேதை விலோசனமு மேவு மிணைநோக்கும்
ஏது கலவிக் கிரங்கேசா!—ஆதலால்
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மேதை விலோசனமும் - குறிப்பறிவுள்ள கண்களும், மேவும் இணை நோக்கும் - பொருந்திய சரிப்பார்வைகளும், கலவிக்கு - (காமத்துக்குரிய ஆண் பெண் பாலார் இருவர்) கூடுதற்கு, ஏது-முகாந்த

ரங்களாம்; ஆதலால்-ஆகையால் (இது), கண்ணொடு கண்ணிணை - (காமத்துக்குரிய இருவருள்) ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள், நோக்கு ஒக்கின் - பார்வையா லொக்குமாயின், வாய் சொற்கள் - (உண்மை தோன்றச் சொல்லுகின்ற) வாய்ப் பேச்சுக்கள், என்ன பயனும் இல - ஒரு பிரயோசனமும் உடையனவல்ல (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) காதலர்க்குப் பார்வை யொத்தாற் பேச்சாற் பயனில்லை.

(வி-ரை)

"பேச்சின்றிப் பார்வையாற் பீடார் புதனிளையை
எச்சின்றிச் சேர்ந்தா னிரங்கேசா!—வீச்சின்றிக்
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில."

என்று புதுவது புகுதலாகப் புதுக்கி மற்றைப் பாடல்களைப் போலவே முன்னிரண்டடிகளிற் கதையைப் பெய்து செய்துள்ளேம். கண்டுகொள்க.

ஒருகாலத்திற் பரமசிவன் கைலாயத்திற் பார்வதியோடு உத்தியான வனத்தி னொருபுறத்தில் ஏகாந்தமாயிருக்கையில், அதற்குத் தேவர்கள் இடையூறு யிருந்தார்கள். பார்வதி தன் கர்ப்பத்துக்கு விகாதமாயிருந்த தேவர்களுக்கு, "உங்கள் மனைவிமார்களிடத்தில் உங்களுக்குப் புத்திர ரில்லாமற் போகக்கடவது! இனி, உங்களில் எவனாவது இங்கு வந்தால், பெண்ணுருவாகக் கடவன்!" என்று சாபங் கொடுத்தாள்.

அந்தச் சாபம் அறியாத இளை யென்னும் அரசன் அங்கு வந்தபோது பெண்ணுரு வடைந்தான். அதற்காக இளை யென்பவள் வருந்தி, அதற்கு அடுத்த இடங்களிற் சஞ்சரிக்கிற காலத்

றில், புதன் எதிர்ப்பட்டான். இருவர் பார்வைகளும் ஒத்தன. உடனே காந்தர்வ மணஞ் செய்துகொண்டு, இருவருஞ் சேர்ந்து புநராவினைப் பெற்றார்கள். இதனால், வேறிடத்திற் செலுத்துத லின்றிப் புதன் கண்களோடு இளையின் கண்ணிணைகளின் பார்வைகள் ஒத்தமையால், வாய்ச் சொற்க ளின்றியே இருவருங் கலந்தமை காண்க.

மேலைப் புதுவது புருதலாக உள்ள செய்யுளின் முன்னிரண் டடிகட்கு உரைவருமாறு:—

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, பீடு ஆர்-பெருமை பொருந்திய, புதன்-(நவக்கிரகங்களி லொருவனாகிய) புதபகவான், பேச்சு இன்றி - வாய்ச்சொற்க ளின்றியே, பார்வையால் - தன் பார்வையும் இளையின் பார்வையும் ஒத் திருந்தமையால், இளையை - இளையென்னும் பெண்ணை, எச்சு இன்றி - நிந்தனைக் கிடமின்றிக் (காந்தருவ விவாகஞ் செய்து கொண்டு), சேர்ந்தான் - கூடிப் (புநராவினைப்) பெற்றான்.

'வீச்சின்றி' என்பதற்கு 'வேறு இடத்தில் வீசுதலின்றி (அல்லது) 'செலுத்துத லின்றி' என்று பொருள் கொள்க.

[புணர்ச்சி மகிழ்தல்]

111. உம்பரிற் றுன்முகனா ருள்ளகங்கை தோள்தோய
இம்பர்வந்தா ரன்றோ விரங்கேசா!— அன்பாகத்
தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, உம்பரில் - தேவர்களில் (ஒருவனாய), துன்முகனார் - துன்முகன் என்பவன், கங்கை தோள் தோய - (கங்கையை ஆடை விலகப்

பார்த்ததனால்) (அவளை மணந்து) அவளோடு கூடியிருக்க, இம்பர் வந்தார் அன்றே - இவ் வுலகத்தில் வந்து பிறந்தானல்லவா?, (ஆகையால், இது) அன்பு ஆக - ஆசையோடு, தாம் வீழ்வார் - (ஒருவர் ஐம்புலன்களையும் அனுபவிப்பதற்குத்) தாம் விரும்பு மகளிரது, மென்மை தோள் துயிலின் - மெல்லிய தோள்களிடத்துத் துயிலும் துயில்போல, தாமரை கண்ணான் உலகு - (அவைகளைத் துறந்தயோகிகளா லடையப்படுவதாகிய) கமலக்கண்ணனது உலகம், இனிதுகொல் - வருந்தாமல் அடையக் கூடுவதோ? (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ஒருவர்க்குத் தாம் விரும்பும் பாவை யின்பம் பரம பதத்திலுஞ் சிறந்ததாம்.

(வி - ரை) தேவேந்திரன் கொலுவுக்குக் கங்கை வந்தாள். அவள் வந்த அவசரத்திற் காற்றடித்ததனால், ஆடை விலகிற்று. அங்கிருந்த சகல தேவர்களும் தமது கண்களைக் கெட்டியாய் மூடிக்கொண்டார்கள். துன்முகன் ஒருவன்மட்டும் கண்களை நன்றாய்த் திறந்து கங்கையின் அவயவங்களைக் கவனித்துப் பார்த்தான். ஆகையால், இந்திரன் அவனுக்கு, "நீ போய்ப் பூமியிற் பிறந்து, கங்கையை மணந்திருந்துவா!" என்று சாபங் கொடுத்தான்.

அப்படியே, இந்திரன் சாபத்தை ஏற்ற துன்முகன், யயாதிக்குப் புத்திரனாகப் பிறந்திருந்தான்; கங்கையும் அப்படியே ஒரு சாபத்தினால் பூமியிற் பிறந்தாள். இருவரும் விவாகஞ் செய்து கொண்டு, ஒருமனதாகிச் சேர்ந்து வாழ்ந்திருந்தார்கள். இதனால், துன்முகனார்க்குத் தாம் வீழ்ந்தாராகிய கங்கையின் மென்றோட் டுயிலின், தாமரைக்கண்ணா னுலகு இனிதாகாமை காண்க. 'துயிலின் தாமரைக் கண்ணானுலகு இனிதுகொல்' என்பதில் 'இன்' உருபை ஒப்பு அல்லது எல்லையாக் கொள்க. 'துன்முகனார்

வந்தார்' என்பதில் 'ஆர்' விகுதி "நரியனார்," "நரையார்" என்பு ழிப்போல இசைநிறை அன்றி அசைநிறையாவ தறிக.

[நலம்புனைந் துரைத்தல்]

**112.** ஒண்கயற்கட் பாரதியை யோது மறைநாவில்
எண்கண்ணன் வைத்தா னிரங்கேசா!— பண்பில்
அனிச்சமு மன்னத்தின் றூவியு மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.

(ப - ரை) எண் கண்ணன் - எட்டுக் கண்களையுடைய (பிரம தேவன்), ஒண்மை கயல் கண் பாரதியை - அழகிய சேல் கண் டையைப் போன்ற கண்களையுடைய சரசுவதியை, மறை ஓது நாவில் - வேதபாராயணம் பண்ணுகிற தனது நாவினிடத்தில், வைத்தான் - (கீழே விட்டால், அவள் காலிற் கல்லுறுத்தப்போ கிற தென்று) அருமையாய் வைத்துக்கொண்டான்; (ஆகை யால், இது) பண்பில் - (மென்மைத்) தன்மையில், அனிச்சமும் அன்னத்தின் தூவியும் - உலகத்தார் மேன்மை கொடுத்துள்ள அனிச்சமலரும் அன்னப்பறவையி னிறகும், மாதர் அடிக்கு - (நாம் விரும்பிச் சேர்ந்த) இப் பாவையர் திருவடிகளுக்கு, நெரு ஞ்சிப்பழம் - நெருஞ்சிப்பழம் போல வருத்தஞ் செய்வனவாம் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) "மெல்லியாடோள்சேர்".
மாதரடி மென்மையின் மென்மையாம்.

(வி - ரை) பிரமதேவர்: சரசுவதி திருவடிகளின் மென் மைத் தன்மையின் மேன்மையால், அவளைக் கீழே விடாமல் தமது யிருதுவான நாவில் வைத்துக்கொண்டார்; விஷ்ணு: திருமகளை மார்பில் வைத்தார்; சிவன்: பார்வதியைச் சடையில்

வைத்தார். இந்த ஈரிடங்களும் மயிரடர்ந்திருப்பதால் மென்மையா வன காண்க.

"தட்டானுக் கஞ்சியல்லோ வணிந்தான் சிவன் சர்ப்பத்தை யே" என் புழிபோல, இதிலுள்ள அணி அதிசயிக்கத்தக்கதாம். தட்டானுக்கு அஞ்சிச் சிவன் சர்ப்பத்தை யணியவில்லை. அது போலவே, சரசுவதி காலிற் கல்லுறுத்து மென்றஞ்சிப் பிரமன் அவளைத் தன் நாவில் வைக்கவில்லை என்பது வெளிப்படை. எண் கண்ணன் - பிரமன்; நான்கு முகங்களுக்கு, நாலிரண்டு எட்டுக் கண்களை யுடையவன்.

[காதற் சிறப்புரைத்தல்]

**113.** சேர்ந்து திருமகளை தெள்ளமுதை யும்பருக்கே
ஈந்த வுதார மிரங்கேசா!— தேர்ந்தக்கால்
பாலொடு தேன்கலந் தற்றே பனிமொழி
வாலெயி றூறிய நீர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, திரு மகளை சேர்ந்து - (நீர், பாற்கடலிற் பிறந்த) ஸ்ரீதேவியைச் சேர்ந் ததனால், தெள் அமுதை - அதிற் பிறந்த இனிய அமிர்தத்தை, உம்பருக்கு ஏ - தேவர்கள் உண்பதற்கே, ஈந்த உதாரம் - கொடு த்த கொடை (உம்மிடத்திற் சிறந்திருந்தது. ஆகையால், இது) தேர்ந்தக்கால் - ஆராய்ச்சி செய்தக்கால், இ பனிமொழி - (நாம் விரும்பிச் சேர்ந்த) இம் மெல்லிய சொல்லை யுடையவாது, வால் எயிறு ஊறிய நீர் - வெண்பல்லி லூறிய நீரானது, பாலொடு தேன் கலந்து அற்று - பாலுடனே தேன் கலந்த கலவைபோலும் (என் பதை விளக்குகின்றது).

(க - ரை) பாவையர் இதழமுது பாலொடுதேன் கலந்த படியாகும்.

(வி - ரை) திருமாலானவர், தேவர்களுக்காகத் திருப்பாற் கடலைக் கடைந்தபோது, முதலிற் றோன்றிய திருமகளைத் தாம் ஏற்றுக்கொண்டு, அவளுடைய இதழமுதி னினிமையின் மேன்மையால், பிறகு பிறந்த அமுதத்தை விரும்பாமல், தேவர்களுக்கே பங்கிட்டுக் கொடுத்துவிட்டார். இதனால், திருமகளின் இதழமுது திருமாலுக்குப் பாலொடு தேன் கலந்தபடி (தேவாமுதத்தினு மின்சி) யிருந்ததாகப் புனைந்துரைத்திருப்பது காண்க.

இதிலுள்ள அணியையும் சென்ற செய்யுளிற் போலவே கவனித் துணர்க. ஏகாரம் தேற்றமெனல் அன்றிப் பிரிநிலை எனல்.

[நாணுத் துறவுரைத்தல்]

**114.** கீசகன்பாஞ் சாலியின்மேற் கேவலமால் கொண்டுயிர்தோற்
றேசுதலை யுற்றான் இரங்கேசா!—ஆசையெனும்
காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, கீசகன் - விராடன் மைத்துனனாகிய கீசகனென்பான், பாஞ்சாலியின்மேல் - திரௌபதியின்மேல், கேவலம் மால் கொண்டு - இழிவான காம மயக்கத்தைப் பூண்டு, உயிர் தோற்று - (அதற்காகத்) தன்னுயிரை யிழந்து, ஏசுதலை உற்றான் - நிந்தனை அடைந்தான்; (ஆகையால், இது) நாணொடு நல் ஆண்மை என்னும் புனை - (தன்னைக் கடத்தற்குக் கொண்ட) நாணமும் சிறந்த வீரமுமாகிய தெப்பங்களை, ஆசை என்னும் - பெண்ணாசையாகிய, காமம் கடுமை புனல் உய்க்கும் - காமமாகிய கடிய வெள்ளமானது, (என்னிற் பிரித்து) அடித்துக்கொண்டு போகிறது (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) காமத்துக்கு நாணமு மில்லை, வீரமு மில்லை.

(வி - ரை) விராடபுரத்திற் பாண்டவர்கள் அஞ்ஞாத வாசம் செய்தபொழுது, விராடன் மனைவிக்குப் பணிப் பெண்ணாயிருந்த திரௌபதியைக் கண்டு காதல் கொண்ட கீசகன் விரக வேதனையால் வருந்திச் சமயம் பார்த்துக்கொண் டிருந்தான். ஒருநாள் விராடன் மனைவி தன் சகோதரனாகிய கீசகனுக்குப் பல காரங் கொடுத்து வரும்படி திரௌபதியை அனுப்பினாள். அவளைத் தன் மாளிகையிற் றனிமையிற் கண்ட கீசகன் 'அதுதான் தருணம்' என்று, தன்னுடைய நாணத்தையும் வீரத்தையும் அடியோடு விட்டு, அவளைத் தொடர்ந்து துரத்தியோடினான். அதைக் கண்ட கந்தருவன் ஒருவன், பூமியிலிழிந்து வந்து, கீசகன் காலைப் பிடித்துத் தூக்கி மாவளி சுழற்றி யெறிந்துவிட்டுப் போனான். தப்பி யோடின திரௌபதி, கீசகனுடைய அக்கிரமத்தை வீமனுக்குத் தெரிவித்து விசனப்பட்டாள். அவளை "விசனப்படாதே" என்று கையமர்த்தின வீமசேனன், திரௌபதிபோல்உரு மாறிச் சென்று, கீசகனை நந்தவனத்திற் சந்தித்துக் கொன்றான். இதனால், கீசகனுக்குத் திரௌபதிமே லிருந்த ஆசையென்னுங் காமக் கடுவெள்ள மானது, அவனுடைய நாணொடு நல்லாண்மை யென்னும் புணையை, அவனிற் பிரித்து அடித்துக் கொண்டுபோய் விட்டமை காண்க. ஏ: அசைநிலை.

[அலரறிவுறுத்தல்]

**115.** நீந்துகடன் மூழ்கி நெடுநாட் கௌதமனார்
ஏந்தகலி தோய்ந்தா ரிரங்கேசா!—மாந்தி
களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, கௌதமனார் - கௌதம முனிவர், நெடு நாள் - அநேக நாளாக, நீந்து கடல் மூழ்கி - (விழுந்தவர்) நீந்துகின்ற கடலில் மூழ்கியிருந்து,

வந்து அகலி - (அழகை) ஏந்திய அகலிகை (யென்னும் நங்கை யை), சேர்ந்தார் - மணஞ்செய்து கூடினார்; (ஆகையால், இது) மாந்தி - (கள்ளைக்) குடித்து, களித்தொறும் - களிக்குந்தோ றும், கள் உண்டல் - கள் குடித்தல், வேட்டு அற்று-(குடிப்பார்க்கு இனிதாயிருப்பதனால், அவர்கள் அதை) விரும்பும் விதம்போல, காமம் - காமமானது, வெளிப்படுந்தோறும் - (பிறரறிய) வெளிப் படுந்தோறும், இனிது - இனிதாகாநின்றது (என்பதை விளக்கு கின்றது.)

(க - ரை) காமம் பிறரறிய வெளிப்படுந்தோறும் இனி தாகும்.

(வி - ரை) திருமால் தேவர்களுக்காகத் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில், அமிர்தம் பிறக்கு முந்தி, அதில் திருமகள், சந்திரன், அகலிகை முதலியோர் தோன்றினார்கள். திருமகளைத் திருமால் மணந்தார். சந்திரனைச் சிவபிரான் தரித்தார். "அகலிகை யை யார் மணப்பது?" என்று தேவர்களுக்குள் விவாதம் நேரிட் டது. அப்போது திருமால், அவர்களை நோக்கி, "இந்தக் கடலில் எல்லாரும் விழுங்கள்! அப்படி விழுந்தவர்களில் எவன் அதிக நாள் அதில் மூழ்கி யிருக்கிறானோ, அவனே அகலிகையை மணப்பான்" என்றார். எல்லாரும் விழுந்து, சில நாட்கள் அதில் முழுகி யிருந்தார் கள். பிறகு ஒவ்வொருவனாய் எழுந்து வந்துகொண்டே யிருந் தான். கடைசியாகக் கௌதமர்மட்டும் எழுந்து வாராமல், விழுந்த வர் விழுந்தபடியே அதில் அழுந்தி யிருந்து விட்டார். பிறகு தேவதைகளும் திரிமூர்த்திகளும் திரண்டு வந்து, அவரைக் கூவி எழுப்பிக் கொண்டுபோய் அகலிகையை மணஞ்செய்து கொடுத் தார்கள். இதனால், கௌதமர்க்கு அகலிகைமேற் கொண்ட காமம், திரிமூர்த்திக ளறிய வெளியாயினமை காண்க.

அகலிகை என்பது 'அகலி' என்று கடை குறைந்தது. 'கள்ளுண்டல் வேட்டற்றால்' என்பதற்கு, 'கள்ளுண்டலானது வேட்கப்படுவதனால் இனிதாவதுபோல' என்றுங் கூறலாம். 'நீந்து கடல்' என்பது வினைத்தொகை.

களவியல் முடிந்தது.

---

## கற்பியல்

### (பெண்பாற் கிளவிகள்)

### [பிரிவாற்றாமை]

**116.** தன்பதியின் செல்கையினால் தாவினதி யாயினாள்
என்பர் கவுசி யிரங்கேசா!— அன்பினாற்
செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, கவுசி - காதிமகளும் இரிசிகர் மனைவியுமாகிய கவுசிகை யென்பவள், தன் பதியின் செல்கையினால் - தன் கணவனுடைய பிரிவாற்றாமையினால், தாவில் நதி ஆயினாள் - அழிவில்லாத கோமதியாறாக மாறினாள், என்பர் - என்று சொல்லுவார்கள்; (ஆகையால், இது) அன்பினால் - காதல் முதிர்ச்சியினால், செல்லாமை உண்டேல் - நீ யென்னைப் பிரியாமை உண்டாயின், எனக்கு உரை - எனக்கு அதைச் சொல்!, மற்று - அது தவிர, நின் வல் வரவு - (நீ பிரிந்து போய்) விரைந்து வருதல் (உண்டாயின் அதனை) வாழ்வார்க்கு உரை - (அப்போது) பிழைத்திருப்பவர்க்குச் சொல்! (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) மாதர், மனமொத்த காதலர் பிரிவாற்றுதமாள்வர்.

(வி - ரை) காதி அரசன் மகளும், விசுவாமித்திரர் தமக்கையுமாகிய கௌசிகையை இரிசிக முனிவர் விவாகம் பண்ணிக் கொண்டு, அவளோடு நெடுநாள் பிரியாமலிருந்து, மக்களைப் பெற்று வாழ்ந்து வந்தார். கடைசியாக அம் முனிவர் அவளைப் பிரிந்து பிரமலோகம் போகப் புறப்பட்டார். அவர் பிரிவைப் பொறாத கௌசிகை அவரை விடாமல் பின் தொடர்ந்து சென்றாள். அது கண்ட முனிவர், அவளை நோக்கி, "நீ என் பிரிவைச் சகியாமல் வருந்துவதற்கு நானும் வருந்துகிறேன். ஆயினும், என்னுடன் நீ வரப்படாது; இங்கேயே யிருத்தல்வேண்டும். ஆகையால், என் பிரிவை மறந்திருப்பதற்காக நீ யொரு நதியாகி உலோகோபகாரமாக இரு!" என்று அவளைக் கோமதி நதியாக்கிச் சென்றார். இதனால் கௌசிகை தன் கணவரை நோக்கி, "நீர் பிரமலோகம் செல்லாமை யுண்டேல் எனக்குச் சொல்லும்; இல்லையேல், நும் வல் வரவு வாழ்வார்க்குச் சொல்லும்' என்றபடி அவருடைய பிரிவைச் சகியாமல் இருந்தமை காண்க.

கவுசிகை என்பது 'கவுசி' என்று கடை குறைந்தது. 'வல் வரவு வாழ்வார்க்குரை' என்றதனால், அப்போது, நாயகி, 'தான் வாழ்வதில்லை' என்பதைக் குறிப்பி லுணர்த்தினமை உணர்க.

[படர்மெலிந் திரங்கல்]

117. குன்றெடுத்தான் மார்புகுடி கொண்டிருந்தாள் செங்கமலை
என்றும் பிரியா திரங்கேசா!—நன்றிகூர்
இன்பங் கடன்மற்றுக் காம மஃதுடுங்கால்
துன்ப மதனிற் பெரிது.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, செம்மை கமலை - செந்தாமரையில் வாழுந் திருமகள், குன்று எடுத்தான் மார்பு - கோவர்த்தன கிரியைக் குடையாக எடுத்த திருமால் மார்பை விட்டு, என்றும் பிரியாது - எப்போதும் நீங்காமல்,

குடிகொண்டு இருந்தாள் - வாழ்ந்துகொண்டிருந்தாள்; (ஆகை யால், இது) காமம் - காமமானது, நன்றி கூர் - நன்மை மிகுந்த, இன்பம் - (சேர்தலினால்) இன்பஞ் செய்யும்போது, கடல் - (அவ் வின்பம்) கடல்போற் பெரிதாம்; மற்று - இனி, அஃது - அந்தக் காமமானது, அடுங்கால் - (பிரிவினால்) துன்பஞ் செய்யும் போது, துன்பம் - அத் துன்பமானது, அதனில் பெரிது - அக் கடலினும் பெரிதாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) மாதர்க்குக் காதலரைக் கூடியிருக்குஞ் சுகத்தினும் பிரிந்திருக்கும் பீழை பெரிது.

(வி - ரை) திருமகள் 'ஒருகாலத்திற் பிரிவுண்டானால் வருந்த வேண்டியிருக்கும்' என்றெண்ணித் திருமாலினது மார்பை விட்டு என்றும் பிரியாதிருக்க வரம் பெற்று, அவ் விடத்திலேயே குடி யிருந்து வாழ்ந்துவருகிறாள். இதனால் மாதர், தங் காதலரைப் பிரியாது, மருவியிருத்தலையே நோக்கவேண்டு மென்றுணர்க.

குடிகொண் டிருந்தாள் - காலவழுவமைதியாய் முக்காலத் துக்குங் கொள்க.

[கண் விதுப்பழிதல்]

**118.** காத லருச்சுனனைக் கண்டூர் வசியடைந்த
தேதமன்றோ மேனா ளிரங்கேசா!—ஓதில்
கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மேல் நாள் - முற்காலத்தில், ஊர்வசி - ஊர்வசி யென்னும் தேவமாது, அருச்சுனனைக் கண்டு - (அங்குச் சென்றிருந்த பாண்டுமைந்த னாகிய) பார்த்தனைப் பார்த்து, காதல் அடைந்தது - இச்சை

கொண்டது, ஏதம் அன்றோ - குற்றம் அல்லவா?, (ஆகையால், இது) ஓதில் - எடுத்துச் சொன்னால், தாம் - (இக் கண்கள்) தாம், கதும் என நோக்கி - (அன்று காதலரைத் தாமே) விரைந்து பார்த்து, தாமே கலுழும் - (இன்று) தாமே யிருந்து அழுகின்ற, இது - இவ் வறியாமையானது, நக தக்கது உடைத்து - (நம்மாலே) சிரிக்கத்தக்க வியல்பை யுடையது (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ஆடவரைக் கண்டளவில் ஆசைகொள்வ தரிவையர்க் கடாது.

"அடாது செய்தவர் படாது படுவர்." என்றபடி அவர்கள்அழ நேரும்.

(வி - ரை) அருச்சுனன், தேவலோகம் போய், நிவாதகவச காலகேயரைக் கொன்று, இந்திராசி யாசனத் தமர்ந்து. தேவாமிர்தம் புசித்து மகிழ்ந்து, அங்குத் தங்கியிருந்தான். அப்போது, அவனைக் கண்ட ஊர்வசி, முன்பின் யோசியாமல் அவன்மேற் காதல் கொண்டு, அவன் தனித்திருக்குஞ் சமயத்தில் தன் எண்ணத்தை வெளியிட்டாள். உடனே, அவன், "எனக்கு நீ, தாய் முறை ஆகையால் உன் எண்ணந் தவறு.

"கிட்டா தாயின் வெட்டென மற."

என்றபடி என்மேற் கொண்ட காதலை நீக்கி என்னை அற மற" என்று புத்தி புகட்டினான்.

அவன் புகட்டினது அவளுக்குத் திகட்டினபடியால், அழமாட்டாத குறையாய்த் தன் தப்பறியாமல் அவள், "நீ பேடி யாகக்கடவை" என்று அவனைச் சபித்தாள். பிறகு, இந்திரன் முதலியோர் வேண்ட, இவள் அச் சாபநிவிர்த்தி செய்தாள். இதனால், ஊர்

வசியின் கண்கள் கருமெனத் தாமே, அருச்சுனனை நோக்கிக் காதல் கொண்டு, பிறகு அது முடியாமையால் தாமே கலுழ்ந்த மை நகத்தக்கதுடைய தாயினமை காண்க. அருச்சுனனது குணங்குறி யறியாமல் ஊர்வசி கொண்ட காதல் தகாதென்க.

[பசப்புறு பருவரல்]

**119.** மன்னு மகலிகல்லாய் மாநிலத்தி லேகிடந்தாள்
என்னுமொழி கேட்டா யிரங்கேசா!—துன்னப்
பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

(ப-ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மன்னும் அகலி - கற்பின் நிலையுற்ற அகலிகை, கல்லாய்-கருங்கல்லாய், மாநிலத்தில்-பூமியில், கிடந்தாள்-(கௌதமர் சாபத்தால்) விழுந்து கிடந்தாள், என்னும் மொழி - என்கிற வார்த்தையை, கேட்டாய் விசுவமித்திரர் சொல்ல, அன்று நீ கேட்டா(யல்லவா? ஆகையால், இது) துன்ன - பொருந்த, பசந்தாள் இவள் என்பது அல்லால்- இவள் பொறுத்திராமல் பசலைநிற மடைந்தாளென்று,(பிறர்) என்னைப் பழிச் சொல்வதல்லாமல், இவளை அவர் துறந்தார் என்பார் இல்-இம் மாதை அவர் நீங்கிப் போனரென்று (பழிச்) சொல்லுவார் (யாரும்) இல்லை (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) தலைவன் தலைவியின் தன்மை யறிந்து தணக்க வேண்டும்.

(வி-ரை) மேலே கூறியபடி, ஊர்வசி: அர்ச்சுனன்மேற் கொண்டதுபோல, ஒருகாலத்தில் இந்திரன் அகலிகையின்மேல் ஒருதலைக் காமங் கொண்டு, அவள் கணவராகிய கௌதமரை எய்த்துப் பிரித்ததுபோலவே, அவளையும், அவள் கணவர்போல, உருவெடுத்துச் சென்று மோசஞ் செய்து சேர்ந்தான். ஆயினும்,

கௌதமர் அவளைக் கல்லாகச் சபித்துத் தணந்திருந்தார். பிறகு, ஸ்ரீ ராமபிரான் காற்றூசு பட்டபோது, அவள் சாப நீங்கிப் பழைய வுருவடைந்து, கௌதமரைச் சேர்ந்தாள். இதனால், 'அகலிகையின் மேல் எள்ளளவுங் குற்ற மில்லை; அவள் மனமொப்பிக் கற்புக் கெடவில்லை' என்றிருந்தும், "பசந்தாள் (குற்றஞ் செய்தாள்) அவள்" என்று (பிறர்) சொல்லுவதல்லாமல், "அவளை (அநியாய மாய்க் கோபித்துச் சபித்துத்) துறந்தார் கௌதமர்" என்பவர் (இவ் வுலகில் யாரும்) இல்லை யென்பது காண்க.

[தனிப்படர் மிகுதி]

120. நக்கசுவா காவைத் தருமன் விழுங்கவவள்
எக்கியனை யுண்டா னிரங்கேசா!—மிக்க
ஒருதலையா லின்னாது காமங்காப் போல
இருதலை யானு மினிது.

(ப - ரை) இரங்கேசா-திருவரங்கநாதக் கடவுளே!, தருமன்-இயமன், தக்க சுவாகாவை-கண்டவர் விரும்பத்தக்க அழகுடைய சுவாகா வென்னுங் கன்னிகையை, விழுங்க-(எலுமிச்சம் பழமாக்கி) விழுங்கி உள்ளே வைத்திருக்க, அவள் எக்கியனை உண்டாள் - அவள் (அவன்மேற் பிரிய மில்லாதிருந்ததனால்) அக்கினி தேவன்மேல் ஆசை கொண்டு) அவனை விழுங்கி உள்ளே வைத்திருந்தாள்; (ஆகையால், இது) காமம் - காதலானது (மகளிர் ஆடவர் என்னும் ஈரிடங்களில்), ஒருதலையான் - ஓரிடத்தில் உண்டாயின், மிக்க - மிகவும், இன்னாது-துன்பஞ் செய்வதாகும்; (ஆகையால், அது) கா போல - காவடிப் பாரம்போல, இருதலையானும் ஈரிடங்களிலும் (ஒத்திருக்குமாயின்), இனிது - இன்பஞ் செய்வதாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ஒருதலைக்காமம் ஈரிடங்களிலும் துன்பஞ் செய்வதாம்.

(வி - ரை) சுவாகா என்னும் கன்னிகை அதிக அழகுடையவளா யிருந்தமையால், இயமன் அவள்மேல் இச்சை வைத்து விவாகஞ் செய்துகொண்டான். 'அவள் அழகால், அவளை யாராவது விரும்பிக் கொண்டுபோய்விடப்போகிறார்கள்' என்றெண்ணின இயமன், அவளை எலுமிச்சம்பழமாக்கி விழுங்கி, உள்ளே வைத்திருந்து, தனக்கு அவளோடு எப்போது பேசவேண்டும் என்று எண்ணம் உண்டாகிறதோ, அப்போது அந்த எலுமிச்சம் பழத்தைக் கக்கிப் பெண்ணாக்கி அவளோடு பேசி விளையாடுவது வழக்கம்.

இந்திரவனத்தில் வந்த இயமன், தன் மனைவியாகிய எலுமிச்சம்பழத்தைக் கக்கிப் பெண்ணாக்கி, அவளோடு கொஞ்சிக் குலாவி விளையாடிக்கொண்டிருந்து, அந்த இளைப்பால் மறந்தாற்போல், அவளை எலுமிச்சம்பழமாக்கி விழுங்காமல் விட்டு நித்திரை செய்தான். அப்போது அங்கு அக்கினிபகவான் வந்தான். இயமன் தனக்கிருந்த ஒருதலைக் காமத்தால் அவளை வைத்திருந்தானன்றி, அவளுக்கு அவன்மேல் இச்சை கிடையாது. ஆகையால், அவள் அக்கினியைக் கண்டதும் இச்சை கொண்டு, அவனோடு கூடியிருந்து, அவனை இயமன் விழிப்பதற்குள், ஓர் எலுமிச்சம்பழமாக்கி விழுங்கி, உள்ளே வைத்திருந்தாள். உடனே இயமன் விழித்துக்கொண்டு அவளையும் பழையபடி பழமாக்கி விழுங்கித் தன்னிடத்திற்குப் போய்விட்டான்.

பின்பு தேவர்களும் முனிவர்களும் அக்கினியைத் தேடத் தொடங்கி. அவன் எங்கும் அகப்படாமையால், விஷ்ணுவினிடத்தில் வந்து முறையிட்டார்கள். முறையிட்டார் குறை தீர்ப்பது உலகநாதராகிய ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியின் கடமையாதலால், அவர் அக்கினி யிருக்குமிடம் அறிந்து, இயமனை அழைத்து, அவன் வயிற்றிலிருந்த பெண்ணைக் கக்குவித்துப், பிறகு அப் பெண்

வயிற்றிலிருந்த அக்கினியையும் கக்குவித்தார். அக்கினி வெளிப்பட்டதும் இயமனுக்குத் தன்னுடைய ஒருதலைக் காமத்தின் உண்மை வெளிப்பட்டது. ஆகையால், அவன் அவளுக்குத் தன்மேற் சிறிதும் காதல் இல்லையென்று கண்டுகொண்டு, அவளைத் துறந்து சிறந்து வாழ்ந்தான். இதனால் இயமனுக்குக் காமம் ஒருதலையான் இன்னாததாய் முடிந்தது. ஆகையால், அது காப்போல இருதலையானும் இனிது என்றுணர்க.

[நினைந்தவர் புலம்பல்]

121. சுந்தோப சுந்தரிகல் சூழ்ந்து பொருதிறந்த
தெந்தவகை மேனா ளிரங்கேசா!— சிந்தையால்
உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மேல்நாள் - முற்காலத்தில், சுந்தோபசுந்தர் - சுந்தனென்பவனும் உபசுந்தனென்பவனும், இகல் சூழ்ந்து - ஒருவருக்கொருவர் பகைமை பாராட்டி, பொருது - (நீ யெடுத்த மோகினி யவதாரத்தைக் கண்டு இச்சித்து, அதற்காகச்) சண்டை செய்து, இறந்தது-செத்தது, எந்தவகை-எந்த விதத்தால்?, (நீயே சொல்லவேண்டும். ஆகையால், இது) சிந்தையால் - மனதால், உள்ளினும் - தீராத, பெருமகிழ் செய்தலால் - (கள்ளானது உண்டபேரை மயக்கும் - காமமானது கண்டபேரையும் நினைத்தபேரையும்) பெரிய மகிழ்ச்சி செய்து மயக்குதலால், கள்ளினும் - கள்ளைக்காட்டிலும், காமம் - காமமானது, இனிது - தீராத பெருமகிழ்ச்சி தரும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) உண்டபேரை மயக்குங் கள்ளினுங் கண்டபேரையுங் காணாது நினைத்தபேரையு மயக்குங் காமம் பெரிதாகும்.

(வி - ரை) திருப்பாற்கடல் கடைந்தெடுத்த வமுதத்தைத் திருநெடுமால், அசுரர்களை வஞ்சித்துச் சுரர்களுக்குமட்டும் பங்கிட எண்ணினர். ஆகையால், அவர் ஒரு ஜகன்மோகினிப் பெண்ணென உருவெடுத்து, அசுரர்களுக்கிடையில் நின்றார். அவளைக் கண்ட சுந்தோபசுந்தர் என்னும் அசுரர், உடன்பிறந்தாரிருவர், "இவள் எனக்கு, இவள் எனக்கு" என்று சண்டையிட்டுக்கொண்டு, பெண்மோகமாகிய காமத்தில் மயங்கிவந்து, அப்பெண்ணின் இருபுறத்திலும் நின்று, ஒருவன் அவளுடைய வலக்கையையும், மற்றொருவன் இடக்கையையும் பற்றி இழுத்தார்கள்.

"இப்படி இழுத்தால் நான் யாரை மணப்பேன்? ஒருத்திக்கு இரண்டு புருஷரா? நன்றாயிருக்கிறது ஞாயம்! உங்க ளிருவரில் யார் வல்லவரோ, அவரே எனக்கு நல்லவர்; அவரையே நான் கலியாணம் பண்ணிக்கொள்வேன்." என்றாள் மோகினி.

மோகினியின் மோசம் அறியாத இருவரும் தத்தம் வல்லமையைக் காட்டிச் சண்டைசெய்து, உயிரை இயமனுக்குத் தத்தஞ்செய்து மாண்டார்கள்.

இதனால், சுந்தோபசுந்தர் தம் சிந்தையால் உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்த காமத்தைக் கள்ளினு மினிதா மதித்து, மோகினிப் பெண்ணைக் கண்டு மயங்கி மாண்டமை காண்க.

சுந்தோப சுந்தர்: குணசந்தி. 'எந்தவகை?' என்பதற்கு 'மோகினியைக் கண்டு காமத்தை நினைத்தவகை' என்பது விடையென் றுணர்க.

[கனவுநிலை யுரைத்தல்]

122. செய்தவஞ்சேர் வானனைது செல்வி கனநிலையில்
எய்தினை னன்றோ விரங்கேசா!—பைய
நனவினை னல்கா தவரைக் கனவினல்
காண்டலி னுண்டென் னுயிர்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, செய்தவம் சேர் வாணனது செல்வி கனவிலையில் - செய்தவச் சிரேட்டனாகிய வாணாசுரனது மகளாகிய உஷையென்பவளின் கனவு நிலைமையில், எய்தினான் அன்றோ-(அநிருத்திரன்) தோன்றினானல்லவா?, (ஆகையால், இது) பைய - மெதுவாக, நனவினால் நல்காதவரை - விழித்திருக்கையில் இன்பந் தாராத தலைவரை, கனவினால் காண்டலின் - கனவிற் காணுந்தோறும் (நான் மகிழ்ச்சி யடைதலால்), என் உயிர் உண்டு - என் பிராணன் நிலைத்திருக்கும் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) நனவிற் காணா நாயகனைக் கனவிற் காண்ட லினிதாகும்.

(வி - ரை) செய்தவ விசிட்டனும் சிவபக்தனுமாகிய வாணாசுரன்மகள் உஷையென்பாள் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவின் பேரனாகிய அநிருத்திரன் என்பவனைத் தன் கனவிற் கண்டு காதல் கொண்டு வருந்தினாள். இப்படி நாடோறும் இவள் கனவிற் காணும் காதலனை நனவிற் காணவேண்டுமென்று விரும்பி, அது கிட்டாமையால் தேக மெலிந்து வருந்தி வாடி அவனையே நாடித் தேடிக்கொண் டிருந்தாள். ஆயினும், அவனை அவள் நனவிற் காணாதிருக்குந்தோறும் தான் எய்துந் துன்பத்தைக் கனவிற் காணுந்தோறும் எய்தும் இன்பத்தாற் போக்கி உயிர் பெற்றிருந்தாள்.

பிறகு, ஒருநாள் அரையிரவில் பூதமொன்று, (வாணன் தவ மகிமையால்) அநிருத்திரன் உறங்கியிருந்த மஞ்சத்தோடவனை யெடுத்துக் கொண்டுவந்து, உஷையின் படுக்கையறையில், அவள் மஞ்சத்துக்குப் பக்கத்தில் வைத்து மறைந்தது. பிறகு இருவரும் கூடிக் களித்தார்கள்.

இதனால், நனவினால் நல்காத அநிருத்திரனைக் கனவினால் கண்டதனால் உஷை உயிர்பெற்றிருந்தமை உணர்க.

'அன்றோ?' என்னும் எதிர்மறை வினா, 'ஆம்' என்னும் விடை தருவது காண்க.

[பொழுதுகண் டிரங்கல்]

123. காக்கும் பதியகலக் காட்டிற் சலர்க்காரி
ஏக்கமுற்றா ளன்றோ விரங்கேசா!— நோக்கில்
பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சலர்க்காரி - சலர்க்கரை என்னும் நாகலோகமாது, காட்டில் - தவவனத்தில், காக்குள் பதி அகல - தன்னைக் காப்பாற்றுங் கணவராகிய சலர்க்கா மாமுனிவர் பிரிந்துபோனதனால், ஏக்கம் உற்றாள் அன்றோ - விசனமுற்று (மாலைப்பொழுது கண்டு) வருந்தினாளல்லவா? (ஆகையால், இது) நோக்கில் - ஆராய்ந்தால், (தலைவனை விட்டுப் பிரிந்தவர்க்குப்) பனி அரும்பி பைதல் கொள் மாலை - குளிர்ச்சியைத் தந்து விரகதாபத்தை உண்டாக்கும் மாலைப் பொழுதானது, துனி அரும்பி துன்பம் வளர வரும் - விசாரத்தைத் தந்து துன்பம் அதிகரிக்க வரும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) தலைவனைத் தணந்த தலைவிக்கு மாலைப்பொழுது விரக வேதனையை வளர்க்கும்.

(வி-ரை) நெடுநாள் பிரமசாரியாகவே யிருந்த சலர்க்கா மாமுனிவரை, அவருடைய பிதர்கள், விவாகஞ் செய்துகொள்ள வேண்டினார்கள். அதற்கு அம் முனிவர், தம் பெயருடைய பெண்

அகப்பட்டால் கலியாணஞ் செய்துகொள்வதாகச் சொன்னார். அப்படியே அவர்க்கு நாகங்களின் உடன் பிறந்தாளாகிய சலர்க்காரி (சலர்க்கரை) என்பவள் கிடைத்ததனால், அவளை அவர் விவாகஞ் செய்துகொண்டு, கிருகஸ்தாசிரமத்தி லிருந்து, வனத்தில் தவஞ்செய்து வாழ்ந்துவந்தார். ஒருநாள் அவர், அவள் மடியிற் றலைவைத்துப் பிற்பகலில் நித்திரை செய்துகொண்டிருந்தார். அப்போது மாலைக்காலம் வந்தபடியால், அவரை, அவள் 'சந்தியாவந்தனம் தப்பிப்போகிறது' என்று எழுப்பினாள். "தூங்கிக்கொண்டிருந்த என்னை என் உத்தரவில்லாமல் எழுப்பின் நீ, எனக்குகந்த மனைவி யல்லை" என்று சொல்லிக்கொண்டே கோபமாய் அம் முனிவர் அவளைப் பிரிந்து அப்பால் அகன்றார். அன்று மாலையில் அவள் தன் தலைவனைப் பிரிந்ததனால் அன்றிரவெல்லாம் அவள் தனிமையிற் பட்ட பாடு பெரும் பாடாயிற்று. அவர் காலையிற் பிரிந்து போயிருந்தால் அவள் அவ்வளவு துன்பம் அனுபவித்திருக்கமாட்டாள். இதனால், சலர்க்கரைக்குப் பனி யரும்பிப் பைதல்கொண் மாலை, துனி யரும்பித் துன்பம் வளர வந்தது காண்க.

சலர்க்காரி, சலக்காரி, சலர்க்கரை மூன்றும் ஒரு தொடர்.

[உறுப்பு நலனழிதல்]

124. மங்கையுமை யோர்பங்கு வாங்கி மகிணன்பால்
இங்கித முற்றா ளிரங்கேசா!—செங்கை
முயக்கிடைத் தண்வளி போழப் பயப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மங்கை உமை - மங்கையர்க் கரசியாகிய உமையவள், மகிணன்பால் - தனது கணவராகிய சிவபிரானிடத்தில், ஓர் பங்கு வாங்கி -

(அவருடைய சரீரத்தில் ஒரு பங்காகிய) இடது பக்கத்தைத் தனக் குரிமையாகப் பெற்றுப் (பிரியாதிருந்து), இங்கிதம் உற்ருள் - இன்பம் அடைந்தாள்; (ஆகையால், இது) செம் கை முயக்கிடை - (நாயகன்) கைகளால் தன்னைத் தழுவினபோது, தண் வளி போழ - (அவன் கைகள் சிறிது நெகிழ்ந்ததனுல் இடையில்) குளிர் காற்று நுழைதலும், பயப்பு உற்ற (து) - (சரீரம்) பசலை பூத்து, பேதை கண் - நாயகியின் கண்கள், பெரு மழை (பொழிந்தன) - (கண்ணீரைப்) பெருமழைபோற் பெய்ததனுல் (வெள்ளம் ஆருய்ப் பெருகி ஒடிற்று) (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பிரிவாற்ருத தலைவியின் சரீரம் பசலை பூக்கக் கண்ணீர் சொரியும்.

(வி - ரை) சிவன், தன்னைப் பிரிந்தால் வருந்த நேரிடும் என் றெண்ணின பார்வதி தவஞ் செய்து, அவரை எக்காலத்தும் பிரியாது, அவர் சரீரத்தோடு சரீரமாய் ஒன்று கூடியிருக்க, அவருடைய சரீரத்தில் இடது பக்கத்தைத் தன் பங்காக வரம் பெற்று, அவரை யென்றும் பிரியா திருக்கின்ருள். இதனுல் 'முயக்கிடைத் தண்வளி போழப் பயப்புற்ற, பேதை பெருமழைக் கண்'' என்ப துணர்ந்த பார்வதி சிவனைப் பிரியா வரம் பெற்று, சிவன் சரீரத்திற் பாதியாய் இழைந்திருக்கின்றமை காண்க.

[நெஞ்சோடு கிளத்தல்]

**125.** முன்னமிர திக்கு மொழிந்த பதிதந்த
தின்னல மன்ருே விரங்கேசா!— துன்ன
நினைந்தொன்று சொல்வாயோ நெஞ்சே யெனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கு மருந்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, முன்னம் - (சிவன் நெற்றிக்கண்ணுல் மன்மதன் எரிந்துபோன)

போது, இரதிக்கு - (அவன் மனைவியாகிய) இரதி தேவிக்கு, மொழிந்த - (அவன் எழுப்பித் தரவேண்டுமென்று) கேட்ட, பதி தந்தது - கணவனாகிய (மன்மதனைச் சிவன்) எழுப்பிக் கொடுத்தது, இனிமை நலம் அன்றோ - மேலான நன்மை யல்லவோ? (ஆகையால், இது) நெஞ்சே - மனமே!, எவ்வம் நோய் தீர்க்கும் மருந்து எனைத்து ஒன்றும் - விரகவேதனை யைப் போக்கு மருந்து எதாவது ஒன்றை, நன்ன நினைந்து ஒன்று சொல்வாயோ - பொருந்த எண்ணி யெனக்கு ஒரு வார்த்தை சொல்லமாட்டாயோ? (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) பிரிந்த தலைவனைக் கூடு முபாயம் தலைவி மனதில், தானே தோன்றும்.

(வி - ரை) சிவபெருமான் வடவால விருக்ஷத்தின் கீழ்த் தக்ஷிணாமூர்த்தமாக எழுந்தருளினபோது, தேவர்கள் தூண்டுதலால், அவரை மயக்க, அவர்மேல் மன்மதன் தன் மலரம்பை எய்தான். உடனே சிவபிரான் தமது நெற்றிக்கண்ணால் அவனை எரித்துச் சாம்ப ராக்கினர். அதற்காக வருந்தின அவனுடைய மனைவியாகிய ரதிதேவி: பரமசிவனிடத்தில் வந்து, தன் குறை யிரந்து வேண்டிக் கணவனை உயிர்ப்பித்துக் கொண்டு போனாள். இதனால், கணவனை யிழந்த இரதி தன் நெஞ்சை நோக்கி, "நினைந்தொன்று சொல்வாயோ நெஞ்சே யெனைத் தொன்று, மெவ்வநோய் தீர்க்கு மருந்து" என்று கேட்டு வருந்தி, பிறகு "சிவனைக் கண்டு இரந்து வேண்டுவதே தன் கணவனை உயிருடன் பெறும் பெருமருந்து" என்று அந் நெஞ்சஞ் சொன்னபடி செய்து மன்மதனை உயிருடன் பெற்று மகிழ்ந்தமை காண்க.

[நிறை யழிதல்]

126. பின்னைக் கினியமொழி பேசிவென்ற மாயவன்போல்
என்னைத்தொண் டாளு மிரங்கேசா!—முன்னின்ற
பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

(ப - ரை) என்னை தொண்டு ஆளும் - என்னைத் தொண்டனாக ஆட்கொண்டருளும், இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, பின்னைக்கு - பின்னைப் பிராட்டியாகிய சத்தியபாமைக்கு, இனிய மொழி பேசி - வசீகரமான வார்த்தைகளைச் சொல்லி, வென்ற மாயவன்போல் - அவளைத் தன் வசப்படுத்தி, மற்றும் சில பெண்களைக் கூடி வாழ்ந்த கண்ணபிரானைப்போல, பல் மாயம் கள்வன் பணி மொழி அன்றோ - பல வஞ்சனைகளையுடைய கள்வனாகிய தலைவன் சொல்லும் வணக்கமும் இணக்கமுமான இத வார்த்தைக ளல்லவோ, நம் பெண்மை உடைக்கும் படை - நமது பெண்புத்தியைத் தகர்க்கும் ஆயுதம்?.

(க - ரை) நாயகன் இன் சொல்லால் நாயகி வசப்பட்டு நிறை யழிவாள்.

(வி - ரை) ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா எழு விடைகளைத் தழுவிப் பின்னைப் பிராட்டியாகிய சத்தியபாமாவை மணந்து, அவளிடத்திற் பணிமொழியாகிய இன்சொற் பேசி, அவளைத் தன் வசப்படுத்தி, மற்றும் சில பெண்களை மணந்து அவர்களோடு கூடி வாழ்ந்திருந்தார். இதனால், பன்மாயக் கள்வராகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் பணிமொழி, சத்தியபாமையின் பெண்மையை உடைக்கும் படையாயினமை காண்க.

இப் பாடலின் முன்னிரண்டடி மேலைப் பாடல்களிற் போலப் பின் னிரண்டடியாகிய குறள் வெண்பாவின் வேறாகி முடியாமல், அதனோடு சேர்ந்து முடிவது தெரிக.

[அவர்வயின் விதும்பல்]

**127.** வஞ்சி யுருக்குமணி மாமால் வருவழிபார்த்
தெஞ்சு முளம் போலு மிரங்கேசா!—பஞ்சணையிற்
கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகோ டேறுமென் னெஞ்சு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, வஞ்சி உருக்குமணி - (கொடிபோல் நடங்கும் இடையையுடைய) உருக்குமணியம்மை, மா மால் வரும் வழி பார்த்து - இலக்ஷ்மீ காந்தராகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வரும் வழியை எதிர் நோக்கிக்கொண்டிருந்து, உளம் எஞ்சும் போலும் - தன் மனவெழுச்சி குறைந்து வாடியிருந்தாள்போலும்!, (ஆகையால், இது) பஞ்சணையில் - பஞ்சமெத்தையின்மேல், கூடிய காமம் - கூடி யனுபவித்த சுகத்தை (மறந்து), பிரிந்தார் - பிரிந்து சென்ற தலைவருடைய, வரவு உள்ளி - வரவை எண்ணி, கோடு கோடு - (அவர் சென்ற ஊரிலிருந்து திரும்பிவரும்) வழிகள்தோறும், என் நெஞ்சு ஏறும் - என் மனமானது (நாடிச்)செல்லும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) கற்புடைய நாயகியின் உள்ளம் நாயகன் சென்ற தடங்களை நாடிச் செல்லும்.

(வி - ரை) ஸ்ரீ மகாலக்ஷ்மீயின் திருவவதார சொரூபியாகிய உருக்குமணியம்மை, தன் பிதா, தனக்குக் கலியாணங் குறித்த காலத்தில், தன் எண்ண மெல்லாம் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின்மேலேயே இலகித் திருந்தமையால், அவர்க்குத் தூதனுப்பி, அவர் வரும் வழிநோக்கி, நகரத்தின் புறத்துத் தவம் செய்துகொண்டிருந்து, தான் விரும்பிய கணவராகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வந்தபிறகு, தன் மனக் குறை நீங்கி அவரையே திருமணஞ் செய்து மகிழ்ந்தாள். இதனால், உருக்குமணி யம்மை,

தன்னைத் திருப்பாற்கடலாகிய பஞ்சணையிற் கூடியிருந்த தலைவரும், ஸ்ரீமன் நாராயண பரமாத்மாவின் திருவவதார சொரூபரு மாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, காமம் பிரிந்தாராய்த் தன்னை மறந்திருந்தும், அவரைத் தான் மறவாமல், அவருடைய வரவுள்ளிக் கோடுகோடேறு முள்ளத்தோடு அவரையே எதிர் நோக்கி யிருந்தமை காண்க.

கற்பியல் முடிந்தது.

---

## அன்பியல்

### [குறிப்பறிவுறுத்தல்]

128. செட்டிவள்ளி யம்மைச் சிறுமுறுவல் கண்டுளத்தின்
இட்ட மறிந்தா னிரங்கேசா!—மட்டார்
முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, செட்டி - சுப்பிரமணியக் கடவுள், வள்ளியம்மை சிறு முறுவல் கண்டு - வள்ளி நாச்சியாரின் புன்முறுவலைப் பார்த்து, உள்ளத்தின் இட்டம் அறிந்தார் - அவள் மனத்திலிருந்த இஷ்டத்தின் குறிப்பை அறிந்து (கலியாணஞ் செய்துகொண்டார். ஆகையால், இது), மட்டு ஆர் - தேன் பொருந்திய, முகை மொக்குள் - அரும்பினிடத்தில், நாற்றம் உள்ளதுபோல் - மணம் அடங்கி யிருத்தல்போல, பேதை நகை மொக்குள் - தலைவியின் புன் முறுவலிடத்து, உள்ளது ஒன்று உண்டு - அடங்கி இருப்பதாகிய (அன்பென்னும்) ஒரு பொருள் இருக்கிறது (என்பதை விளக்குகின்றது).

(ந - ரை) நாயகனைக் கண்ட நாயகிக்கு நாற்குணங்களு மடங்கித் தோன்றுஞ் சிறு நகை யொன்றுண்டு.

(வி - ரை) முருகக்கடவுள், தினைப்புனத்தில் வள்ளிநாச்சியாரைக் கண்டபோது, அவ் வம்மையாரிடத்தில் புன்முறுவலைக் கண்டு, அவருள்ளத்தை யறிந்து மணஞ் செய்துகொண்டார். இதனால், மட்டார் முகை மொக்கு ளுள்ளது நாற்றம்போல், பேதையாகிய ஸ்ரீ வள்ளிநாச்சியாருடைய நகை மொக்குள், முருகரை யணைக்கவேண்டு மென்னும் காதலாகிய ஒன்று இருந்தமை காண்க.

[புணர்ச்சி விதும்பல்]

129. காந்தன் றுகிலரிந்து கானத் தகன்றதன்மை
ஏந்தி மறந்தா ளிரங்கேசா!—காந்தி
எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, காந்தன் - (தன் கணவனாகிய) நளமகாராஜன், துகில் அரிந்து - (தனது ஆடையிற் பாதி) கிழித்துக்கொண்டு, கானத்து - காட்டில், (தன்னை ஒன்றியாய் விட்டு), அகன்ற தன்மை - நீங்கின விஷயத்தை, ஏந்தி - (அவனைக் கண்டபோது அவன்மேல்) அன்பைத் தாங்கி, மறந்தாள் - (தமயந்தி) மறந்துபோனாள்; (ஆகையால், இது) எழுதுங்கால் - (மடலெழுதுங்) காலத்து, கோல் காணாத கண்ணேபோல் - (ஓரவயவத்தை யெழுதி, அதைப் பார்க்கும்போது, பார்வை அதனிடத்திற் பற்றி, வேறவயவமெழுதத்) தூரியக் கோலைக் காணாத கண்ணைப்போல, கொண்கன் பழியை - (பிரிந்த தலைவனிடத்துள்ள குற்றத்தை, கண்ட இடத்து - (அவனை எதிரிற்) கண்டவிடத்து, காணேன் - காண்கின்றே னில்லை. (மறந்துவிடுகிறேன் என்பதை விளக்குகின்றது).

(க - ரை) நாயகனைக் கண்ட நாயகி அவன் குற்றத்தை மறந்து கூடுவாள்.

(வி - ரை) நளமகாராஜன் தன் காதலியாகிய தமயந்தியைக் கானகத்தில் அரையிரவிற் காரிருளில் ஒன்றியாய்க் கைவிட்டு, அவளாடையிற் பாதி அரிந்துகொண்டு, அப்பால் அகன்று அவளை அலையவிட்டான். அதனால் அவள் படாதபாடு பட்டுப் பாதவித்தாள். ஆயினும், பிறகு அவனை அவள் நேரிற் கண்டபோது, முன் அவனோடு கூடியிருந்த காதலின் முதிர்ச்சியால், 'அவனை எப்போது காண்பேம்' என்று எண்ணியிருந்த கற்புடையாளாகையால், அவன் செய்த குற்றங்களை அற மறந்து, கூடினாள். இதனால், எழுதுங்காற் கோல் காணாத கண்ணேபோல், கொண்கனாகிய நளமகாராஜனது பழியை அவனை நேரிற் கண்டவிடத்துத் தமயந்தி காணாது கூடினமை காண்க.

[நெஞ்சோடு புலத்தல்]

130. காங்கையர்மீ தாசை காவாம லம்பையுளம்
ஏங்கியெரி வீழ்ந்தா ளிரங்கேசா!—ஆங்கே
தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அம்பை - அம்பை யென்பவள், காங்கையர்மீது - காங்கேயராகிய வீட்டுமர்மேல், ஆசை காவாமல் - (தான் வைத்த) காதலை ஒளியாமல், ஏங்கி - (அவர் மறுத்தும், இவள் ஒரே பிடிவாதமா யிருந்து) வருந்தி, எரி வீழ்ந்தாள் - நெருப்பிற் குளித்து (இறந்தாள். ஆகையால், இது) என் நெஞ்சு - என் மனமானது, இருந்தது - (இந்த விடத்தில்) இருந்தது, தனியே இருந்து ஆங்கு - (நான் காதலரைப் பிரிந்து) ஒன்றியா யிருந்தபடி, நினைத்தக்கால் - (அவர் கொடுமைகளைத் தன்னோடு) நினைத்தபோது, என்னைத் தின்;

னிய - (அவ்வனவறிந்து) என்னைத் தின்பதற்காகவே (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) காதலால் மாதர் மனமுருகி உயிரை விடுவார்கள்.

(வி - ரை) காங்கேயரை, வீட்டுமர் (அதாவது) மனையறத்தை மறுத்தவர் என்றறியாமல், காசிராஜன் மகளாகிய அம்பை யென்பவள் அவர்மேற் காதலாய்த் தன்னை மணந்து மனைவியாக்கிக்கொள்ளும்படி வேண்டினாள். அதற்கவர் மறுத்துத் தாம் செய்திருக்கும் வீட்டுமத்தை விளங்க வுரைத்து, அவளுக்கு நன்மதி கூறி அனுப்பினார். அப்படி அவர் சொல்லியுங் கேளாமல், அவளும் அவரைப்போல ஒரே பிடிவாதமாய், பரசுராமரிடத்திற் சென்று முறையிட்டாள். அவர் வந்து சொல்லியும் வீட்டுமர் தம்நிலை தவறாமற் றடுத் துரைத்தார். அதுகண்ட அம்பை மனந் தாளாதவளாய்த் தான் காதலித்த கணவனை மணந்து வாழாமல், தணந்து தாழ்வதினும், உயிர் விடுவதே உத்தமமென்று தீக்குளித் திறந்தாள். இதனால், அம்பையின் நெஞ்சு அவளோடு இருந்தது, அவள் தனியே யிருந்தாங்கு, அதனோடு நினைத்தக்கால், அவனைத் தினிய (அவனைக் கொல்வதற்காகவே) என்பது விளங்குவது காண்க.

[புலவி]

131. அன்பர் திருநீல கண்ட ரணியிழைபால்
இன்பந் துறந்தார் இரங்கேசா!—முன்பாக
வடி யவரை யுணர்த்தாமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, அன்பர் திருநீலகண்டர் - சிவபக்தராகிய திருநீலகண்ட நாயனார் (தாம் பரத்தை வீட்டிற் றங்கினார் என்று, தம் மனைவியார் பிணங்கினதனால்) அணி இழைபால்-அழகிய ஆபரண மணிந்த அவ் வம்மையா

கிடத்தில், இன்பம் துறந்தார் - தாம் நுகரவேண்டிய சிற்றின் பத்தைக் கைவிட்டிருந்தார். (ஆகையால், இது) முன்பாக-முன்ன மே, வாடியவரை - நம்மோடு பிணங்கிய பரத்தையரை, உணர்த் தாமை-பிணக்க நீக்கி யிணக்கி,நீர் கூடாதொழிதல், வாடிய வள்ளி-நீர் பெறாமல் வாடிய கொடியை, முதல் அரிந்து அற்று - அடியி லே யறுத்தாற்போலும் (என்பதை விளக்குகின்றது).

(க-ரை) பிணங்கினாரைப் பிணக்க நீக்கி யிணக்கவேண்டும்.

(வி - ரை) "திருநீலகண்டநாயனார் ஒரு பரத்தை வீட்டிற் றங்கியிருந்தார்" என்று அவர் மனைவியார் பிணங்கினார்; அது கண்ட நாயனார் அவரை யிணக்க எத்தனையோ முயன்றும் பய னற்றதால், தாமும் "யாம் உம்மைத் தீண்டோம்" என்று சபதஞ் செய்து, அவர்மேற் பிணங்கினார். அப்படியே இருவரும் ஒரே நெறியாய் மூப்படையு மட்டும் ஒருவரையொருவர் தொடாமல் காலந் தள்ளிவிட்டார்கள். பிறகு, பரமசிவன் அவர்கள் நெறியை வியந்து வந்து, அவர்களுக்கு இளமையைத் தந்து ஊடலைப் போக் கிக் கூடலை யாக்கினார். இதனால், 'வாடியவரை உணர்த்தாமை, வாடிய, வள்ளி முதலரிந் தற்று.' என்பது விளக்கமாவது காண்க.

[புலவி நுணுக்கம்]

132. சேர்ந்துமணஞ் செய்யமறு சென்மமுனி பக்கல்வரும்
ஏந்திழையைப் போலு மிரங்கேசா!—வாய்ந்தும்மை
இம்மைப் பிறப்பிற் பிரியல னென்றேனைக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, மறு சென்மம் - அடுத்த பிறவியில், சேர்ந்து மணம் செய்ய - (முன் பிறப்பில் தனக்குக் கணவராயிருந்த முனிவரையே மறுபடியுங்) கூடிக் கலியாணஞ் செய்துகொள்ள, முனி பக்கல் வரும் - அம்

முனிவரருகில் வந்து (தன்னைக் கலியாணஞ் செய்துகொள்ளும் படி கேட்ட), ஏந்திழையைப்போலும் - ஏந்திய ஆபரண மணிந்த நளாயினியென்னுங் கற்புடையாளைப்போல, வாய்ந்து உம்மை - (நான் என் தலைவியைநோக்கி) ஏ மாதரீர்! உம்மை, என் காதலியாராகக் கிடைக்கப்பெற்ற யான், இம்மை பிறப்பில் பிரியலன் என்றேன் ஆ - "இந்தப் பிறவியிலே பிரியேன்" என்றவுடனே, (தலைவி ஆசை மிகுதியால், மறுபிறப்பி லிவர் பிரிவாரென் றெண்ணி) கண் நிறை நீர் கொண்டனள் - தன் கண்களினின்றும் நிறைந்த நீரைப் பெருக்கினள்" என்று தலைவன் சொன்னான், என்பது பொருந்தியிருக்கின்றது.

(க - ரை) தலைவன், தன்னை எம்மையிலும் பிரியத் தலைவியிணங்காள்.

(வி - ரை) நளாயினியென்னும் இராஜகன்னிகை, முனிவரொருவரை மணந்து கற்புக்கரசியாய் அநேகநாள் அவரோடு கூடி வாழ்ந்திருந் திறந்து, மறுசனன மெடுத்து, அப்போதும் 'அவரையே மணக்கவேண்டும்' என்று விரும்பி, அவரிடத்தில் வந்து, தன் எண்ணத்தைத் தெரிவித்தாள். அதற்கவர் உடன்படாமையால், அவள் பரமசிவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தாள். சிவபிரான் காட்சி கொடுத்து, "உனக்கு என்ன வேண்டும்?" என்று அவளைக் கேட்டதற்கு, அவள், 'பதிந்தேகி - கணவனைக் கொடும்" என்று ஐந்து முறை விடாது கூறினாள். ஆகையால், அப்போதவள் இறந்து, பின்பு திரௌபதியாய்ப் பிறந்து, பாண்டவர் ஐவரையும் தன் கணவராகப் பெற்றுக் கற்புடையவளாய் வாழ்ந்தாள். இதனால், 'இம்மைப் பிறப்பிற் பிரியல னென்றேனாக், கண்ணிறை நீர்கொண் டனள்.' என்னுங் குறளிற் குறித்த புலவி நுணுக்கம் நளாயினியிடத் திருந்தமை காண்க.

[ஊடலுவகை]

133. சத்திபபா மாவூடல் தணிப்பக் கற்பகத்தை
இத்தலத்திற் றந்தா னிரங்கேசா!—சித்தசற்கும்
ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.

(ப - ரை) இரங்கேசா - திருவரங்கநாதக் கடவுளே!, சத்திய பாமா ஊடல் தணிப்ப - சத்தியபாமையின் பிணக்கைத் தீர்க்கும் பொருட்டு, கற்பகத்தை - கற்பக விருக்ஷத்தை, இ தலத்தில் தந்தான் - (கண்ணபிரான்) இந்தப் பூலோகத்தில் கொண்டுவந்து வைத்தார்; (ஆகையால், இது) சித்தசற்கும் - மன்மதனுக்கும், ஊடுதல் - பிணங்குதல், காமத்திற்கு - (தலைவனுந் தலைவியு மாகிய இருவருங் கொண்ட) காதலுக்கு, இன்பம் - இன்பமாகும்; அதற்கு - அவ் வூடலுக்கு, கூடி முயங்க பெறின் - அவ் வூடல் தீர்ந்து, பின்னுந் தலைவன் தலைவியர் இருவரும் கூடித் தழுவப் பெறுவாராயின், இன்பம் - (அதுவே) இன்பமாகும் (என்பதை விளக்குகின்றது).

(க - ரை) ஊடுதல் காமத்திற்கும், பிறகு கூடுதல் அவ் வூடலுக்கும் இன்பங்களாம்.

(வி - ரை) ஸ்ரீ கிருஷ்ண பாமாத்மாவுக்கு நாரதமுனிவர் தேவலோகத்துப் பாரிசாத மலர் ஒன்று கொண்டுவந்து கொடுத்துக் கண்டு வணங்கி வாழ்த்தினார். அதை அவர் உருக்குமணி யம்மையின் அந்தப்புரத்துக்கு அனுப்பிவிட்டார். நாரதர், கலகப் பிரியர் ஆகையால், அதை அதோடு விடாமல், சத்தியபாமை யிடத்திற் சென்று பற்றவைத்தார். 'உனக்குத் தருவாரென்று நான் கொண்டுவந்து கொடுத்த மலரைக் கண்ணபிரான்,

தமக்கு அதிக அன்புள்ள மனைவிக்கு அனுப்பிவிட்டார்'' என்று கலகம் பண்ணிப் போய்விட்டார். அதற்காகச் சத்தியபாமை கண்ணபிரானிடத்திற் பேசாமல் ஊடினாள். உடனே அவர், தெய்வலோகஞ் சென்று கற்பகவிருக்ஷ (பாரிசாத விருக்ஷத்) தையே அடியோடு பேர்த்துக் கொண்டுவந்து, சத்தியபாமா வின் சிங்கார வனத்தில் வைத்துப் பயிராக்கினார். அதுகண்ட சத்தியபாமை, ஊடல் தீர்ந்து கூடினாள். இருவரும் இன்புற் றிருந்தார்கள். இதனால், கண்ணபிராற்கும், சத்தியபாமையின் ஊடல், காமத்திற் கின்பமா யிருந்ததனால், அவர், தேவலோகத் தருவைப் பூலோகத்துக்குக் கொணர்ந்து அவ் ஊடலைத் தணித் துப் பிறகு அவ் ஊடலுக் கின்பமாகிய கூடலை யுற்று வாழ்ந்த மை காண்க.

---

அன்பியல் முற்றிற்று.

---

காமத்துப்பால் முடிந்தது.

---

இரங்கேசவெண்பா என வழங்கும்

நீதி சூடாமணி மூலமும் உரையும்

முற்றுப் பெற்றன.

---

FIRST EDITION] 1927 [1000 COPIES

